# கம்சன் கதைப்பாடல்

டாக்டர் ஆ. தசரதன்



தமிழ் ஓலைச்சுவடிகள்
பாதுகாப்பு மையம்

# கம்சன் கதைப்பாடல்


பதிப்பாசிரியர்

டாக்டர் ஆ. தசரதன்





தமிழ் ஓலைச்சுவடிகள் பாதுகாப்பு மையம்

4/130 A, களத்துமேட்டுத் தெரு. கொட்டிவாக்கம்

சென்னை - 600 041

| | | |
|---|---|---|
| Title | : | **Kamcaṉ Kataippāṭal** (The Story of Kamsa in Palm-leaf ballad) |
| Editor | : | Dr. A Thasarathaṉ M.A., Ph.D, Dip. in Ling. |



| | | |
|---|---|---|
| First edition | : | December 1995 |
| Size | ; | Demy Octavo |
| Pages | : | X + 130 |
| Publication No | : | 6 |
| Price | : | Rs.35/- |
| Typesetted by | : | Aksara, 303/3 III Floor, Commerce Centre, Teynampet, Madras 600 018, Phone 600 014 |
| Printed at | : | Pavai Printers (P) Ltd. 142, J.J. Khan Road, Madras 600014 |

Copies can be had from:

**Centre for Preservation of Tamil Palm-leaf Manuscripts**
4/130A, Kalathumettu Theru,
Kottivakkam,
Thiruvanmiyur Post,
Madras - 600 041.

# பொருளடக்கம்

# பதிப்புரை

### தென்பாண்டி நாட்டில் சிறு தெய்வ வழிபாடு

தமிழகத்தின் தென்பகுதியைத் தென்பாண்டி நாடு என்பர். அப்பகுதியில் பல கோயில்கள் உள்ளன. பெரும்பாலான கோயில்களில் 'வில்லுப்பாட்டு' பாடப் பெறுகின்றது. இப்பகுதியில் அம்மன் கோயில்கள் மிகுந்தும், ஆண் காவல் தெய்வங்களின் கோயில்கள் அதற்கடுத்த நிலையிலும் காணப்படுகின்றன. நாட்டுப்புற சிறுதெய்வங்கள் என்ற அடிப்படையில் இத் தெய்வங்களுக்குக் கொடை விழாக்கள் நடைபெறும். இக்கொடை விழாக்களிலேயே வில்லுபபாட்டுகளும் பாடப்பெறும்.

### அம்மன் தெய்வங்கள் பற்றிய வில்லுப்பாட்டுகள்

சக்தி எனும் பார்வதியின் அமிசமாகவோ, அவள் காரணமாகவோ பிறவி எடுத்ததாக அனைத்து அம்மன் தெய்வங்களும் கதைப்பாடல்களிலும் வில்லுப் பாடல்களிலும் சித்திரிக்கப் பெற்றுள்ளனர். சான்றாக, பத்திரகாளி அம்மன் வில்லுப்பாட்டு, முத்தாரம்மன் வில்லுப்பாட்டு, முப்புராதி அம்மன் வில்லுப்பாட்டு, இசக்கி அல்லது நீலி அம்மன் வில்லுப்பாட்டு, மாரி அம்மன் வில்லுப்பாட்டு, பிரமசக்தி அம்மன் வில்லுப்பாட்டு, உச்சினி மாகாளி அம்மன வில்லுப் பாட்டு போன்றவை அவ்வக் கோயில்களின் தலவரலாறுகளாக அமைந்து அவ்வத் தெய்வங்களை வில்லுப்பாட்டிசையில் புகழ்த்திப் பாடுகின்றன. இத்தெய்வங்கள் கைலாயத்தில் தோற்றம் பெற்று, தென்னாட்டின் தென்பகுதிகளில் பலிகளை ஏற்றுக் கோயில் கொண்டதாக கதைப் பாடல்கள் மூலமும் வில்லுப்பாடல்கள் மூலமும் அறிகின்றோம்.

### ஆண் காவல் தெய்வங்கள் பற்றிய வில்லுப்பாடல்கள்

காவல் தெய்வங்களில் அய்யனார் முதன்மையான நாட்டுப் புறத் தெய்வமாகக் காட்சி அளிக்கின்றார். அய்யனார் கோயிலிலும், பிற கோயில்களிலும் அய்யனார் கதை வில்லில் பாடிய பின்னரே அவ்வவ் தெய்வங்களைப் பாடுதல் மரபாகச் சில ஊர்களில் கடைப்பிடிக்கப் பெற்று வருகின்றது. மாடதேவதைகள், மற்றும் கருப்பசாமி, பைரவர், செங்கிடாய்க்

கார சுவாமி எனும் காவல் தெய்வங்களைப் பற்றியும் வில்லுப் பாட்டுகள் பாடப் பெற்று வருகின்றன.

மாடதேவதை சிவபெருமானின் அமிசமாகவோ அவரால் வேள்வியில் உருவம் பெற்ற காவல் தெய்வமாகவோ சித்திரிக்கப் பெற்றுள்ளதைக் கதைப்பாடல்கள் வழி அறிகின்றோம். செங்கிடாய்க்காரனும், பைரவரும் இவ்வாறே சிவன் தொடர்புடையவர்களாக உள்ளனர். 'கருப்பசாமி திருமால் தொடர்புடையவர். திருமாலவதாரமான கண்ணன் கருப்பு நிறமுடையவர்; இராமபிரானின் மகனை யொத்த 'லவன்' என்பவரும் தீயில் எரிந்து கருப்பு நிறமுடையவர் இதனால் இவர்கள், 'கருப்பண்ணசாமி', 'கருப்பசாமி எனப் போற்றப்படுகின்றனர்.

காவல் தெய்வங்களில் வரலாற்று நாயகர்களும், சமூகத் தலைவர்களும் அடங்குவர். இவர்கள் கொடூரமான முறையில் கொலையுண்டபின் தெய்வங்களாக வரம்பெற்றுப் பலி பெற்றுக் கோயில் கொண்டனர். சின்னத்தம்பி, முததுப்பட்டன், சேர்வைக்காரன், குறுக்களாஞ்சி போன்ற தெய்வங்கள் இதற்குச் சான்றுகளாம் இவர்களின் வரலாறுகளை உணர்த்தும் பல கதைப்பாடல்கள் வில்லுப் பாடல்களாகத் தோற்றம் பெற்றுப் பாடப் பெற்று வருகின்றன. இக்கதைகள் பெரும்பாலும் ஓலைச் சுவடிகளிலும் எழுதி வைக்கப் பெற்றுள்ளன.

## சிவன் முருகன், திருமால் கோயில்கள்

சக்தியும் சிவனும் இணைந்தே பல கதைகளில் வருவது இயல்பு. எனவே சக்தியின் அமிசமான அம்மன் தெய்வங்களின் கோயில்களிலும் சிவ பராக்கிரமச் செயல்களைக் குறித்த கதைகள் வில்லுப்பாட்டுகளாகப் பாடப் பெறுகின்றன. சிவனின் திருவிளையாடல்கள் சில இவ்வாறு கதைப்பாடல்களாக ஆக்கம் பெற்றுள்ளன. வலை வீசிய கதை அல்லது பார்வதி அம்மன் கதை, சிறுத்தொண்ட பக்தன் கதை, தக்கன் யாகத்தை அழித்த கதை, திரிபுர தகனக் கதை, மார்க்கண்டேயனுக்காகக் காலனை உதைத்த எமன்கதை போன்றன இதற்குச் சானறுகளாகும்.

சூரனைக் கொல்ல முருகன் பிறவி எடுத்த கதை, முருகன் தெய்வயானையை மணந்த கதை, வள்ளி-முருகன் கல்யாணம் போன்ற கந்தன் மீது கட்டபெற்ற வில்லுப்பாடல்கள் பல கோயில்களில் பாடப்பெற்று வருகின்றன.

சிவனும் திருமாலும் இணைந்து நிற்கும் சைவ-வைணவ ஒருமைப்பாட்டுணர்ச்சிக்குச் சிறந்த எடுத்துக்காட்டாகத் திகழும் அய்யனார் (ஐயப்பன்) வழிபாடு தொடர்பான கதைகள் 'வல்லரக்கன் கதை', 'மோகினி கதை' 'ஐயப்பன் கதை' என வில்லில் உருவாக்கம் பெற்றுள்ளன. சிவன் தொடர்பில்லாமல் திருமால் வழிபாட்டை உணர்த்த வல்ல வில்லுப் பாட்டுக் கதைகளும் மிகுதியாக உள்ளன.

### தென்னாட்டில் திருமால் வழிபாடு

திருமால் வழிபாட்டைத் தென்பகுதிகளில் அல்லது திருவிதாங்கூர் ஆட்சியின் கீழிருந்த அல்லது அதை ஒட்டியிருந்த பகுதிகளில் ஊக்கப் படுத்த வேண்டும் எனும் நோக்கத்தில் பல கிருஷ்ணன் கோயில்கள் ஏற்படுத்தப் பெற்றன. சாமிதோப்பு நாராயணசாமி அல்லது முத்துக்குட்டி சாமியாரின் ஏற்றத்தின்பின்பு கிருஷ்ணன் வழிபாடு மேலும் மேன்மையுற்றது. அதன் காரணமாகக் கிருஷ்ணன் கோயில்கள் நாட்டுப் புறங்களில் பெருவாரியாகக் கட்டப் பெற்றன. கிருஷ்ணன் வடிவில் திருமால் நாட்டுப்புற மக்களால் வழிபடப் பெற்றுவந்தார் இதற்குச் சான்றுகளாக கிருஷ்ணன் மீது கட்டப் பெற்ற பல வில்லுப்பாட்டுக் கதைகள் அமைகின்றன எனில் அது மிகையாகாது. சான்றாக ஸ்ரீபத்மநாபசுவாமியின் கதையைக் கூறலாம்.

### திருமாலவதாரங்களில் கிருஷ்ணாவதாரம்

திருமாலவதாரங்களில் கிருஷ்ணாவதாரத்தில் மட்டுமே கிருஷ்ணன் பல வீர தீரச் செயல்களையும், விநோத லீலைகளையும் செய்துள்ளான் எனப் பாகவதத்திலிருந்தும், மகாபாரதத்திலிருந்தும் தெரிந்து கொள்ள முடிகிறது. இச்செயல்களில் பல மக்களின் மனத்தில் நன்கு நிலைபெற்றுவிட்டன. வில்லுப் பாட்டாளிகளும் தங்கள் அறிவுக்கேற்பவும், கல்விப் பயிற்சிக்கேற்பவும், கற்பனைத் திறனுக்கேற்பவும், வில்லிசையில் கிருஷ்ணன்கதைகளைப் பாட்டாக இயற்றிப் பாடி மக்களிடம் பரவசத்தையும் பக்தியையும் வளர்த்து வருகின்றனர். சானறாக, கிருஷ்ணன் தூது, பாமா கல்யாணம், ருக்மிணி கல்யாணம், கம்ச வதை, கிருஷ்ண விலாசம், போன்றவற்றை வில்லுப்பாட்டுகளாகப் பாடியிருப்பதைக் காட்ட முடியும். இவற்றின் தலைப்புகள் தலைமைப் பாத்திரங்களின் பெயர்களிலே அமையும். ஆனால் கம்சன் கதை வில்பாட்டு எதிர்பாத்திரத்தின் பெயரில் அமைந்துள்ளது.

## கம்சன் கதை வில்லுப்பாட்டு

கிருஷ்ணாவதாரததில், இளமையில் கண்ணன் தன் மாமனான கம்சனைக் கொன்ற கதை நிகழ்ச்சியைக் 'கம்சன் வில்லுப்பாட்டுக் கதை' என்றும், 'கஞ்சராஜன் வில்பாட்டு' என்றும், 'கஞ்சன் செயலினை அழித்த கதை' என்றும் வில்லுப்பாட்டாளிகள் கவிதையாக்கிப் பாடி, பின் ஓலைச் சுவடிகளிலும் எழுதி வைத்துள்ளனர். எதிர் பாத்திரமான 'கம்சன்' பெயரை இக்கதைப் பாட்டு பெற்றிருப்பதற்கேற்ப கம்சனைச் சிறப்பாக வில்லுப்பாட்டாளி சித்திரிக்கின்றார். முதலில் நல்லவனாகக் காட்டப் பெறும் கம்சன், நாளாக நாளாகக் கொடுமைக் காரனாகக் காட்டப் பெற்று இறுதியில் கொல்லப் படுகிறான். கிருஷ்ணாவதாரத்தின் மகிமையை உணர்த்த மீதிப் பகுதி கண்ணன் கன்றுகாலி மேய்க்கச் செல்லுதல், ஆயர் பெண்களுடன் வினோத லீலை நடத்துதல், பின்பு அவர்களை மணந்து மகிழ்தல் எனச் சித்திரிக்கப் பெற்றுள்ளது. அதற்கேற்ப 'அரியோன்கதை' எனும் தலைப்பும் இதற்கு உள்ளது.

கண்ணபிரானின் இளமைக் காலத்தில் நடைபெற்ற கதையைச் சற்று மாற்றி, நாட்டுப்புற மக்களுக்கேற்றவகையில் அதிகமாகக் கதைச் சிக்கல்கள் இல்லாமலும், கிளைக் கதைகள் இல்லாமலும், தேவையில்லாத பாத்திரப் படைப்புகளைத் தவிர்த்தும் தனியொரு வில்லுப் பாட்டு இலக்கியமாக ஆக்கியுள்ள வில்லுப் பாட்டாளியின் திறமை பாராட்டிற்குரியது. இந்த வில்லுப் பாட்டானது கிருஷ்ணன் கோயில்களில் பெரும்பாலும் வில்லிசையில் பாடப் பெற்றுள்ளது. பின்பு இக்கதை ஓலைச் சுவடிகளிலும் எழுதி வைக்கப் பெற்றுள்ளது. இக் கதைப்பாட்டு ஓலைச்சுவடிகள் தென் மாவட்டங்களில் குறிப்பாகக் குமரி மாவட்டத்திலும். வ.உ.சி மாவட்டத்திலும் கிடைத்து வருகின்றன.

## கம்சன் வில்லுப் பாட்டு ஓலைச் சுவடி வரலாறு

**18** ஆம் நூற்றாண்டில், திருவிதாங்கூர் ஆட்சியின் கீழ் நெல்லைச் சீமையின் தென்கீழ்ப்பகுதி இருந்தது. திருவிதாங்கூர் மன்னர்கள் கிருஷ்ணன் வழிபாட்டை ஊக்கப் படுத்தினர். பல கோயில்களும் பல குடியிருப்புகளும் கிருஷ்ணாவதாரத்தின் அடிப்படையில் இப்பகுதிகளில் எழுந்துள்ளன. இக்கோயில்களில் நடைபெறும் விழாக்களின் போது பாடப் பெற்றுவந்த பல வில்லுப் பாட்டுக் கதைகளில் இங்குப் பதிப்பிலுள்ள கம்சன் கதைப் பாடலும் ஒன்று. இதன் ஓலைச் சுவடி வரலாறு வருமாறு:

கம்சன் வில்லுப்பாட்டு **ஓலைச்சுவடி**, வ.உ.சி. மாவட்டம், திருச்செந்தூர் வட்டம், தளவாய்புரத்தை அடுத்த பள்ளத்தூர் பெ.

பூவலிங்கம் நாடார்* அவர்களால் பாதுகாக்கப் பெற்று வந்தது. 16.8.1989ஆண்டு இந்த ஓலைச்சுவடியை நானும் எனது அத்தான் காயாமொழி அ. அசோக் ஆதித்தன் அவர்களும் பெ. பூவலிங்கம் நாடாரிடமிருந்து பெற்று வந்தோம்.

நாங்கள் ஓலைச்சுவடிகள் தேடிச் சென்ற போது பூவலிங்கம் நாடார் அவர்கள் தம் வில்லைப் பழுதுபார்த்துக் கொண்டிருந்தார். அவர் முன்பு வேறொரு வில்லுப்பாட்டுக் குழுவினருடனிருந்து பணியாற்றிவிட்டு இப்போது தாமே அண்ணாவியாகச் செயலபட்டு வருவதாகவும், அத்துடன் தன் மகளையும் வில்லுப் பாடகியாக்கி வருவதாகவும் எங்களிடம் கூறினார். பல கதைப் பாட்டுகள் எழுதி வைத்திருந்த தாள்களையும் எங்களுக்குக் காட்டினார். கம்சன் கதை வில்லுப் பாட்டு ஓலைச்சுவடி ஒன்று மட்டுமே தம்மிடம் இருப்பதாகக் கூறி அதை எங்களுக்கு அளித்தார். அச் சுவடி இப்போது பதிப்பாகி வெளியாகின்றது.

கம்சன் கதைப்பாடல் ஓலைச் சுவடி 42 × 4 செ.மீ அளவு கொண்டது. 49 ஓலைகள் உள்ளன. நான்காவது ஓலை ஒரு துண்டு ஓலையாக 20 செ. நீளம் மட்டும் பெற்றுள்ளது. ஓலைகளின் ஒவ்வொரு பக்கத்திலும் 7 வரிகள் இடம் பெறுவதாய் இரு பகுதிகளாகப் பிரித்து, எழுதப் பெற்றுள்ளது. முதல் ஓலை 'தலைப்பு' இடம்பெறும் ஓலையாகும். இதன் இடது ஓரத்தில்,

'கஞ்சறாசன்
(வில்பாட்டு)'

என எழுதப் பெற்றுள்ளனது. இந்த ஓலையின் பின்புறத்தில்,

"கஞ்சறாசன் வில்ப்பாட்டு
ஊர் வன்னிமாநகறம்
ப.சு. மாசான மூத்து நாடார்
யிந்த ஏடு யெளுதினேன்"

என இடம் பெறும் குறிப்பு (Colophon) உள்ளது. இக்குறிப்பிலிருந்து கம்சன் கதை வில்லுப்பாட்டை மாசான முத்து நாடார் பிரதி செய்துள்ளார் என அறிந்து கொள்ளலாம். தென் பாண்டி நாட்டில், பாமரக் கலைஞர்கள் பெரும்பாலும் ழ/ளகர, ற/ர வேற்றுமையின்றி எழுதுவர், பேசுவராதலின் மேலேயுள்ள பகுதியில் சில பிழைகளிருப்பதைக் காணலாம். இதைப் போன்றே பாட்டு முழுவதிலும் இடம் பெற்றிருந்ததை இப்பதிப்புநூலில் மாற்றிச் செம்மைப் படுத்தியுள்ளோம்.

'அரி ஓம் அரி துணை' எனத் தொடங்கும் முதல் ஓலையில், 'முந்தம்பரத்தி எனத் தொடக்கம் பெறும் விருத்தம் இடம் பெற்றுள்ளது. இந்த ஓலையின் பின்புறத்தில் 'நாடிய பொருள் கை கூடும்...' எனும் கம்பராமாயணத் தனிப்பாடலும், அதனைத் தொடர்ந்து 'எட்கட்டு வாங்கலும் ஏகப் பெருங்கடலையும் மட்டிட்டு பார்ப்பாருக்கு வகையில்லையே', 'வெள்ளைக் கலை உடுத்தி வெள்ளைப் பணி பூண்டு வெள்ளைக் கமலத்தில் வீற்றிருப்பாய் வெள்ளை அரிவாசனத்தில் சரியாக வைத்ததாயே' எனும் வரிகள் எழுதப் பெற்றுள்ளன.

எழுத்தின் அமைப்பைப் பார்க்கும் போது இந்தச் சுவடி மிக அண்மையில் பிரதி செய்யப் பெற்றிருக்கவேண்டும் எனத் தெரிகிறது. அதற்கேற்ப ஒற்றெழுத்துக்களில் 'குத்து' இடம்பெற்றுள்ளது.

## நன்றியுரை

தமிழ் இலக்கியங்களில் ஈடுபாடும், தமிழ்க் கலைகளிலும், பண்பாட்டிலும் விருப்பமும் கொண்டு 'தமிழ் ஓலைச் சுவடிகள் பாதுகாப்பு மையத்தைக் காத்துவரும் பெருமதிப்பிற்குரிய ஐயா பா. இராமச்சந்திர ஆதித்தனார் பி.எஸ்சி. அவர்களுக்கு மிக்க நன்றி. ஐயா அவர்கள் இந்த நூலுக்குச் சிறந்த வாழ்த்துரையும் நல்கிச் சிறப்பித்துள்ளார்கள். அதற்கு நான் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

'கம்சன் கதை வில்பாட்டு' ஓலைச் சுவடியைத் தந்துதவிய பெ. பூவலிங்கம் நாடார் அவர்களுக்கும், அதற்கு உதவி புரிந்த திரு. அ. அசோக் ஆதித்தன் அவர்களுக்கும் மிக்க நன்றி.

இந்நூலில் சிறந்த ஆய்வு முன்னுரையையும், குறிப்புரையையும் எழுதித் தந்த டாக்டர் அ. முத்து முனியம்மாள் அவர்களுக்கும், சொல்லகராதி, பெயரகராதிகளைத் தொகுத்துத் தந்த க. தேரியப்பன் எம்.ஏ., எம்.பில் அவர்களுக்கும் நன்றி.

இந்நூலைக் கணிப்பொறியில் அச்சுக் கோர்த்துத் தந்த அக்ஷரா நிறுவனத்தாருக்கும், அச்சடித்துத் தந்த பாவை பிரிண்டர்ஸ் அச்சகத்தார்க்கும் நன்றி.

சென்னை -41

இப்படிக்கு
ஆ. தசரதன்

# முன்னுரை

வேதங்கள் தோன்றிய காலத்தையோ, சூழலையோ அறிந்து கொள்ள முடியாத நிலை இருப்பதால்தான் அவற்றில் புரியாத தன்மை மிகுந்து காணப்படுகிறது. இதிகாசங்களும் புராணங்களும் மக்களின் வாழ்க்கையில் நடக்கும் நிகழ்ச்சிகளையும் அனுபவங்களையும் இறைமையுடனும் வேதம் கூறும் கருத்துக்களுடனும் இணைத்து, மக்களின் மனத்தில் நெருங்கிய உணர்வைத் தோற்றுவித்தன. மக்களின் வாழ்வில் இரண்டறக் கலந்ததாலும் ஒத்த தன்மைகள் நிறைந்து காணப்பட்டதாலும் இவை மக்களின் மத்தியில் விரைந்து பரவ ஆரம்பித்தன.

வேதவியாசர் தொகுத்த பதினெண் புராணங்களும் அவர் படைத்த மகாபாரதமும் மக்களுக்கும், அவர்தம் உணர்வுகளுக்கும் நெருக்கமாய் அமைந்தன. அவை வேதங்கள் போலன்றி மக்களுக்கு அன்புடன் அறிவுரை கூறுவனவாக இருந்தன. இவை எல்லாக் காலத்திற்கும் எல்லாச் சூழலுக்கும் பொருத்தமாக உள்ளன.

மகாபாரதத்திலும் பதினெண் புராணங்கள் சிலவற்றிலும், வைணவக் கடவுளான திருமால் குறித்த கதைகளும், செய்திகளும் மிகுந்த அளவில் காணப்படுகின்றன. குறிப்பாகப் பாகவத புராணத்தில் திருமால் பலவிதமான அவதாரங்கள் எடுத்து, பல்வேறுபட்ட தீயசக்திகளையும் அழித்து, மக்களின் இடர்களை நீக்கிய செய்திகள் விரிவாகப் பேசப்பட்டுள்ளன.

திருமால் அவதாரங்களாவன 1. மச்சாவதாரம்; 2. கூர்ம அவதாரம்; 3. வராக அவதாரம்; 4. நரசிம்ம அவதாரம்; 5. வாமன அவதாரம்; 6. பரசுராம அவதாரம்; 7. இராமாவதாரம்; 8. பலராம அவதாரம்; 9. கிருஷ்ணாவதாரம்; 10. கலியுக முடிவில் குதிரை முகமாகத் தோற்றமளிக்கும் கல்கி அவதாரம்; இவையன்றியும் மோகினி அவதாரம், நரநாராயணன், தன்வந்திரி, பௌத்தன் போன்ற அவதாரங்களும் எடுத்து மக்களின் துன்பம் குறைத்தவர் என்றும் வழங்கப்படுகிறது.

**கிருஷ்ணாவதாரம்**

திருமால் அவதாரங்களிலேயே மிக நெடியதும், பல்வேறுபட்ட கதைகளையும், நிகழ்ச்சிகளையும் கொண்டதாகக் கிருஷ்ணாவதாரம் அமைந்துள்ளது. திருமால் கண்ணனாக (கிருஷ்ணன்) அவதாரம் எடுத்து அவர் புரிந்த செயல்களையும், தீயசக்திகளை அவர் ஒடுக்கிய விதத்தையும் பாண்டவர்களுக்கு உதவியதையும் பிறவற்றையும் கிருஷ்ணாவதாரம் விரித்து விளக்குகின்றது. கிருஷ்ணன் கதையைச் சொல்லும் போக்கிலேயே பலவிதமான தத்துவங்களையும் கடைப்பிடிக்க வேண்டிய தர்மங்களையும் விவரிக்கின்றது.

வைணவப் புராணங்களின் மிகுதி காரணமாகவும், அவை மக்களிடம் பரந்த அளவில் பரவியதன் காரணமாகவும் நம்நாட்டில் திருமாலவதாரச் செய்திகள் பட்டிதொட்டி எங்கும் பரவிக் கிடக்கின்றன. வைணவக் கொள்கைகளும், கோட்பாடுகளும், இராமன், கிருஷ்ணன் போன்ற மன்னர்களின் வரலாறுகளும் கலைஞர்களால் வெகு துலக்கமாக விளக்கப்பட்டன. இவை மக்களுக்கு நெருக்கமானதும் அறிமுகமானதுமான கலைவடிவங்கள் பலவற்றின் மூலம் அவர்களை அணுகின. படிப்பறிவில்லாத பாமர மக்களிடையே இக்கதைகள் பற்றிய பல்வேறு விதமான இலக்கிய வெளிப்பாடுகளும் கேட்டறிதலும் காணப்படுகின்றன. மேடை நாடகம், கும்மி, தெருக்கூத்து, வில்லுப்பாட்டு, லாவணி, சிந்து போன்ற கலைவடிவங்கள் மூலம் திருமால் கதைகள் மக்களிடையே பரவின. பெரும்பாலும் பாமரக் கலைஞர்களே இக்கலைவடிவங்களைப் படைத்துப் பரப்புவதில் பங்கு கொண்டனர்.

கிருஷ்ணாவதாரத்தில் கண்ணன் புரிந்த லீலைகளும், நிகழ்ச்சிகளும் தனித்தனியாகவும், மொத்தமாகவும் பாமரக் கலைஞர்களால் படைக்கப்பட்டுள்ளன. அவற்றுள் கண்ணனின் இளம்பருவத்தில் நடந்த நிகழ்ச்சிகளில் ஒன்று கம்சவதையாகும். இந்நிகழ்ச்சி தனியொரு இலக்கிய வடிவமாகப் பாமரக் கலைஞர்களால் படைக்கப்பட்டு வெளியிடப் பெற்றுள்ளது. அவற்றுள் ஒன்றாகக் கம்சன் வில்லுப்பாட்டுக்கதை அமைந்துள்ளது.

இக்கதை ஓலைச்சுவடிகளிலும் எழுதிவைக்கப்பெற்றுள்ளது. கம்சன் கதை அனைவராலும் அறியப்பட்ட ஒன்று. எனினும் அதனை மிகுந்த ஆர்வத்துடனும் தொய்வேதும் தராத உற்சாகத்துடனும் விவரிக்க

வில்லுப்பாட்டுக் கலைவடிவம் பெரிதும் உதவியிருக்கின்றது. இக்கதை விழாக் காலங்களிலும், பிற சமூகச் சடங்குகளிலும் மக்களின் முன் நிகழ்த்தப்பட்டிருக்கிறது. இக்கதை மக்களால் வரவேற்கப்பட்டிருந்த காரணத்தால்தான் இன்று நம்மிடையே கம்சன் கதை பாடும் பழக்கமும், அக்கதை இடம்பெறும் ஓலைச்சுவடிகளும் மிகுந்து காணப்படுகின்றன.

**இதிகாச புராணங்களின் வழி கம்சன் கதை**

தேவர்களுடன் போரிட்டுத் தோற்ற அசுரர்கள், பூமியில் பல்வேறு தோற்றங்கள் எடுத்து உலவினர். பலர் மன்னர்களாக ஆட்சி நடத்தினர். இயற்கையிலேயே அவர்களிடத்துள்ள அசுர குணங்களினால் மக்களுக்கு அவர்கள் பல்வேறு வழிகளின் மூலம் ஊறுவிளைவித்தனர். அவர்களின் தீய நடவடிக்கைகளினால் இடருற்ற பூமாதேவி தன்னையும் தன்னில் வாழும் மக்களையும் அத்தீயவர்களிடமிருந்து காப்பாற்ற வேண்டுமெனத் திருமாலிடம் முறையிட்டாள். அவ்வேண்டுகோளுக்கிணங்கி மக்களின் துன்பம் களைய திருமால் கண்ணனாக அவதரித்து அசுரர்களை அழித்தார். இவ்வாறு கிருஷ்ணாவதாரத்தின் தேவையையும், காரணங்களையும் புராணங்கள் விளக்குகின்றன.

யதுவம்சத்தைச் சேர்ந்தவனாகிய உக்கிரசேனனின் புதல்வன் கம்சன். இவன் முற்பிறவியில் காலநேமி என்னும் அசுரனாக இருந்தவன். நூறு சிரங்களையும், நூறு கரங்களையும் கொண்ட இவன் யாருக்கும் அஞ்சாது பலருக்கும் துன்பங்கள் விளைவித்து வந்தான். கர்வமிகுதியால் திருமாலிடம் யுத்தம் செய்து அவரைச் சூலாயுதத்தால் கொல்ல முற்பட்டான். பின்னர் திருமாலின் சக்கரத்தால் மாண்டு கம்சனாக மறுபிறப்பெடுத்தான். மதுராபுரியின் மன்னனாக முடிசூடிக் கொண்டான். உக்கிரசேனனின் தம்பி தேவகனின் மகள் தேவகி. இவளை யதுவின் மரபைச் சேர்ந்த சூரசேனனின் புதல்வனாகிய வசுதேவன் மணந்தான்.

ஒருநாள் வசுதேவனையும், தேவகியையும் தேரில் அழைத்துக் கொண்டு கம்சன் உலா வந்தான். அப்பொழுது வானினின்று ஓர் அசரீரி ஒலித்தது. கம்சனின் சகோதரியான தேவகியின் வயிற்றில் பிறக்கும் எட்டாவது குழந்தை கம்சனை அழிக்கும் என்று அது கூறியது. அசரீரி கேட்டு அதிர்ந்த கம்சன் அவ்விடத்திலேயே தேவகியைக் கொல்ல முற்பட்டான். வசுதேவர் அவனைத் தடுத்து, தங்களுக்குப் பிறக்கும் குழந்தைகள் அனைத்தையும் கம்சனிடமே தந்து விடுவதாக உறுதிகூறி, கொடியவனான கம்சனிடமிருந்து

தேவகியை விடுவித்தார். அது போன்றே தங்களுக்குப் பிறந்த ஏழு குழந்தைகளையும் கம்சனிடமே அளித்தனர். அவனும் அவ்வெழுவரையும் கல்லில் அடித்துக் கொன்றான். எட்டாவதாகப் பிறந்த கண்ணன் இரகசியமாக ஆயர்பாடியில் யசோதை - நந்தகோபாலனிடம் இடம் மாறிச் சென்று வளர்ந்தான். அங்கு அவன் மிகுந்த செல்வத்துடனும், வளமையுடனும் வளர்க்கப் பெற்றான்.

ஆயர்பாடியில் வளரும் கண்ணனைக் கொல்வதற்குப் பூதனை என்னும் அரக்கியைக் கம்சன் ஏவினான். அவள் ஊட்டிய நஞ்சுப்பாலை அருந்துவது போன்று அவளின் உயிரைக் கண்ணன் கொன்றான். கொடிய சகடாசுரனை அழித்தான். குபேரனின் புதல்வர்களான நளகூபரன், மணிக்கிரிவன் என்ற கந்தர்வர்கள், நாரதரிடம் பெற்ற சாபத்திற்காக நந்தகோபன் வீட்டில் மருதமரங்களாக நின்றனர். கண்ணன் தன்னைக் கட்டி வைத்திருந்த உரலை அம்மரங்களின் நடுவே இழுத்து, அம்மரங்களைச் சாய்த்து, அக்கந்தர்வர்களின் சாபம் நீக்கினான். தாய் யசோதையிடம் தன் வாயில் அண்டத்தைக் காட்டி வியக்க வைத்தான். தன்னைக் கொல்லக் கன்றாகவும், பாம்பாகவும் வந்த அசுரர்களை அழித்தான். யமுனையில் பலரையும் பயமுறுத்தியும், துன்பமளித்தும், உயிரை வாங்கியும் வந்த காளிங்கன் என்னும் கொடிய பாம்பை அடக்கி, அதன் தலைமேல் நடனமாடினான். சிந்தையந்திக்கு முக்தி அளித்தான். கோவர்த்தனகிரியைக் குடையாகப் பிடித்து இந்திர கோபத்தால் வந்த கல்மழையைத் தடுத்து, ஆயர்குல மக்களையும் ஆவினங்களையும் காத்தருளினான். தன்னைக் கொல்வதற்காகக் கம்சன் அனுப்பிய சாணூரன், முட்டிகன் என்ற இருவருடனும் மற்போர் செய்து அவர்களைக் கொன்றான். கம்சனின் யானையான குவலயா பீடத்தை வீழ்த்தினான். கம்சனை வெகு ஆங்காரத்துடன் பிடித்து, அவன் மார்பைப் புடைத்து வதை செய்து அவனை அழித்தான். வசுதேவரையும் தேவகியையும் சிறை மீட்டருளினான். கம்சவதைக்குப்பின் கண்ணனின் கதை பலவாறாக விரிந்து செல்கின்றது.

**வில்லுப்பாட்டு ஓலைச்சுவடியில் கம்சன் கதை**

கம்சன் கதையை வில்லுப்பாட்டாளி தன் வில்லிசையில் படைத்து வழங்குவதற்காகச் சில நிகழ்ச்சிகளை மாற்றியும், புதிதாகச் சேர்த்தும், சிலவற்றை நீக்கியும் அமைத்துள்ளார். அக்கலைஞனின்

மனநிலைக்கேற்பவும், கல்வியறிவிற்கேற்பவும், இக்கதை குறித்து அவர் அறிந்திருக்கும் பான்மைக்கேற்பவும் இவ்வாறான மாற்றங்களை இக்கதை பெற்றிருக்கின்றது. இதன்றியும் கேட்கும் மக்களின் அறிதிறன், உணர்திறன், கேட்கும் மனநிலைக்கேற்பவும் இக்கதை வடிவம் பெற்றுள்ளது. மேலும் வில்லுப்பாட்டு நடக்கும் இடம், கால அளவு இவற்றைப் பொறுத்தும் இக்கதை புனையப்பட்டுள்ளது.

தென்மதுராபுரியை ஆண்டுவந்த கம்சன் தன்தங்கை தேவகியை வடமதுரையை ஆண்ட வசுதேவனுக்கு மணம் செய்து கொடுத்தான். ஒருநாள் அவன் வேட்டைக்காகக் காட்டிற்குப் போகும்போது தங்கையரான தேவகியாளும், ரோகிணியாளும் உடன் சென்றனர். அங்கு ஒரு முனிவர் பன்னிரண்டு ஆண்டுகள் தவம்செய்து பன்னிரண்டு ஆண்டுக்கு ஒருமுறை பழுக்கும் மாங்கனியைப் பறித்து உண்ணவிருக்கும் வேளையில் அக்கனியை மிகுந்த தாகத்தால் வருத்தமுற்றிருந்த தங்கையர் கேட்கவும் அதன் பெருமையறியாது கம்சன் பறித்துக் கொடுத்தான். அதனை அறிந்த அம்முனிவர் கோபமுற்று, கம்சன் தங்கை தேவகி வயிற்றில் பிறக்கும் குழந்தை கம்சனின் தலையை அறுக்குமென்று சபித்தார். இதற்காக வருந்திய கம்சன் வசுதேவனையும், தேவகியையும் தனித்தனிச் சிறையில் அடைத்தான். எனினும் முனிவரின் சாபத்தால் தேவகிக்கு மாயகர்ப்பம் உண்டாயிற்று. குழந்தை பிறந்ததும் கம்சன் அதைத் தூணில் அடித்துக் கொன்றான். இவ்வாறு தொண்ணூற்றொன்பது குழந்தைகளைக் கொன்றான். இறந்த குழந்தைகள் இறைவனிடம் இருளாகச் சென்று வேண்டிக் கொள்ள நூறாவது குழந்தையாகக் கண்ணன் பிறந்தான். இடமாறி பிறந்தவுடன் சிறையிலிருந்து ஆயர்பாடியில் யசோதை - அம்பலக்கோன் வீட்டில் வளர்ந்தான். அவனுக்குப் பதிலாக ஆயர்பாடியிலிருந்து இடமாறி வந்த பத்திரகாளி கம்சனைப் பரிகாசித்து மறைந்தாள். ஆயர்பாடியில் வளரும் கண்ணனைக் கொல்ல கம்சன் பேச்சி என்ற அரக்கியை அனுப்பினான். அவளின் நஞ்சுப்பாலை அருந்துவது போன்று அவளுடைய உயிரையும் உறிஞ்சி அவளைக் கண்ணன் கொன்றான். இரண்டு அசுரர்களைக் கம்சன் அனுப்பினான். அவர்கள் மர உருவில் கண்ணன் வீட்டு வாயிலில் நின்றார்கள். அவர்களை உரலில் கட்டுப்பட்டிருக்கும் கண்ணன் இடித்துக் கொன்றான்.

ஆயர்பாடியின் வீடுகளில் உறியிலுள்ள வெண்ணையைத் திருடி உண்டு வந்த கண்ணன் ஒருநாள் இந்திரனுக்கனுப்பிய பலகாரங்களைத் திருடி உண்டான். இதனால் கோபமுற்ற இந்திரன் ஆயர்பாடியை அழிக்கும் எண்ணத்தில் கல்மழையைப் பொழிவித்தான். துன்பத்தில் வாடிய ஆயர்குல மக்களைக் காக்க கோவர்த்தனகிரியைக் குடையாகக் கண்ணன் பிடித்தான். கம்சன் தந்திரமாகக் கண்ணனைக் கொல்ல வேண்டி திவசத்திற்காகப் பால்குடங்கள் எடுத்து வரச்சொல்லி இடையர்களைப் பணித்தான். அவர்கள் கண்ணனையும் அழைத்துக் கொண்டு கம்சனிடம் சென்றார்கள். கண்ணனைக் கொல்ல யானையைக் கம்சன் அனுப்பினான். அதனையும் கண்ணன் கொன்றான். பின்னர் கம்சனைப் பெருங்கோபத்துடன் நெஞ்சைப் பிளந்து, உயிரைப்பறித்து, குடலை மாலையாகக் கண்ணன் போட்டுக் கொண்டான். மீண்டும் ஆயர்பாடி திரும்பிய கண்ணன் சில ஆண்டுகளுக்குப் பின்னர் இடையர்களுடன் மாடுகள் மேய்க்கச் சென்றான். அங்குத் தன் மாயச்செய்கையால் ஆயிரம் ஆயர்குலக் கன்னியரைக் கர்ப்பம் தரிக்கச் செய்தான். அவர்களைக் கவலையுறச் செய்து, அவ்வாயிரம் பெண்களையும் திருமணம் செய்து கொள்வதாகக்கூறி ஒவ்வொருத்தியுடனும் ஒரொரு கண்ணனாக இருந்து இறுதியில் அவர்கள் கர்ப்பத்தை மறையச்செய்து, தானும் மறைந்தான். இத்துடன் இவ்வில்லுப்பாட்டுக் கதை நிறைவுறுகின்றது.

இவ்வில்லுப்பாட்டின்வழி கூறப்படும் கம்சன் கதை, புராணங்கள் கூறும் கதைகள் சிலவற்றுடன் ஒத்தும், சிலவற்றிலிருந்து வேறுபட்டும், சில இடங்களில் புதியதாகவும், மேலும் தனக்கேயுரித்தான தனித்த கூறுகளைப் பெற்றும் காணப்படுகின்றது.

**கம்சன் கதை: பொதுக்கூறுகள்**

புராணங்களில் வரும் கம்சன் கதைக்கும் கம்சன் வில்லுப்பாட்டுக் கதைக்குமிடையே பல ஒற்றுமைக்கூறுகள் உள்ளன.

1. கண்ணன் தான் பிறந்த சிறைக்கூடத்திலிருந்து இடம்பெயர்ந்து ஆயர்பாடியில் வளர்தல்
2. தன்னைக் கொல்ல வந்த பூதனையைக் கொல்லுதல்
3. வெண்ணை திருடி உண்டு, ஆய்ச்சியர்களை அல்லற்பட வைத்தல்.
4. கோவர்த்தனகிரியைக் குடையாகப் பிடித்து உயிர்களைக் காத்தல்.

5. தன்னைக் கொல்வதற்காக வந்த யானை குவலயாபீடத்தை மாய்த்தல்.

6. கம்சனை நெஞ்சிற் புடைத்துக் கொல்லுதல்.

7. ஆயர்குலப் பெண்களுடன் லீலை புரிதல்

இவ்வாறு பல நிகழ்ச்சிகள் ஒத்துள்ளன.

**வேறுபடும் நிகழ்ச்சிகள்**

புராணங்களில் காணப்படாத சில புதிய செய்திகள் இவ்வில்லுப்பாட்டுக் கதையில் இடம்பெற்றுள்ளன.

1. **கண்ணன் அவதாரக் காரணம்**

புராணங்களில் பூமாதேவியின் முறையீட்டால் கண்ணன் அவதாரம் ஏற்படுகிறது. அசுரர்களின் தீயநடவடிக்கைகளினால் பூமியின் வேதனை மிகுதிப்பட்டது. அதைப் பொறாது பூமாதேவி இறைவனிடம் வேண்ட, திருமால் கிருஷ்ணனாக அவதரித்துப் பூவுலகிற்கு வருகின்றார்.

வில்லுப்பாட்டுக் கதைகளில் முனிவருக்கு உவமையான அருங்கனியைப் பறித்துத் தங்கையரிடம் கம்சன் கொடுத்ததால் கோபமுற்ற அம்முனிவர் “அத்தங்கை மகனே கம்சன் தலையை அறுப்பான்” என்று சாபமிட்டதாலேயே கண்ணன் நூறாவது குழந்தையாகப் பிறக்கிறான். மேலும் முதலில் பிறந்த தொண்ணூற்றொன்பது குழந்தைகளும் தங்கள் பிறப்பின் அவலத்தை எண்ணிச் சிவனிடம் சென்று முறையிட, அதனைக் கேட்ட சிவன், திருமாலிடம் வேண்ட, அவர் கண்ணனாகத் தேவகியின் வயிற்றில் நூறாவது குழந்தையாக அவதரித்தார்.

2. **கம்சனின் செயல்**

புராணங்களில் தேவகியின் வயிற்றில் உதிக்கும் எட்டாவது குழந்தை கம்சனைக் கொல்லும் என்று அசரீரி கூறக் கேட்டவுடனேயே, கம்சன் தேவகியைக் கொல்ல முற்படுகிறான். அப்போது வசுதேவன் அவனைத் தடுத்து, தங்கட்குப் பிறக்கும் அனைத்துக் குழந்தைகளையும் கம்சனிடமே அளித்து விடுவதாக ஓர் உடன்பாடு செய்து கொள்கின்றார். அதற்குக் கம்சனும் இணங்கித் தேவகியை விடுவிக்கிறான் எனக் கூறப்படுகிறது.

கம்சன் வில்லுப்பாட்டுக் கதையில் முனிவரிடம் சாபம் பெற்ற கம்சன் மிகுந்த வருத்தத்துடன் அரண்மனைக்கு வந்து, தன் அறையில் தனித்து இருக்கும்போது அங்கு வந்த மந்திரி கூறக் கேட்டு, தேவகியையும், வசுதேவனையும் தனித்தனிச் சிறையில் அடைத்தான் என உள்ளது.

## 3. தேவகி பெற்ற குழந்தைகள்

புராணங்களில் தேவகியின் எட்டாவது குழந்தையாகக் கண்ணன் பிறந்தான் எனக் கூறப்பெற்றுள்ளது. முன்னர் பிறந்த ஏழு குழந்தைகளையும் கம்சன் கொன்று விடுகின்றான்.

வில்லுப்பாட்டிலோ தேவகிக்குப் பிறந்த தொண்ணூற்றொன்பது குழந்தைகளையும் கம்சன் தூணில் அடித்துக் கொன்றான் என்று சொல்லப்பட்டுள்ளது.

> "இப்படியே சிசுக்களையும் இவனடித்துக் கொன்றுவிட்டான்
> தொண்ணித் தொன்பது பிள்ளைகளை(த்) தூணதிலே அடித்து(க்)
> கொன்றான்" (219-220)

என்ற வரிகள் இதனைத் தெளிவுபடுத்தும். பின்னர் நூறாவது குழந்தையாகக் கண்ணன் பிறந்தான் என்று பாடப்பெற்றுள்ளது.

## 4. காளியைக் கம்சன் கொல்ல முயலுதல்

கண்ணனுக்குப் பதிலாக இடமாறி வந்த காளியைக் கம்சன் கொல்ல முற்படும்போது அவன் கைப்பிடியினின்று நழுவிய காளி, மேனோக்கிப் பறந்து, உயரத்தில் சென்று, "உன்னைக் கொல்லப் போகும் கண்ணன் வேறு இடத்தில் வளருகிறான்" என்று கூறி மறைந்ததாகப் புராணங்கள் தெரிவிக்கின்றன.

வில்லுப்பாட்டுக் கதைப்பாடலில் குழந்தைவடிவக் காளியைக் கொல்வதற்காகக் கம்சன் அவளை எடுக்க, அது இயலாமல் தோல்வியுற்ற கம்சனை நோக்கிக் காளி "உன்னைக் கொல்பவன் இடைச்சியர் குடியில் வளர்கிறான்" என்று கூறி மறைகின்றாள்.

## 5. பூதனை வதம்

கண்ணன் பூதனையைக் கொன்றபோது மலைபோல் சாய்ந்த அவளின் உடலை ஊருக்கு வெளியே எடுத்துச் சென்று ஆயர்கள் எரியூட்டி அழித்ததாகப் புராணங்கள் கூறுகின்றன.

பூதனையின் உடலைக் கண்டதுண்டமாக வெட்டி இடையர்கள் வெகு நாழிகை தூரம் சுமந்து சென்று இறுதியில் கடலை அடைந்து அதில் அவளின் உடலுறுப்புகளை எறிந்தனர் என்று வில்லுப்பாட்டில் பாடப்பெற்றுள்ளது.

## 6. அன்னைக்கு வாய்க்குள் அண்டத்தைக் காட்டுதல்

கண்ணன் தன் வாயில் மண்ணை அள்ளிப் போட்டு விளையாடிக் கொண்டிருந்தபோது, அதனைக் கண்டு யசோதை அவனுடைய வாயைத் திறந்து காட்டச் சொல்ல, அவள் சொற்படி கண்ணன் வாயைத் திறந்தபோது, அதில் அகில உலகங்களும் தெரிந்தது கண்டு, அவள் பரவசநிலை அடைகின்றாள். ஒருகணம் மயக்குற்று இருந்தவள், மீண்டும் கண்ணனின் குழந்தைத் தன்மையைக் கண்டு நிகழுலகிற்கு மீளுகிறாள் எனப் புராணங்களில் கூறப்படுகிறது.

கம்சன் கதைப்பாட்டில், கண்ணன் வெண்ணை திருடி உண்டதைக் கண்ட யசோதை அவனை அடிக்க, அவன் வாயைத் திறந்து அழும்போது அவ்வாயினுள் ஈரேழு உலகங்களும் தெரிந்தது கண்டு வியந்து நின்றாள் என்றுபாடப்பெற்றுள்ளது.

## 7. கண்ணனை உரலில் கட்டுதல்

கண்ணன் மிகுந்த குறும்புகள் செய்தான் என்பதால் தாய் யசோதை கோபமுற்று அவனுடைய இடுப்பை உரலுடன் பிணைத்து, அவனை நழுவவிடாமல் கட்டிவைத்து விடுகிறாள் எனப் புராணங்கள் புகலுகின்றன.

வில்லுப்பாட்டுக் கதையில் கண்ணன் பிற இடையர்களின் வீடுகளில் புகுந்து வெண்ணை திருடுகின்றான் என்பதற்காக, அப்பெண்கள் அவனைப் பிடித்து உரலில் கட்டிவைத்து விடுகின்றனர் என்று சொல்லப்பட்டுள்ளது.

## 8. மருதமரங்கள் குறித்த செய்தி

கந்தர்வர்களான நளகூபரன், மணிக்கிரீவன் என்ற இருவரும் குபேரனின் புதல்வர்கள். இவர்கள் ஒருநாள் பெண்களுடன் ஆடையின்றிக் குளித்துக் கொண்டிருந்தனர். அவ்விடத்திற்கு நாரத முனிவர் வந்தார். அவரைக் கண்ட பெண்கள் ஆடைகளை அணிய விரைந்தனர். ஆனால் அச்சகோதரர்கள் இருவரும், அதே நிலையிலேயே நின்றிருந்தனர். அதுகண்டு கோபமுற்ற நாரதர், அவர்களை மரங்களாகும்படிச் சபித்தார். தங்களின் அகம்பாவத்தினால் ஏற்பட்ட நிலையைக் கண்டு வருந்திய இருவரும், சாபம் நீக்குகின்றவனாகிய திருமாலின் வருகைக்காக நந்தகோபன் வீட்டில் மருத மரங்களாக நின்று கொண்டிருந்தனர் எனப் புராணங்கள் கூறுகின்றன.

கண்ணனைக் கொல்வதற்காக இரு அசுரர்களைக் கம்சன் அனுப்ப, அவ்விருவரும் மரங்களாக உருவெடுத்து அங்கு நின்றனர் என்று இவ்வில்லுப்பாட்டுக் கதை கூறுகிறது.

கண்ணன் தன் இடுப்புடன் பிணைத்திருந்த உரலுடன் வந்து மருதமரங்கள் நடுவே சென்று அவற்றை இடித்துச் சாய்த்துக் கந்தர்வர்களின் சாபம் நீக்கினான் எனப் புராணங்களும், உரலுடன் நகர்ந்து வந்த கண்ணன் மரங்களை வேரோடு வீழ்த்தி, அசுரர் இருவரையும் அழித்தான் என்று வில்லுப்பாடலும் இருவேறு முறையில் விவரித்துள்ளன.

## 9. இந்திர பூசை

நந்தகோபன் இந்திரனுக்குப் பூசை செய்யப் பலவித ஏற்பாடுகள் செய்தான். இதை,

அவிர்ஒளி விரிக்கும் பொன்தேர்
    ஆடகப் பருப்புள் தும்பைச்
சவிமலர் அனைய செந்நெல்
    தண்டுலம் மாடம் ஆதி
உவகைசெய் கனியும் தேனும்
    உறுசுவைத் ததியும் நெய்யும்
நவகறித் திரளும் பாலும்
    நாட்டினன் நந்தகோபன்

(ஸ்ரீ கண்ணன் அவதாரம், மதுரகவி, பாடல்-495, ப-255)

என்ற மதுரகவி ஸ்ரீநிவாசையங்கார் வாக்கால் அறியலாம். நந்தகோபன் இவ்வகையான பொருட்களைச் சேகரித்தபோது கண்ணன் அதைத் தடுத்து, "தவங்கள் செய்து பதவிபெற்ற இந்திரனுக்குப் பூசை செய்வதைவிட நம்மையும் நம் குலத்தையும் காக்கும் கோவர்த்தனகிரிக்கு அப்பூசையைச் செய்தோம் என்றால் அது நமக்கு மேலும் மேன்மையைத் தரும்" என்று சொல்லி இந்திரனுக்குப் பூசை நடைபெறுவதைத் தடுத்து, கோவர்த்தனகிரிக்குப் பூசைசெய்ய வைக்கின்றான். அதனால் கோபமுற்ற இந்திரன் கல்மழையைப் பொழியச் செய்தான் என்று புராணங்கள் கூறுகின்றன.

கம்சன் வில்லுப்பாட்டில் கண்ணன் இந்திர பூசைக்காகக் கொண்டு சென்ற பலகாரங்களைப் பிறர் அறியாமல் திருடி உண்டு விடுகின்றான். வெற்றுப் பலகாரக் குடங்களைக் கண்ட இந்திரன் கோபம் கொள்ளுகின்றான். அதனால் கல்மழை பொழியச் செய்கின்றான் என்று விவரிக்கப்பட்டுள்ளது.

### 10. கோவர்த்தனகிரி

இந்திரனின் கல்மழைத் தாக்குதலைத் தடுக்கவும், பெரு வெள்ளத்தினின்று ஆயர்குடியைக் காக்கவும் கண்ணன் கோவர்த்தனகிரியைக் குடையாக எடுத்துப் பிடித்தான் என்றும், ஏழுநாள் பெய்த கல்மழை ஓய்ந்தவுடன் மீண்டும் மலையை அதே இடத்தில் வைத்துவிட்டான் என்றும் புராணங்களில் கூறப்படுகின்றது.

கம்சன் கதை வில்லுப்பாட்டிலோ கண்ணன் தான் குடையாகப் பிடித்த கோவர்த்தனகிரியை மழை நின்றவுடன் தூக்கி எறிந்தான் என்று சொல்லப்படுகிறது.

"வருணன் ஓடிவிட்டானென்று மலையைத்தூக்கி வீசிவிட்டான்
குடைபிடித்த மலையதுதான் குப்புறப்போய் விழுந்திடுமாம்"

(கம்சன் கதைப்பாடல் 719-720)

என்ற பாடல் வரிகள் இதனை விளக்கும். குழந்தைக் கண்ணனின் குறும்புச் செயலுக்கேற்பவே கோவர்த்தனகிரியைத் தூக்கி எறிந்ததாக வில்லுப்பாட்டாளியால் கூறப்பெற்றுள்ளது. இது கதை கேட்போருக்கு இரசனையை ஏற்படுத்தும்.

## 11. கம்சனின் தந்தைக்குத் திதி

புராணங்களில் கம்சனைக் கண்ணன் கொன்றபின் அவன் தந்தையான உக்கிரசேனனுக்குக் கம்சன் ஆண்ட தேசத்தை நல்கி, நவரத்தினங்கள் நிறைந்த முடியைச்சூட்டி மன்னனாக்கினான் என்று சொல்லப்பட்டுள்ளது.

கம்சன் கதைப்பாடலில் தன் தந்தைக்குத் திவசம் இருப்பதால், அதற்கான பாற்குடங்களை எடுத்துக்கொண்டு ஆயர்பாடிப் பெண்டிரும் குழந்தைகளும் வரவேண்டுமென்று ஆணையிடுகிறான் என்று கூறப்பட்டுள்ளது. கண்ணனை மதுராபுரிக்கு வரச்செய்வதற்குரிய தந்திரமாக இவ்வாறு மாற்றிக் கூறப்பெற்றுள்ளது.

## 12. கம்சனைக் கொல்லுதல்

கம்சன் கண்ணனைக் கொல்ல ஒரு சூழ்ச்சி செய்து, அதன்படி அக்குரூரன் என்ற அமைச்சர் மூலம் தன்நாட்டில் நடைபெறவிருக்கும் வில்லணி வேள்விக்குக் கண்ணனை அழைத்து வருமாறு அனுப்புகின்றான். அவ்வாறே அவரும் சென்று கண்ணன், பலராமன் இருவரையும் அழைத்து வருகின்றார் எனப் புராணச் செய்தி கூறுகின்றது. மேலும் வில்லணி வேள்வியின்போது மற்போர் ஒன்றை நடத்தி அதில் கண்ணனையும், பலராமனையும் கலந்துகொள்ள வைக்கிறான், கம்சன். மிகுந்த வன்மையுடைய சாணூரன், முட்டிகன் என்ற மற்போர் வீரர்களுடன் மோதி, அவ்விருவரையும் வீழ்த்தி வெற்றி அடைகின்றனர்.

கண்ணனின் வெற்றிகளைப் பொறாத கம்சன் நந்தகோபனைச் சிறையிடவும், தேவகி, வசுதேவனைக் கொல்லவும் ஆணையிடுகிறான். வெகுண்டெழுந்த கண்ணன், அவன் இருக்குமிடத்தை நோக்கிப் பாய்ந்து, அவனை நெஞ்சிற் புடைத்துக் கொன்றான். இவ்வாறு புராணங்கள் விவரிக்கின்றன.

வில்லுப்பாட்டில் மேலே சொன்ன நிகழ்ச்சிகள் சற்றே மாற்றம் பெற்றுள்ளன. தன் தந்தையின் திவசத்திற்காகப் பாற்குடங்கள் கொண்டுவரச்சொல்லி, ஓர் ஒட்டனிடம் கம்சன் ஓலை கொடுத்து ஆயர்பாடிக்கு அனுப்புகின்றான். அதன்படியே கண்ணன் தன் தாய் யசோதையுடன் வருகின்றான். அவ்வாறு வந்தவனைக் கம்சன் தன் படைகளைக் கொண்டு தாக்குகிறான். தன் மாயச் செயலால் அத்தாக்குதலினின்று கண்ணன் வெற்றி பெறுகின்றான். பின்னர் தன் பட்டத்து யானையான குவலயாபீடத்தைக் கம்சன் அனுப்புகின்றான்.

அதையும் கண்ணன் கொன்று வீழ்த்துகிறான். அதுகண்டு கோபமுற்ற கம்சன், கண்ணனின் தந்தையாகிய அம்பலக்கோனைச் சிறையிடுங்கள் என்று கூற, அதனால் ஆத்திரமடைந்த கண்ணன், அவனுடைய நெஞ்சைக் கிழித்து, மாளச் செய்து, அவன் குடலை மாலையாக எடுத்துப் போட்டுக்கொண்டான் என்றும் புனையப் பெற்றுள்ளது.

## 13. கண்ணனின் வயது

கம்ச வதையின்போது கண்ணனுக்கு ஏழு வயது நிரம்பியிருந்ததாகப் புராணங்கள் மூலம் தெரியவருகின்றது.

"எழுசமை உடைய எம்மான்" (பா-32) என்று மதுரகவி ஓரிடத்தில் கண்ணனின் வயதைச் சொல்லுகிறார்.

கம்சன் வில்லுப்பாட்டுக் கதைப்பாடலில் கண்ணன் சிறுகுழந்தையாகச் சித்திரிக்கப்பட்டுள்ளான். கம்சனைக் கொல்ல வரும்போது தாய் அவனை இடுப்பில் வைத்துக் கொண்டு வருகிறாள். கம்சனைக் கொல்ல கண்ணன் விசுவரூபம் எடுத்து அவனை அழித்த பின்னர், மீண்டும் குழந்தையாகத் தன் தாயின் மடிமீதில் வந்து அமர்ந்து கொண்டான் என்று இக்கதைப் பாட்டு கூறுகின்றது. கம்ச வதை முடிந்த பின்னர், வேறொரு நிகழ்ச்சியில்

"இப்படியாய் இருக்கும்போது மாயன் ஏழெட்டு வயசானான்" (851)

என்று வருகிறது. கம்ச வதைக்குப் பின்னர் நடைபெறும் நிகழ்ச்சிகளில்தான், கண்ணன் ஏழெட்டு வயதுடையவனாகக் காட்டப்படுகிறான் என்று தெரிகிறது.

## 14. கண்ணனின் குறும்பு

கண்ணன் செய்யும் பலவகையான குறும்புகள் புராணங்களில் விவரிக்கப்பட்டுள்ளன. கோபியருடன் அவன் சேர்ந்து புரியும் லீலைகள் பல இடங்களிலும் பேசப்பட்டுள்ளன. கண்ணன் லீலை, 'ராசக்கிரியை' என்று பல பெயர்களில் அவனுடைய செயல்கள் விவரிக்கப்பட்டுள்ளன.

கம்சன் கதை வில்லுப்பாட்டில் கண்ணனின் ஓரிரு குறும்புச் செயல்கள் மட்டுமே விளக்கப்பட்டுள்ளன. வெண்ணை திருடியதற்காக முன்னர் இடையர் பெண்கள் கண்ணன் தலையில் குட்டினர். அதற்குப் பழிவாங்குவதற்காகக் கண்ணன் ஆயிரம் இடையர் குலக் கன்னிப்பெண்களை மாயகர்ப்பம் தரிக்கச் செய்கிறான். பின்னர்,

அப்பெண்களையும், தாயரையும் தவிர்க்கச் செய்து, அக்கர்ப்பத்தை நீக்கினான் என்று சொல்லப்படுகிறது. மேலும் அவர்களைத் திருமணம் செய்து கொள்வதற்காக அவர்களிடமிருந்து பெற்ற பொன்னைக் காற்று அடித்துச் செல்லுமாறு மாயம் செய்கிறான்.

## 15. சாம்புவனின் செய்கை

சாம்புவனைப் புராணங்களில் 'சாம்பன்' என்று சொல்கின்றனர். இவன் அழகிய தோற்றமுடையவன். ஒருநாள் கண்ணன் கோபியருடன் நீராடிக் கொண்டிருந்தபோது சாம்பன் அங்குச் சென்றான். இவனுடைய தோற்றத்தைக் கண்ட அப்பெண்கள் சலனமுற்றனர். இவனும் அவர்களைக் கண்டு காமவிகாரமுற்றான். அதனால் அப்பெண்களின் உடலில் வியர்வை துளிர்த்தது. அதனைக் கண்ட கண்ணன் சாம்பனுக்குக் குட்டநோய் உண்டாகட்டும் என்று சாபமிட்டான். பின்னர் சாம்பன் சிவனை வணங்கி அந்நோய் நீங்கப் பெற்றான். கிருஷ்ணனுக்குப் புதல்வனாகப் பிறக்க வேண்டும் என வரம் வாங்கிப் பிறகு அதன்படியே பிறந்தான்.

சாம்பனைப் பற்றிய இச்செய்தி வில்லுப்பாட்டில் வேறு முறையில் சொல்லப்படுகிறது. கண்ணன் ஆயிரம் பெண்களை மணம் செய்யப் போகிறான் என்று அறிந்த சாம்புவன் தனக்கும் ஒன்றிரண்டு பெண்கள் கிடைக்காதா என்று எண்ணி அந்த இடத்திற்கு வந்து, அலைந்து கொண்டிருக்கிறான். ஆனால் அனைத்து வீடுகளிலும் கண்ணன் ஆயிரம் மாப்பிள்ளைகளாக உருவெடுத்து நிற்பதைக் கண்டு ஏமாற்றத்துடன் திரும்புகிறான்.

## 16. கண்ணன் மறைதல்

கம்சவதை முடிந்த பின்னர் கண்ணன் சில நாட்கள் மதுராபுரியில் தங்கியிருந்தான் என்றும், பின் பாண்டவர்களுக்கு உதவிசெய்து துவாரகையில் அமர்ந்து, பற்பல ஆண்டுகள் சென்றபின் பூவுலகைவிட்டு நீங்கினான் என்றும் புராணங்கள் விவரிக்கின்றன.

கம்சன் வில்லுப்பாட்டுக் கதைப்பாடலில் கம்ச வதைக்குப் பின் ஆயர்பாடிக்கு வந்த கண்ணன் ஆயிரம் இடையர்குலப் பெண்களை மணம் புரிவதும், இறுதியில் அவர்கள் கர்ப்பம் மறையுமாறு செய்து தானும் மறைந்து விடுகின்றான் என்றும் உள்ளது.

"மாயன் வயித்திலே தான்தடவி மாயமாகப் போய்(ச்)சேர்ந்தார்
பரமசிவனுக்கு(ச்) சேதிசொல்லி(ப்) பாற்கடலில் பள்ளிகொண்டார்"
(979-980)

என்ற வரிகள் இதனைப் புலப்படுத்தும். தன் மகனைக் காணாது யசோதை வருந்தினாள் என்றும் இறுதியில் சொல்லப்படுகிறது.

***வில்லுப்பாட்டில் விடுபட்ட செய்திகள்***

கம்சன் வில்லுப்பாட்டுக் கதைப்பாடலில் கண்ணன் தொடர்பான பல செய்திகள் விடுபட்டுள்ளன. கன்று போல வந்து கண்ணனைக் கொல்ல வந்த அசுரன், மலைப்பாம்பு உருவத்தில் தோன்றிய அசுரன், சகடாசுரன் போன்ற அசுரர்களை அழித்த நிகழ்ச்சிகள் சொல்லப்படவில்லை. மேலும் காளியன் என்ற கொடிய பாம்பு யமுனை ஆற்றிலிருந்து கொண்டு, ஆற்றின் அருகே வரும் அனைவருக்கும் துன்பத்தைக் கொடுத்துக் கொண்டிருந்தது. ஆற்றின் மேல் பறந்து செல்பவர்களின் உயிரைக்கூட அதன் நச்சால் பறித்தது. கண்ணனுடன் மாடு மேய்க்கச் சென்ற இடைச்சிறுவர்கள், யமுனை ஆற்றின் தண்ணீரைக் குடிக்கச் சென்று, அதன் நச்சால் இறந்தார்கள். அதனைக் கண்ட கண்ணன், அப்பாம்பை அழிக்க எண்ணி, யமுனை ஆற்றினுள் சென்று, அதனுடன் போராடி வென்று, அதன் தலைமேல் ஏறி நடனமாடி அதன் கர்வத்தை அடக்கினான். பின்னர் காளியனின் மனைவி கேட்டுக் கொண்டதற்கிணங்க அதனை உயிருடன் விட்டான். இந் நிகழ்ச்சி வில்லுப்பாட்டில் இடம் பெறவில்லை.

மேலும் கோபியரின் கலை கவர்தல், சிந்தையந்திக்கு முக்தி அளித்தல், பெலம்பன் ஆதியர் வதை, நப்பின்னைப் பிராட்டியார் மணம் போன்ற நிகழ்ச்சிகளும் இங்குப் பேசப்படவில்லை.

புராணங்களில் கண்ணனின் சகோதரனாகப் பலராமன் காட்டப்படுகிறார். அவர் பற்றி விரிவாக ஆங்குக் கூறப் பெற்றுள்ளது. அவரைப் பற்றிக் குறிப்பிடும்போது 'பால்நிறவண்ணன்' (முல்லைக்கலி 4.8) என்றும், 'பாலன்ன மேனியோன்' (நெய்தற்கலி 7.1) என்றும் பழந்தமிழ் இலக்கியங்களில் சுட்டுகின்றனர். மேலும் அவன் கண்ணனை விட்டு இணைபிரியாது உடனுறைந்து வாழ்ந்தவன். ஆனால் வில்லுப்பாட்டில்

பலராமனைப் பற்றிய செய்திகள் எதுவுமே சொல்லப்படவில்லை. என்றாலும் இதில்,

"பலகாரம் அத்தனையும் பால்வண்ணன் திருடி உண்டார்" (686)

"பார்த்து இருந்ததோர் பால்வண்ண நாதனும்" (816)

என்பன போன்ற சொற்றொடர்கள் காணப்படுகின்றன. ஆனால் அவை பலராமனைக் குறிக்காமல் கண்ணனைக் குறித்தே சொல்லப்பட்டுள்ளன. கண்ணனைக் கரியநிறத்தவன் என்று பொருள்படும்படியான பல சொற்கள் இவ்வில்லுப்பாட்டில் அமைந்து கிடந்தாலும், இவ்விடத்திலும் அத்தொடர்கள் கண்ணனையே குறித்துள்ளன.

புராணங்களில் ரோகிணித் தேவியார் குறித்த செய்திகள் பேசப்பட்டுள்ளன. பலராமர் ரோகிணி ஈன்றெடுத்தவர் என்றும் கம்சனுக்குப் பயந்து ரோகிணியார் ஆயர்பாடிக்கு வந்தார் என்றும் சொல்லப்படுகிறது. பலராமனும் கிருஷ்ணனும் ஆயர்பாடியில் ஒன்றாகவே வளர்ந்தனர். கம்சனை எதிர்த்துக் கொன்றனர். ஆனால் வில்லுப்பாட்டில் ரோகிணி பற்றிக் குறிப்பிடுகையில் அவள் கம்சனின் இரண்டு சகோதரிகளில் ஒருத்தி என்பது மட்டுமே காட்டப்பட்டுள்ளது.

"கம்சனுட தங்கையர்கள் காரிளைமார் இரண்டு பெண்களும் தேவகியாள் என்றொருத்தி ரோகிணியாள் என்றொருத்தி"

என்பதன் மூலம் ரோகிணி சுட்டப்படுகிறாள். அந்நிகழ்ச்சியைத் தொடர்ந்து கம்சன் வேட்டைக்குச் செல்லும்போது இரு தங்கையரையும் அழைத்துச் செல்லுகிறான். பின்னர் கம்சன் சாபம் பெறுகின்றான். அதன்பின் நடக்கும் நிகழ்ச்சிகளில் இப்பாடலின் இறுதிவரை எந்தவொரு இடத்திலும் ரோகிணி பற்றிய செய்தி எதுவும் இடம் பெறவில்லை. இவ்வில்லுப்பாட்டு ஆசிரியர் பலராமன் பற்றிக் கூறிப்பிடாதபோது ரோகிணி பற்றியும் அதிகம் குறிப்பிடாது விட்டுவிட்டதாக இதன்மூலம் அறிந்து கொள்ளலாம்.

**ஒற்றுமைக் கூறுகள்**

புராணங்களிலும், வில்லுப்பாட்டிலும் கண்ணன் - கம்சன் பற்றிய சில நிகழ்ச்சிகள் ஒத்துள்ளன. அவை வருமாறு:

1. தேவகியின் வயிற்றில் பிறந்த கண்ணனை ஆயர்பாடியில் யசோதையிடம் விடுவதற்காக வசுதேவர் செல்கிறார். அப்போது வழியெங்கும் மழை பொழிந்து கொண்டிருக்கிறது. ஆதிசேடன் தன் ஆயிரம் தலைகளையும் குடைபோல் விரித்துக் கண்ணனையும் வசுதேவரையும் மழையில் நனையாது பாதுகாக்கின்றான். மழை காரணமாக யமுனை ஆற்றில் வெள்ளம் பெருக்கெடுத்து ஓடிக் கொண்டிருக்கிறது. வசுதேவர் குழந்தையுடன் ஆற்றைக் கடந்து செல்கையில் பெருவெள்ளம் வற்றி, கணுக் காலளவு குறைந்தது. அதனால் வசுதேவர் தடங்கலின்றி ஆற்றைக் கடந்தார். புராணங்களில் வரும் இச்செய்தி வில்லுப்பாட்டில் மிக அழகாக "மாயமாய் ஆறும் முன்னால் வற்றிப் பின்னால் சுரக்க" (359-360) என்று சொல்லப்பட்டுள்ளது.

2. அதனைப் போன்றே கண்ணன் வெண்ணை திருடி உண்ணும் நிகழ்ச்சியும், ஆயர்பாடிப் பெண்களிடம் கண்ணன் செய்யும் குறும்புகளும் பெரும்பகுதி புராணங்களிலும், வில்லுப்பாட்டிலும் ஒத்த முறையிலேயே விவரிக்கப்பட்டுள்ளன.

***வில்லுப்பாட்டில் வரும் சில நாட்டுப்புற இலக்கியச் சிறப்புக்கூறுகள்***

கம்சன் கதை வில்லுப்பாட்டில், நாட்டுப்புறக் கதைப்பாடல்களில் காணப்படும் சில சிறப்புக்கூறுகள் இடம் பெறுகின்றன.

1. கம்சனின் வன வேட்டை: கம்சன் வனவேட்டைக்குச் செல்லும் நிகழ்ச்சி விரிவாகப் பேசப்படுகிறது. இன்றும் பல ஊர்களில் வருடத்திற்கு ஒருமுறை 'வேட்டைக்குப் போதல்' என்ற நிகழ்ச்சி நடைபெறுகிறது. கோயில் கொடை விழாக்களின்போது 'தெய்வம் வேட்டைக்குச் செல்லுதல்' என்ற ஒரு சடங்கு இன்றும் நடத்தப்படுகிறது. அவ்வாறான நிகழ்ச்சி நடத்தப்படாவிடினும் வேட்டைக்குப் போவது போன்ற பாவனையுடைய சடங்குகளாவது நிகழ்த்தப்பெறும். இவ்வாறான நிகழ்ச்சிகள் தெய்வக் கதைப் பாடல்களிலும் வடுகராஜன் கதை, சின்னத்தம்பி கதை, கட்டபொம்மு கதை போன்ற கதைப்பாடல்களிலும் இடம் பெறுகின்றன. இவ்வேட்டையாடும் நிகழ்ச்சி மூன்று வகையினரால் நிகழ்த்தப்படுவதாக இவற்றில் காட்டப்பட்டுள்ளது.




இவ்வாறு வனவேட்டையைச் சித்திரிப்பது நாட்டுப்புறக் கதைப் பாடல்களில் வரும் ஒரு சிறப்புக் கூறு ஆகும். வனவேட்டை பற்றிக் கூறும்போது வனத்தின் இயல்பு, மரங்கள் இயல்பு, விலங்குகள் இயல்பு, வேட்டை நாய்களின் வருணனை வேட்டைக்காரர்களின் திறமை, வேட்டைக் கருவிகளின் அமைப்பு, பலவகை வலைகளின் இயல்பு என நாட்டுப்புறக் கவிஞன் கூறுவது வழக்கம். அவ்வாறு கூறும்போது அவனது கலைத்திறமை வெளிப்படுகிறது. அதற்காக இவ்வனவேட்டை போன்ற சிறப்புக் கூறுகள் கதைப் பாடல்களில் அமைந்துள்ளன.

கம்சன் வில்லுப்பாட்டில் வனவேட்டையாடும் நிகழ்ச்சி விரிவாகக் காட்சிப்படுத்தப்படுகிறது. கம்சன் வேட்டைக்காகச் சேகரிக்கும் ஆயுதங்களும், நாய்களும் என்னென்ன வகையின என்பது விரித்துரைக்கப்பட்டுள்ளது. ஏறத்தாழ இருபது வரிகளில் வனவேட்டைக்கான நிகழ்ச்சி சொல்லப்பட்டுள்ளது.

"மாடப்புறா பிடிக்கும்வலை
மயிலன்னங்கள் தட்டெடுத்தான்
துட்டநாயாம் புலி நாயாம்
சோமனென்ன குட்டநாயாம்" (34-40)

என்று இவ்வாறு பலவிதமான பொருட்களையும் கயிறுகளையும், கண்ணிகளையும், அஸ்திரங்களையும் சேகரித்தான்.

சின்னத்தம்பி கதைப்பாடலிலும்

"சுண்டுவில்லும் வலுதடியும் சுருக்குள்ள வல்லயமும்
கட்டாரியும் சமுதாடும் கைக்கத்தி"

கொண்டு சின்னத்தம்பி வேட்டைக்குப் புறப்படுவதாகக் கூறப்படுகிறது. இவ்வனைத்துக் கதைப்பாடல்களிலும் ஒத்த அமைப்புடைய ஆயுதங்களும், நாய்களும், வலைகளும், ஒத்த வருணனையும் அமைந்திருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

கம்சன் வில்லுப்பாட்டுக் கதைப்பாடலில் பல வகையான விலங்குகளைப் பிடிக்க, வெவ்வேறு வகையான பொறிகளும், கண்ணிகளும்,

வலைகளும் உள்ளன என்ற செய்தியும், பலவகைப் பறவைகளையும் பிடிக்க பல்வேறு அமைப்புடைய வலைகளும் இருக்கின்றன என்றும் தெரியவருகின்றது. விலங்குகளைத் தாக்கி வீழ்த்துகின்ற வெவ்வேறு விதமான கருவிகள் இருப்பது பற்றியும் சொல்லப்பட்டுள்ளது. என்றாலும் வலைகளையும், தட்டுகளையும், ஆயுதங்களையும், அஸ்திரங்களையும் ஆய்ந்து தேர்ந்தெடுத்ததாகக் கூறிவிட்டு நாய்களைத் தேர்ந்தெடுக்கும் விதத்தை விவரிக்கையில் நகைச்சுவை தோன்ற வருணித்திருப்பதைக் காண முடிகின்றது. சான்றாக,

"தெருக்களென்ற தெருக்களெல்லாம்
 தேங்கா முறி திருடும் நாயாம்
கட்டெறும்பைக் கண்டதுண்டால்
 காதவழி ஓடும் நாயாம்" (42-44)

என்றும்

"கஞ்சிப் பானை தனைஉருட்டும்
 களவாணி பொட்ட நாயாம்
சட்டிமுட்டி தனை உருட்டும்
 சண்டாள கருத்தநாயாம்" (48-49)

என்றும் சொல்வதால் கதைப்பாடலைப் பாடுவோன், நாய்களின் பல நுணுக்கமான குணங்களை அறிந்து அதனை இங்கு வெளிப்படுத்தியுள்ளான் என்று தெரிந்துகொள்ள முடிகின்றது.

### 2. தேவகியின் நூறு குழந்தைகள்

தேவகிக்குப் பிறந்த தொண்ணூற்றொன்பது குழந்தைகளைக் கம்சன் கொன்று விடுவதாகவும், கண்ணன் நூறாவது குழந்தையாகப் பிறந்தான் எனவும் இக்கதைப்பாடல் கூறுகின்றது. எந்த ஒன்றையும் எண்ணிக்கையில் குறிப்பிடும்பொழுது பொதுவாக நூறு, ஆயிரம் என்று சொல்வது நம் மக்களின் வழக்கமாகும். இதுமட்டுமின்றி, நம் பழங்கதைகளிலும் (Legend) இத்தகைய இயல்பு காணப்படுகிறது. மகாபாரதத்தில்கூட திருதராட்டினன், காந்தாரி இருவருக்கும் துரியோதனன் உட்பட நூறு குழந்தைகள் பிறந்ததாகச் சொல்லப்படுகிறது. இன்றும் பிறரை வாழ்த்துகையில் 'நூறு வயது வாழ்க' என்றும் 'நூற்றாண்டு வாழ்க ' என்றும் வாழ்த்துவதைக் காண்கிறோம். நூறு என்பது நம் வழக்கப்படி முழுமையைக் குறிக்கின்றது. இவ்வாறு எண்ணிக்கையைக் குறிப்பிடுவதால் செய்தி மிகுந்த ஆற்றலுடன்

சேர்க்கப்படுகிறது. இதுவும் நாட்டுப்புற இலக்கியங்களில் அமைக்கப்பெறும் சிறப்புக்கூறு ஆகும்.

3. **தேவகியின் வயிற்றில் பிறந்த தொண்ணூற்றொன்பது குழந்தைகள்**

தேவகியின் வயிற்றில் பிறந்த தொண்ணூற்றொன்பதுகுழந்தைகளும் கம்சனால் கொல்லப்பெற்று விடுகின்றன. எனவே அக்குழந்தைகள் இருண்ட தோற்றத்துடன் இறைவனிடம் முறையிடச் செல்கிறார்கள். அதனால் கைலாயமே அக்குழந்தைகளின் வரவால் இருண்டு விடுகின்றது.

"சிசுக்களெல்லாம் இருளாக(ச்) சிவனிடத்தில் சூழ்ந்திருக்க
இருளாகத் திரண்டுகொண்டு ஈசனிடத்தில் முறையிட" (221-222)

குழந்தைகள் சிவனிடத்திலிருந்து விடைபெற்ற பின் அவர் திருமாலை அழைக்கின்றார்.

"கஞ்சராசன் திருக்கூத்தை(க்) கண்டீரோ மைத்துனரே
கைலாசம் இருளாச்சே காண்கலையோ மைத்துனரே" (234-235)

என்று கேட்கின்றார். உலகில் வாழமுடியாது, பிறந்தவுடனேயே கொல்லப்பட்டதால், அக்குழந்தைகள் தோற்றம் பெறமுடியாது ஒளி இழந்து, இருள் போன்ற உருவினராய் மாறினர் என்ற செய்தியை இதனால் அறிந்து கொள்ள முடிகிறது. இவ்வாறு ஓரிரு வரிகளிலேயே, முழுமையாகப் பிறந்தும் வாழமுடியாது போய்விடுகின்ற, கொடுமையைக் கதைப்பாடலைக் கேட்கும் பலரும் பரிதாபப்படுகின்ற வகையில் கூறியிருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

4. **திருமாலின் சங்குசக்கரம் சந்திர சூரியனுக்கு உவமை**

தனக்குரித்தான பூசையையும், பூசைக்கான பொருட்களையும் இழந்ததால் இந்திரன் கோபம் கொண்டு மிகுந்த மழையை ஆயர்பாடியில் பொழியச் செய்தான். அதனின்றும் மக்களைக் காப்பாற்ற கண்ணன் கோவர்த்தனகிரியை எடுத்துக் குடையாகப் பிடித்தான். கரு மேகங்கள் திரண்டிருப்பதாலும், சந்திர சூரியர்களை வரவிடாமல் இந்திரன் தடுத்துவிட்டதாலும் ஆயர்குல மக்கள் கோவர்த்தன மலையின் கீழ் இருளில் வருந்தி நின்றனர். அதுகண்ட கண்ணன் தன் கரங்களிலுள்ள சங்கினையும் சக்கரத்தையும் முறையே சந்திரனாகவும், சூரியனாகவும் மாற்றி இரவிலும் பகலிலும் ஒளி கொடுக்க வைத்து மக்களைக் காக்கின்றான். இதனை,

"இருளாக இருக்கக் கண்டு ஏழைபங்கோனும் ஏதுசெய்தார்
சந்திரர்க்கும் சூரியர்க்கும் சங்குசக்கரம் தனைப் போட்டார்
இரவும் பகலுமாக ஏழைபங்கோனும் செய்து வைத்தார்" (704-706)

என்ற வரிகள் விளக்குகின்றன. இது ஓர் அழகான கற்பனையாகும். சங்கு, சக்கரத்தின் தோற்றத்திற்கொப்ப, ஏற்ற பொருட்களைத் தேர்ந்தெடுத்துப் பொருத்தமாகக் கூறியிருப்பது வெகு நயமாக உள்ளது. திருமாலின் சங்கு சக்கரம் மக்கள் மீது பக்தியுணர்வு கொள்ளவேண்டுமென்பதற்காகவும் இக்கற்பனை புகுத்தப் பெற்றுள்ளது எனலாம்.

## 5. ஆயிரம் மாப்பிள்ளைகளாகிய கண்ணன்

கம்சன் கதை வில்லுப்பாட்டின் இறுதிப் பகுதியில் கண்ணன் இடைக்குலப் பெண்கள் ஆயிரம் பேருக்கும் ஆயிரம் மாப்பிள்ளையானார் என்று சொல்லப்படுகிறது.

"ஆயிரம் வீடதிலும் ஆயிரம் மாப்பிள்ளையானார்" (951)

என்று கூறி அந்நிகழ்ச்சி விவரிக்கப்படுகிறது. ஆயிரம் கன்னிப் பெண்களை, மாயகர்ப்பம் தரிக்கச் செய்ததால் கண்ணன் ஒருவனே ஆயிரம் உருவங்களை ஒரேசமயத்தில் எடுத்து ஆயிரம் மாப்பிள்ளைகளாக இருந்தான் என்ற செய்தி இதனால் பெறப்படுகிறது. இதனைப் போன்ற ஒரு கற்பனையை மதுரகவி ஸ்ரீநிவாச அய்யங்கார் தன்னுடைய ஸ்ரீ கண்ணன் அவதாரத்தில் படைத்துக் காட்டியுள்ளார். கோபியர்கள் ஆடிக்கொண்டிருக்கிற காட்சியை அவர்

"ஒவ்வொரு கோபியர்க்கும் ஒருவனாகி நின்று
அவ்வயின் தானும்நின்று ஆடினான்அரோ" (561)

என்று பாடியுள்ளார். கோபியர்களுடன் கண்ணனும் இணைந்து ஆடிக் கொண்டிருக்கிறான். அப்பொழுது ஒவ்வொரு கோபியருடனும் ஒவ்வொரு கண்ணன் ஆடிக் கொண்டிருக்கிறான். அனைத்துக் கோபியரிடத்தும் உடன் நின்று ஆடுபவனாகக் கண்ணன் ஒரே சமயத்தில், ஒத்த உருவத்தில் பல உருவங்களை எடுத்தான் என்கிறார் மதுரகவி. எந்த ஒரு கோபிகையும் தன்னுடன் கண்ணன் ஆடவில்லையே என்ற ஏக்கம் கொள்ளக் கூடாது என்பதற்காகவும், கண்ணனின் லீலைகளை உணர்த்த வேண்டும் என்பதற்காகவும் இவ்வாறு கண்ணன் தோற்றம் காட்டினான் என்பதை உணர முடிகின்றது.

அதனைப் போன்றே இக் கதைப்பாடலிலும் ஆயிரம் மாப்பிள்ளைகளாக மாறுகிறான், கண்ணன். தன்னைத் திருமணம் செய்து

கொள்ளப் போகிறான் என்று நம்பிக் கொண்டிருக்கும் இடையர் குலப் பெண்களை ஏமாற்றக்கூடாது என்பதால் கண்ணன் இவ்வாறு மாறினான். இதனால் ஒவ்வொரு பெண்ணும் தன்னைத் கண்ணன் திருமணம் செய்து கொண்டான் என்று நிம்மதி அடைகின்றனர்.

இந்நிகழ்ச்சி கண்ணனின் மாயச் செய்கையை உணர்த்துவதற்கும் கண்ணன் லீலையைக் காட்டுவதற்கும் உதவியிருப்பதை அறிய முடிகிறது. வில்லுப்பாடலாசிரியன் கற்பனைத் திறனுடன் இந்நிகழ்ச்சியைப் படைத்திருப்பதும், பெண்கள் ஏமாற்ற மடைதலாகாது எனக்கருதி இவ்வாறு படைத்திருப்பதும் பாராட்டுக்குரியதாகும். வில்லுப்பாடலை ஆண்களை விட பெண்களே விரும்பிக் கேட்பதும், இரவு முழுவதும் இருந்து கேட்பது பழக்கமாதலால் அப்பெண்கள் திருப்தியுறுமாறு இந்நிகழ்ச்சி சித்திரிக்கப்பட்டுள்ளது.

## 6. முனிவனின் தவமும் சாபமும்

கம்சன் சாபமடைவதற்குக் காரணமாக ஒரு நிகழ்ச்சி புராணங்களில் காட்டப்படுகிறது. கம்சன் முற்பிறப்பில் காலநேமி என்னும் அசுரனாக இருந்து பல தீவினைகளைச் செய்து, பின் கம்சனாகப் பிறக்கின்றான். அப்போது பூமாதேவியின் முறையீட்டுக்கிணங்க கம்சன் கண்ணனால் கொல்லப்படுகின்றான். அசரீரி மூலம் தேவகியின் எட்டாவது மகனால் கம்சன் கொல்லப்படுவான் என உணர்த்தப்படுகிறது.

இவ்வில்லுப்பாட்டில் கம்சனின் இறப்புக்கு வேறு ஒரு காரணம் கூறப்படுகிறது. முனிவர் ஒருவர் பன்னிரண்டு வருடம் தவம் செய்து, பன்னிரண்டு வருடத்திற்கு ஒருமுறை பழுக்கும் அருங்கனியைப் புசிப்பதற்காகக் காத்திருக்கிறார். அக்கனியைத் தன் தங்கையர் கேட்டனர் என்பதற்காகக் கம்சன் பறித்துக் கொடுத்தான். இதனை அறிந்த முனிவர், தேவகியின் குழந்தைதான் கம்சனின் தலை அறுக்கும் என்று சபிக்கிறார். இச்சாபத்தினால் கனியைப் பறித்த அண்ணனும், அதனைப் புசித்த தங்கையும் தண்டனை பெறுகின்றனர். தேவகி தான் பெற்ற குழந்தைகளை இழந்து வருந்த வேண்டும் என்றும் கம்சன் தன்னைத் தேவகி மகனே கொல்லப் போகின்ற செய்தியை அறிந்து வருந்த வேண்டும் என்றும் எண்ணி இவ்வாறு சாபமிடுகின்றார். முனிவர், மாங்கனி, சாபம் எனும் இம்மூன்றும் நாட்டுப்புறக் கதைப்பாடல்கள் சிலவற்றில் கூறப்படும் ஒரு சிறப்புக் கூறாகும். வில்லுப்பாட்டைக் கேட்கும் மக்களுக்கு முனிவர் மற்றும் மாங்கனியின் கதை ஆர்வமூட்டும் எனக் கருதியே இக்கதைப் பாட்டாசிரியன் இதைப் புகுத்தியுள்ளான்.

மேலும் இதில் வரும் மாங்கனி பற்றிய கதை பல இராஜா ராணிக் கதைகளில் வருவதை ஒத்துக் காணப்படுகின்றது. அக்கதைகள் விவரித்துச் சொல்லும் முறைப்படியே "அந்த மரமானது துளிர்ப்பதற்கு மூன்று வருடமாகும். காய்க்கிறதுக்கு மூன்று வருடமாகும். பழுக்கிறதுக்கு மூன்று வருசமாகும். இப்படி பன்னிரண்டு வருடம் பன்னிரண்டு நாள் பன்னிரண்டு நாழிகை பன்னிரண்டு நிமிசமானால் ஒரு பழம் பழுக்கும்" என்று விவரிக்கப்பட்டுள்ளது.

7. **பறையறைவித்தல்**

கதைப்பாடல்களில் ஏதேனும் ஒரு செய்தியை மற்றவர்களுக்குத் தெரிவிக்க வேண்டுமென்றால் அதனைப் பறையறைந்து தெரிவிக்கும் முறை காணப்படுகிறது. சின்னத்தம்பி கதையில் விலங்குகளின் கொடுமை கண்டு, அவற்றை அழிக்க எண்ணி, சின்னத்தம்பி தமுக்கடிக்கின்றான். "சந்தோஷம் பொங்கியேதான் தமுக்கடித்தான் சின்னத்தம்பி" என்று வேட்டையாட வருமாறு சின்னத்தம்பி பறையடித்து அழைப்பது விளக்கப்படுகிது.

கம்சன் வில்லுப்பாட்டிலும் வனவேட்டைக்குச் செல்லும் போதும் கண்ணனைக் கொல்ல ஆட்களைத் தேடும் போதும் பறையடித்துச் சொல்லப்படுகிறது. இதனை

"அரசமன்னன் சொல்படியே
அறைந்தானே பறை[ை]யத்தான்
பட்டணங்கள் எத்திசையும்
பறையறைந்தான்பறைக்காரன்" (29-30)

என்பதால் அறிந்து கொள்ளலாம்.

கிராமங்களில் பஞ்சாயத்து, குத்தகை, மகமை மற்றும் விழாக்கள் குறித்து அறிவிப்பதற்கும், தெய்வ வருகையைத் தெரிவிப்பதற்கும், ஊர்க்கூட்டங்கள் பற்றிச் சொல்வதற்கும், ஊர்வரி செலுத்துவதற்கும், ஊர்ப்புகார்கள், வழக்குகள் தீர்ப்பதற்கும் பறையடித்துத் தெரிவிக்கும் வழக்கம் காணப்படுகிறது. பறையடிப்பதற்கெனச் சிலர் நியமிக்கப்படுகின்றனர். அவர்களிடம் செய்தியை ஊர்ப் பெரியவர்கள் கூறுவர். அச்செய்தி ஊர் முழுவதும் சென்று அடையும் விதமாகத் தெருக்கள் தோறும் அல்லது நாற்சந்திகளில் நின்று பறை அறைந்து கூறுவர். மக்கள் கூட வேண்டிய பொது இடம், நேரம் பிரச்சினை போன்றவை பறையறைவிப்பில் கூறப்படும்.

## 8. கருப்பம் தரித்தலும் மருத்துவச்சி மகப்பேறு பார்த்தலும்

குழந்தை உண்டாதலும், அதன் பிறப்பும் அதனால் ஏற்படும் வேதனையும், மருத்துவச்சியின் பங்கும் பெரும்பாலான நாட்டுப்புற இலக்கியங்களில் பேசப்படுகின்றன. கம்சன் வில்லுப்பாடலில் யசோதை பிரசவ வேதனையில் துடிக்கிறாள். அப்பொழுது அவள் கணவன் மருத்துவச்சியை அழைக்கச் செல்கிறார். அங்கு அவளுடன் நடத்தும் உரையாடலும், யசோதையின் வேதனை மிகுந்த கூற்றும் இவ்வில்லுப்பாட்டுக் கதையைக் கேட்கும் பெண்களுக்குப் பிரமிப்பை உண்டாக்குவதற்காக இடம் பெற்றுள்ளன. மருத்துவச்சியை அழைக்கும்போது கூறுவதும், அதற்கு அவள் பதில் கூறுவதும் உரையாடற்பாங்கில்அமைந்துள்ளன.

"ஒரு கழஞ்சி பொன்தாறேன் ஓவியமே எழுந்திரம்மா
ஒரு கழஞ்சி பொன்னதுதான் உரக்குழியிலே தூத்தெடுப்பேன்"
(264-265)

என்று மருத்துவச்சி மறுத்துரைக்கிறாள். இறுதியில் மகப்பேறு பார்ப்பதற்கான கூலி உயர்ந்ததும் மருத்துவச்சி இசைகிறாள். இசைந்து புறப்பட்டு வந்து ஆறுதல் கூறி குழந்தைப்பேறு பார்க்கிறாள். பிரசவ வேதனையில் பெண்கள் துடிக்கும்போது அவர்கள் ஏதாவது பாவங்களைச் செய்துவிட்டதால்தான் இத்தகு வலி ஏற்படுகிறது எனக் கவலையுறுகின்றனர். குழந்தை பிறந்த பின் அதைக் குளிப்பாட்டி, தாலாட்டுவது போன்றவை நடைமுறையிலுள்ளவை. அவற்றையே இவ்வில்லுப்பாட்டுக் கவிஞன் புகுத்தியுள்ளான்.

## 9. கவிஞனின் ஆளுமை

ஒரே நிகழ்ச்சி அல்லது செய்தி கேட்போர் மனதில் அழுத்தமாய்ப் பதில் பதிய வேண்டும் என்பதற்காக மீண்டும் மீண்டும் அதை வருணித்திருப்பது கவிஞனின் ஆளுமையைத் தெரிவிக்கின்றது. சான்றாக, தேவகிக்குக் குழந்தை பிறந்து, அக்குழந்தை அழுவது, அதுகுறித்துக் கம்சன் பேசுவது போன்றவை மீண்டும் மீண்டும் வருணிக்கப்படுகின்றன.

"குழந்தைவந்த மாயமென்ன கொடியிடையே கூறுமென்றார்
அறையிலே இருந்தவள்க்கு அருங்குழந்தை வந்ததென்ன
சிறையிலே இருந்தவள்க்கு சிறுகுழந்தை வந்தமாயமென்ன
என்றுசொல்ல கஞ்சனுமே ஏதுசொல்வாள் தங்கையரும்

என்னுடைய அண்ணா தனியிடம் போகவில்லை கற்பழிய
போகவில்லை
இட்டபங்கு தானிருக்க இடும்புகளாய் நடக்கவில்லை
வைத்தபங்கு தானிருக்க வம்புகளாய் நடக்கவில்லை
அரண்மனைதனிலே வந்து ஆண்டிருந்தானே கஞ்சராசன்" (178-198)

என்ற இந்த வருணனை முறை மறுபடியும் 201ஆவது வரிமுதல் 218ஆவது வரிவரை சொல்லப்படுகின்றது. மீண்டும் இதில் சில வரிகள் மட்டுமே (386-387), (392-393), (395-396) வருகின்றன. இவ்வாறு மீண்டும் மீண்டும் விளக்குவதால் செய்தியின் ஆழம், கேட்பவரின் மனதில் நன்கு பதிக்கப்படுகிறது. அதுமட்டுமின்றி, தேவகிக்கு நேர்ந்த சோகத்தையும் இவ்வாறு சொல்வதன் மூலம் கேட்போரை உணரச் செய்து விடலாம் என்பதற்காகக் கையாளப்படுகிறது. கேட்போர் பெரும்பாலும் பெண்களாக இருப்பதால் இவ்வுத்தி புகுத்தப்படுகிறது.

10. **இயற்கை வருணனை**

இந்திர பூசைக்காக ஆயர்பாடி மக்கள் புறப்படுவதை மிகநயமாக விவரிக்கும் முறை காணப்படுகிறது.

"காடு வனங்களும் சோலைவிட்டு
கல்லாறு புனலாறுவிட்டு
இஞ்சி என்ற தோப்புவிட்டு
இலுமிச்சம்வனம்கடந்தார்
அன்றுநட்டு அன்றறுக்கும்
அழகுசம்பா வயல் கடந்தார்
கொக்கினது இறகுதட்டும்
குடமாடி மலைகடந்தார்
ஈய் இருந்தால் அத்துவிழும்
இந்திராணிமலைகடந்தார்" (674 678)

என்ற இதுபோன்ற வரிகள் மிகுந்த நயத்துடனும், வெகு எளிமையுடனும் சுற்றுப்புறச் செழுமையை விவரிக்கின்றன.

## 11. படைப்பாளியும், பாட்டாளியும், கேட்போரும், படிப்போரும்

இதுவரை கூறப்பெற்ற ஒற்றுமை, வேற்றுமை, சிறப்புக் கூறுகள் என்பன இவ்வில்லுப்பாட்டை இயற்றியவர், கதைபாடுவோர், கதைக் கேட்போர் எனும் மூன்று நிலைகளில் கதையில் வழங்கப்பட்டுள்ளன.

இவ்வில்லுப்பாட்டுக்கதையை இயற்றிய அல்லது வில் பாடுவோர் தமிழ் இலக்கியங்களில் ஆழ்ந்த பயிற்சியற்றவராகவும், மிகுந்த படிப்பறிவில்லாதவராகவும் இருக்கலாம் கண்ணன் தொடர்பான இதிகாச, பாகவத புராணக் கதைகள் குறித்து இவர்கள் கேள்வி ஞானம் மட்டும் உடையவர்களாகவோ அல்லது சொற்ப கல்வி அறிவுடையவர்களாகவோ இருக்கலாம். அதனால் அவைகூறும் அனைத்துச் செய்திகளையும் இவர்கள் அறிந்தோ, அறியாமலோ, இவ்வில்லுப்பாட்டை இயற்றியோ அல்லது வில்லில் பாடியோ இருக்கலாம். ஒரு வேளை புராணங்கள் கூறும் எல்லாச் செய்திகளும் இவ்வில்லுப்பாட்டிற்குத் தேவையில்லை என அவர்கள் விட்டிருக்கலாம். தேவையானவற்றை மட்டும் எடுத்து அவற்றுடன் தம் கற்பனையையும் கலந்து இதைப் புனைந்தும், பாடியும் இருக்கலாம்.

வில்லுப்பாட்டு நிகழ்த்துவோர் தாம் வாழும் சுற்றுப்புறச் சூழல், தம் மனதில் பதியும் செய்திகள், தாங்கள் அவற்றில் கொள்ளும் ஈடுபாடு போன்றவற்றாலும், கதையைச் சொல்லும்போது மாறுதல்களையும், புதுமைகளையும் தம்மையறிந்தோ, அறியாமலோ புகுத்தியிருக்கலாம். வில்லுப்பாட்டை விரும்பிக் கேட்கும் மக்களுக்குத் தெரிந்த நாட்டுப்புறப்பாடல்கள் போன்றவற்றையும், அம்மக்களின் விருப்பு வெறுப்பு போன்றவற்றை நன்கு தெரிந்து கொண்டு அவர்களுக்குத் தேவையான கதைக் கூறுகளை மட்டுமே இப்படைப்பில் புகுத்தியிருக்கக் கூடிய வாய்ப்பிருப்பதை மறுக்கவியலாது. வில்லுப்பாட்டில் தம் முன்னோடிகள் பின்பற்றி வந்த படைப்பு நுணுக்கங்களையும், தனித்தன்மைகளையும், மரபுகளையும் அவ்வாறே பின்பற்ற வேண்டும் என்ற எண்ணத்தாலும் இக்கதைப்பாடலைப் புனைந்து பாடியிருக்கலாம். வில்லுப்பாட்டைப் பாடுவோர் தாம் கூறவரும் பாடுபொருளின் மேல் கொள்ளும் ஈடுபாடோ, அல்லது ஒருதலைப்பட்சமான விருப்பமோ, அல்லது நடைமுறை உந்துதலோ இவ்வில்லுப்பாட்டில் சில புதிய செய்திகளைப் புகுத்தி, பழைய கருத்துக்களை மாற்றிவிடச் செய்யவும் தூண்டும் என்பதில் ஐயமில்லை.

வில்லுப்பாட்டுக் கதையினைக் கேட்போர் இக்கதைபற்றி அறிந்தும் இருப்பர். ஒன்றுமே அறியாத நிலையிலும் இருப்பர். எனவே அவர்களும் உணரும் வகையிலும், அவர்களுக்கு வெறுப்பு ஏற்படாத வகையிலும் கதை சொல்லப்படவேண்டும் என்பதற்காகத் தேவையில்லாத செய்திகள் நீக்கப்பட்டும், கதையுடன் நேரடியான தொடர்புள்ள நிகழ்ச்சிகள் மட்டும் எளிமையான முறையில் பாடப்பட்டிருக்கலாம்.

வில்லுப்பாட்டுக் கதை நடைபெறும் கோவில் அல்லது பொதுவிடம் அல்லது தனியிடம், கேட்போர், சூழல், கதை சொல்லப்படும் கால அளவு, கேட்போரின் கேட்கும் திறன் முதலியவற்றையும் உணர்ந்து இவ்வில்லுப்பாட்டுக் கதை புனையப்பட்டு வில்லில் படிக்கப் பெற்றிருக்கலாம்.

வில்லுப்பாட்டைத் தொடங்கும் நேரம், அதுமுடிய வேண்டிய நேரம், அதன்பின்பு தொடங்கப்படவிருக்கும் விழா நிகழ்ச்சிகள் போன்றவை தொடர்பாகவும் வில்லுப்பாட்டு அமைவதால் அவற்றிற்கேற்ப அப்படைப்பு மாற்றம் பெறும். சான்றாக இரவு பதினொரு மணிக்கு மேல் வில்லுப்பாட்டுத் தொடங்கப்பெறுமானால் ஏறத்தாழ மூன்று மணி நேரமோ, நான்கு மணி நேரமோ தொடர்ந்து நடக்குமாறு பாடப்பெறும். விழாவில் பங்கேற்க வந்துள்ளோர் இரவு முழுவதும் விழித்திருக்கவும் அதிகாலை நான்கு மணிக்குமேல் தெய்வத்திற்குப் பூசை தொடங்கும் கால அளவுவரை கூட்டியோ, குறைத்தோ நிகழ்ச்சி நடத்தப்பெறும்.

நாட்டுப்புற மக்களின் அன்றாட வாழ்க்கையில் இடம்பெறுகின்ற அல்லது அவர்கள் நன்கு அறிந்து வைத்திருக்கின்ற செய்திகளை இடையிடையே சொல்லும்போதுதான் சோர்வுற்றவர்கள் உற்சாகத்துடன் கேட்க முனைவர் என்பதால் அதற்கேற்ப வில்லுப்பாட்டு வழங்கப்பெறும். பாடுவதற்கு எடுத்துக்கொண்ட கதைப் பொருளின் தன்மைக்கேற்ப வில்லுப்பாட்டின் அமைப்பும் இருக்கும். படித்தவர்களுக்குப் பாடப்பெற்ற புராணங்களில் பல செய்திகளும் இருக்கும். ஆனால் பாமர மக்களுக்கான வில்லுப்பாட்டில் தேவையான, நேரடியான செய்திகளே தேர்ந்தெடுக்கப்படும்.

கண்ணன் பிறப்பிலிருந்து கம்சன் வதை வரை மிகுந்த அளவிலான நிகழ்ச்சிகள் மூலக்கதையில் இடம் பெற்றிருந்தாலும் இவ்வில்லுப்பாட்டில்

குறைந்த அளவு நிகழ்ச்சிகளே கையாளப்பட்டிருக்கின்றன. கம்சன் வதை மட்டுமே இதன் பாடுபொருள் என்பதால் அதனொடு தொடர்புடைய நிகழ்ச்சிகள் மட்டும் விவரிக்கப்பட்டுள்ளன. பாரதக் கதையில் கண்ணனைப் பற்றிய செய்திகள் மிகுதியாகக் கூறப்பட்டிருக்கும். அவற்றில் சில விடப்பட்டு புதிதாக ஒன்றிரண்டு நிகழ்ச்சிகள் சேர்க்கப்பட்டும் புனையப் பெற்றுள்ளதையும் காணலாம்.

இவ்வில்லுப்பாடலில் கம்சன்தான் கதை எதிர்த்தலைவன். அதனால் அவனை முன்னணிப்படுத்தக்கூடிய நிகழ்ச்சிகள் நாட்டுப்புறக் கலைஞனின் பார்வைக்கேற்ற முறையில் படைக்கப் பெற்றுள்ளன. ஒரு வீரன் வேட்டையாடுதலையும், அவன் சாபம் பெறுதலையும், அதனால் அவன் எதிர்பாத்திரமாக மாறிக் கொடுமைக் காரனாதலையும், கதைத்தலைவனான கண்ணனை அழிக்க பலவாறு முயலுதலையும், இறுதியில் தோல்வியுற்று அழிந்துபடுதலையும், நன்கு சித்திரித்து அவனுக்கு அழியா இடம் தேடி வைத்துள்ள படைப்பாளி, பாட்டாளியின் சிறப்பை இக்கதைப்பாடலில் காணமுடிகிறது.

தேவகி படும் துன்பத்தையும், யசோதை படும் வேதனையையும் விரிவாக இக்கதைப்பட்டு விளக்குகின்றது. கதை கேட்கும் பெண்களையும், மற்றோரையும், பெண்களின் வேதனையைச் சொல்லி மனத்தை உருக்குவதன்மூலம் வில்லுப்பாட்டில் இவை விவரிக்கப்பட்டுள்ளன. இதுவும் படைப்பாளி, பாட்டாளியின் திறமையைப் பறைசாற்றி நிற்கின்றது.

***வில்லுப்பாட்டில் சொல்லாட்சி***

1. கம்சன் வில்லுப்பாட்டுக் கதைப்பாடலில் வெவ்வேறு வகையான பொருள்களைத் தரும் முறையில் சில சொற்கள் அமைந்திருக்கின்றன. சான்றாக வகை, திருக்கூத்து, பாவினையா எனும் இவை அந்தந்தச் சூழ்நிலைக்கேற்ப மாற்றிப் பொருள் தருவதை நாம் ஊகிக்க முடிகிறது.

"பத்திரகாளி அம்மனுந்தான் பாவினையா அவதரித்தாள்" (256) என்று சொல்லும்போது, ஏற்கனவே சிவன், திருமால், காளி மூவரும் யோசனை செய்தவாறு, திட்டமிட்டபடி அவள் பிறந்தாள் என்பதைப் புரிந்து கொள்ள முடிகிறது. மற்றுமோரிடத்தில்

"பழையபடி உன் சிறையில் பாவினையாய் இருக்கவேண்டும்" (330) என்று கூறப்பட்டுள்ளது. தேவகி தன்மகன் கண்ணனை, வேறொரு சிறையில் இருக்கும் தந்தை வசுதேவரிடம் விட்டுவிட்டு ஒன்றும் தெரியாதவள் போன்று இருக்க வேண்டும் என்ற பொருளைத் தருகிறது. இவ்வாறு இடத்திற்கேற்றவாறு பொருளை உணர்ந்து கொள்ளும் வகையில் சொற்கள் பயன்படுத்தப்பட்டிருக்கின்றன.

2. நாட்டுப்புற மக்களிடம் வழக்கத்திலுள்ள பல சொற்கள் இதில் மிக இயல்பாகக் கூறப்பட்டுள்ளன. ஊமாண்டி பெத்தநாய் (45), களவாணி பொட்டநாய் (48), தரிக்குதில்லை (60), தாட்டீகமாய் (71), ஏலுமட்டும் (76), மசங்கி (111), மாஸ்த்தை (202), அவுருவமா (213), தூத்தெடுப்பேன் (265), குறுக்கு (288), பொம்மிபொம்மி (296), கருமருந்து (291), இடிமருந்து (292), அரைமருந்து (293), முத்தெடச்சி (513), ஏச (533), நகண்டு (638), சம்ராயம் (789), கூதல் (878) போன்ற சொற்கள் கதைப் போக்கிலேயே பயன்படுத்தப்பட்டிருக்கின்றன. இந்நூலின் இறுதியில் இடம்பெறும் சொல்லகராதி, பெயரகராதிகளிலிருந்து மேலும் பல சிறப்புகளைத் தெரிந்து கொள்ளலாம்.

**கதைப்பாடலில் வரும் மக்களின் நம்பிக்கைகள்**

பண்பட்ட மக்களுக்கேயுரிய பலவிதமான இரக்க உணர்வுகளும், நம்பிக்கைகளும் இக்கதைப்பாடலில் காட்டப்பட்டிருக்கின்றன. சான்றாக,

"அண்டினோரை ஏசினேனோ ஆண்டிகளை அடித்தேனோ
பிச்சைக்கு வந்தவரை நானும் பின்னேவரச் சொன்னேனோ" (285-286)

என்று ஓரிடத்தில் சொல்லப்படுகிறது. யசோதை பிரசவ வேதனையில் இவ்வாறு புலம்புகின்றாள். பேறுகால வலியென்பது பெண்கள் அனைவருமே அனுபவிக்கும் வேதனைதான் என்றாலும் இங்கு அவள் அதனை நம்பிக்கைகளோடு இணைத்துப் பார்க்கிறாள். தன்னிடம் வந்து இரந்து நின்றவர்களுக்கு ஒன்றும் கொடுக்காமல் அனுப்பியிருப்பேனோ என்று அவள் தன் வேதனைக்குக் காரணம் தேடுகின்றாள். இங்கு நம்பிக்கைகளோடு மனிதாபிமானமும் ஒவ்வொருவருக்கும் இருந்தாக வேண்டும் என்பது உணர்த்தப்படுகிறது. தான் இரக்கமின்றி நடந்து கொண்டோமோ என்றும், அதனால்தான் இத்தகைய வேதனையை அனுபவிக்கின்றோமோ என்றும் அவள் கூறுவது கேட்போருக்கு அறிவுறுத்துவதுபோல் உள்ளது. மற்றோரிடத்தில்,

"அருந்தவசு செய்தவள்க்கு ஆண்குழந்தை இல்லாமல்
பெருந்தவசு செய்தவள்க்கு(ப்) பெண்குழந்தை பிறந்ததென்ன"
(306-307)

என்று யசோதை தனக்குப் பெண் குழந்தை பிறந்து விட்டதை எண்ணி வருந்துகின்றாள். குழந்தை வேண்டிச் செய்யும் தவத்தின் சிறப்பே ஆண் குழந்தை பெறுவதுதான் என்பது இதனால் தெரிகின்றது. இவ்வாறெல்லாம் வருந்தித் தவம் செய்து பெற்ற குழந்தை பெண்ணாகப் போய்விட்டதே என்று வருந்தும் தாய்களின் பிரதிநிதியாக யசோதை காட்டப்படுகின்றாள். அவளின் தவத்தின் விளைவாய் காளியே அவள் வயிற்றில் உதிக்கிறாள். அதனை அறியாததாலும், பெண்ணென்பதாலும், அவள் புலம்புகின்றாள். மனதிற்கும், இல்லறத்திற்கும், இறந்தபிறகு வானுலகு செல்வதற்கும் உறுதுணையாய் இருப்பது ஆண் குழந்தைதான் என்ற சமூக நம்பிக்கை இங்குக் காட்டப்படுகிறது.

**கம்சன் - ஒரு புதிய தோற்றம்**

புராணங்களில் கம்சன் தீய குணங்களை உடையவனாகவே காட்டப்பட்டுள்ளான். அவன் முற்பிறவியில் காலநேமி என்னும் அசுரனாக இருந்தவன். பின்னர், அரசனாக இப்பிறவியில் இருப்பவன் என்றாலும் அசுரர்களுக்கேயுரிய இரக்கமற்ற தன்மையுடையவனாகவே காட்டப்பட்டுள்ளான். இவ்வில்லுப்பாட்டின் தொடக்கத்தில் அவன் அனைத்து நல்ல குணங்களும் கொண்ட ஓர் இயல்பான மனிதனாகவே காட்டப்பட்டிருக்கிறான். பின்பு எதிர்பாத்திரமாகச் சித்திரிக்கப்படுகின்றான்.

**சகோதர பாசம் உடையவன்**

கம்சன் தன் தங்கையராகிய தேவகியிடத்தும், ரோகிணியாளிடத்தும் மிகுந்த பாசம் உடையவனாக இருக்கின்றான். அண்ணன் வனவேட்டைக்குப் போகிறான் என்பதை அறிந்த தங்கையர் இருவரும், அவனுடன் தாங்களும் காட்டிற்கு வனவேட்டையைப் பார்க்க வரப் போவதாகத் தெரிவிக்கின்றனர். அவர்களை விலங்குகள் வாழும் காட்டிற்கு அழைத்துச் செல்ல அவன் விரும்பவில்லை என்றாலும் அவர்கள் மனம் நோக, அவர்களைத் தடுத்துவிட்டுச் செல்லவும் விரும்பவில்லை. கானகத்தில் தங்கையர் தொல்லைப்படுவார்களே என்றெண்ணி கலக்கமடைகிறான். ஆனால் அவர்களோ,

"இத்தனையும் பார்க்காவிட்டால்
இப்போது மாண்டிடுவோம்

*மாண்டிடுவோம் அண்ணாவே*
*மண்மேலே இறந்திடுவோம்"* (72-73)

என்று திட்டமாகக் கூறிவிடுகிறார்கள். எங்கேதான் அழைத்துச் செல்லாவிட்டால் அவர்கள் இறந்துவிடுவார்களோ என்று அவன் அஞ்சுகின்றான். தங்கைகளின் மேல்கொண்ட பாசத்தினாலும், அவர்களின் விருப்பத்தை நிறைவேற்றுவது அண்ணனுடைய கடமை என்பதாலும் அவன் அவர்களைக் காட்டிற்கு அழைத்துச் செல்ல முடிவு செய்கின்றான். அவனுடைய இந்த இரக்க உணர்வுதான் பின்னர் அவன் கொடுமைக்காரனாக மாறவும், இறுதியில் இறப்பதற்கும் காரணமாக அமைகின்றது எனும் கருத்து கதைப்படலாசிரியனால் நன்கு புனையப்பட்டுள்ளது.

வனவேட்டைக்குச் சென்ற இடத்தில் கம்சனின் தங்கையருக்குத் தாகமெடுக்கின்றது. அவர்கள் தம் அண்ணனிடம் தண்ணீர் கேட்கின்றார்கள். அவன் தேடி அலைந்தும் தண்ணீர் கிடைக்கவில்லை.

*"பார்த்தானே கஞ்சராசன்*
*பரவித்து ஏதுசெல்வான்"* (102)

என்ற வரிகளால் அவன் தன் தங்கையர் மேல் கொண்ட கவலையை அறிந்து கொள்ளலாம். தங்கையரே ஒரு அருங்கனியைக் கண்டு, அதனைப் பறித்துத் தரச் சொல்லுகின்றனர். அவர்களுக்குத் தாகத்தால் ஏற்பட்ட துன்பத்தைக் காணப் பொறுக்காத கம்சன், ஆராய்ந்து பார்க்காது அந்தக் கனியை அறுத்துத் தாகம் தீர்க்க அளித்தான். அவர்கள் மேல் வைத்த பாசத்தாலும், அண்ணனுக்கேயுரிய கடமையைச் செய்ய வேண்டியிருந்ததாலும், அரசன் என்ற முறையில் அக்கனியைக் கொய்வதில் தவறேதுமில்லை என்பதாலும் அவ்வாறு செய்கிறான். பின் அவன் பெருந் தொல்லைகளுக்கு ஆளாகினான்.

*"தங்கைவயத்திலே பிறக்கும் பிள்ளை*
*தலையறுக்கும் வேடுவனே*
*மருமகனாய்த்தான்பிறந்துன்*
*மார்பைப்பிளக்கும் வேடுவனே"* (146-147)

என்று அக்கனியைப் பறித்ததற்காக முனிவரிடம் சாபம் பெறுகின்றான். சகோதர பாசத்தின் காரணமாக அவன் உயிரைப் பின்னர் இழக்கிறான். அவன் எல்லோரையும் போன்று நல்ல குண இயல்புடையவன்தான் என்பதை இதனால் அறிந்து கொள்ளலாம்.

**கவலை கொள்ளும் கம்சன்**

முனிவரிட்ட சாபத்தைப் பெற்றுக் கொண்டு கம்சன் ஏதும் பேசாமல் திரும்புகிறான். தான் ஒரு மன்னன் என்றாலும், அவன் கையில் படைகள் இருந்தாலும், அவன் முனிவனை ஒன்றும் செய்யவில்லை. மிகுந்த கவலையுடன் தன் விதியை எண்ணி வேதனையுற்றுத் திரும்புகிறான்.

"வாய்த்த அறையிலே தானே படுத்து தீயிலே இட்ட மெழுகதுபோல் உருகி வாடி மசங்கி மூடிப் படுத்தான்"

என்பதால் அவன் துன்பத்தை அறிந்து கொள்ளலாம். தீயவனுக்குரிய எந்த இயல்பும் அற்று, அவன் சாதாரண பண்புநலன்களைக் கொண்டவனாகவே இங்குக் காட்டப்பட்டிருக்கிறான்.

**பிறர் சொல்பேச்சைக் கேட்கும் கம்சன்**

தான் கொண்ட கவலையால் கம்சன் தனக்குள்ளேயே தவித்துக் கொண்டிருக்கிறான். அப்போது அங்கு வந்த மந்திரி,

"கேளுமையா ராசமன்னா
கீர்த்தி உள்ள வார்த்தை ஒன்று
வாசுதேவனை ஒரு அறையதிலும்
வான்மயிலாளை ஒரு அறையதிலும்
அருஞ்சிறையில் வைத்ததுண்டால்
அவர்தனக்குப் பிள்ளையில்லை" (162-164)

என்று அவனுக்குத் தீய யோசனைகளைச் சொல்லிக் கொடுக்கிறான். தன் தங்கைகளுக்காக எதனையும் செய்த கம்சன், தன் உயிர் போகப் போகின்றதே என்ற அச்சத்தில்தான் பின்னர் மாறிவிடுகின்றான். நூறாவதாகப் பிறந்ததாகக் கூறப்பட்ட பத்திரகாளியைக் கொல்ல முயன்று தோல்வியுற்று வருத்தமடைந்த நிலையில் கம்சன் இருக்கிறான். அப்போதும் மந்திரி தான்,

"அந்த வார்த்தை காதில் கேட்டு அறிவுள்ள மந்திரியும்
அஞ்சவேண்டாம் மலைய வேண்டாம் அரசமன்னா
சொல்லக்கேளும்
ஆயர்பாடி(ப்) பட்டணத்தில் அனந்தகிருஷ்ணனைக் கொல்வதற்கு(ப்)
பாதிநாடு தாறேன் என்று பறையறைய வேண்டுமென்றான்"

(139-142)

என்று வழி சொல்லிக் கொடுக்கின்றான். எவ்விதத் தீய சிந்தனைகளும் இல்லாதிருந்த கம்சனை மந்திரிதான் தீய வழிகளைச் சொல்லிக் கொடுத்து மாற்றுகின்றான்.

ஆயர்பாடியில் இருக்கும் கண்ணனை வரவழைப்பதற்குக்கூட அதே மந்திரிதான் வழி சொல்கின்றான். இனிமேல் தான் என்ன செய்வது என்று கம்சன் தவித்துக் கொண்டிருக்கும் வேளையில் அவன்தான் திவசத்திற்காகப் பாற்குடங்களுடன் தாயாரும், குழந்தைகளும் வர வேண்டுமென்று ஆணையிடும்படிச் சொல்லித் தருகின்றான். அதன் காரணமாகவே கண்ணன் மதுராபுரிக்கு வருகின்றான். கம்சன் வதையும் நடக்கின்றது.

**எதிரியின் வலிமையை உணரமுடியாதவன்**

கம்சன் தன்னைக் கொல்லத் திருமாலே கண்ணனாக அவதாரம் எடுத்து வந்திருக்கிறார் என்பதை அறியாதவனாக இருக்கின்றான். தன் எதிரி எத்தகைய வலிமை கொண்டவன் என்பதைத் தெரிந்துகொள்ளும் தந்திர புத்தி அற்றவனாகவே இருக்கிறான்.

"அப்போதந்த ராசமன்னன் அறியாத குழந்தை மேலே
கண்ணனென்று அறியாமல் கஞ்சன் படையை ஏவிவிட்டான்"

(768-769)

என்பதிலிருந்து அவன் தன் எதிரியின் வலிமை அறியாமலேயே செயல்படுகிறான். தன் படைகளை எல்லாம் கண்ணன் மாயச் செய்கையால் அழித்துவிட்டானே என்ற கோபத்தால் கண்ணனுடன் நேருக்குநேர் சண்டை செய்து மடிகின்றான்.

ஆரம்பத்தில் சாதாரண மனிதனுக்குரிய இயல்புகளுடனும், சகோதரிகளின் மேல் மிகுந்த பாசம் உடையவனாகவும் இருக்கின்ற கம்சன், தன் உயிர் போகப் போகின்றதே என்ற நினைப்பினாலும், கவலையாலும், மந்திரியின் தீய வழிகாட்டுதலாலும் தீயவனாக உருவெடுக்கின்றான். இந்த முறையில் தான் கம்சனின் உருவாக்கம் இவ்வில்லுப்பாட்டில் சித்திரிக்கப்பட்டுள்ளது. இவ்வாறு நல்லவனாயிருந்து தீயவனாக மாறி அவலமாக இறக்கும் கம்சனின் பாத்திரப்படைப்பு இவ்வில்லுப்பாட்டில் புது அணுகுமுறையாகும்.

**கம்சனின் பாத்திரப்படைப்பு**

கம்சன் கதைப்பாடல் கம்சன் பெயரில் வழங்கப்படுவதால் இது கம்சன் பற்றிச் சிறப்பாகக் கூறுகிறது. கம்சன், தன் தேவகியின் மைந்தனால்

இறக்கப் போகிறோம் என்று தெரிந்த பின்பும், அவன் இரக்கமற்றவனாக நடந்து கொள்ளவில்லை. இனிமேல் என்ன நேரப்போகிறதோ என்ற குழப்பத்தில் இருக்கிறான். புராணங்களிலும் வசுதேவர் தான் பெற்ற குழந்தைகளைக் கம்சனிடம் கொண்டுவந்து தருகின்ற போதும் அவன் அவர்களைக் கொல்ல முயலவில்லை. நாரதரே அவற்றைக் கொல்லத் தூண்டுகிறார். நாரதர் கூறியதைக் கேட்டு குழந்தைகளைக் கொன்றால் தான் உயிர் பிழைக்க முடியும் என்று முடிவு செய்து அக்குழந்தைகளைக் கொல்லுகின்றான். தானாக முடிவு செய்யாமல் நாரதரின் வருகைக்குப் பின்னர்தான் இரக்கமற்றவனாக நடந்து கொள்கிறான்.

கம்சன் வில்லுப்பாட்டுக் கதைப்பாடலிலும் கம்சன் முனிவரிடம் சாபம் பெற்றபின், மிகுந்த வருத்தத்துடன் செயலற்று இருக்கிறான். அப்போது அவனுடைய மந்திரி அங்கு வந்து, அவனுக்கு யோசனை சொல்லிக் கொடுக்கின்றான. தேவகியையும் வசுதேவனையும் தனித்தனியே சிறையில் அடைக்கச் சொல்லுகிறான். மேலும் ஆயர்பாடியில் வளரும் கண்ணனைக் கொல்வதற்கும் மந்திரிதான் வழி சொல்லிக் கொடுக்கிறான்.

> "அந்த வார்த்தை காதில்கேட்டு அறிவுள்ள மந்திரியும்
> அஞ்ச வேண்டாம் மலையவேண்டாம் அரசமன்னா சொல்லக்கேளும்
> ஆயர்பாடி(ப்) பட்டணத்தில் அனந்தகிஸ்டணனைக் கொல்வதற்கு(ப்)
> பாதிநாடு தாறேனென்று பறையறைய வேண்டுமென்றான்"
>
> (439-442)

என்று வழிசொல்லிக் கொடுக்கின்றான். இவ்வாறு தனக்கென்று சிந்தனை எதுமின்றி அடுத்தவர்களின் தூண்டுதலினால் செயல்படுபவனாகவே கம்சன் காட்டப்பட்டிருக்கின்றான்.

**கண்ணன் - பாத்திரப்படைப்பு**

இதிகாச, புராணங்களில் கண்ணன் தெய்வாம்சம் நிறைந்தவனாகக் காட்டப்பட்டுள்ளான். அவனுடைய ஒவ்வொரு செய்கையும் காரண காரியங்களுக்குட்பட்டுத்தான் அமைந்திருக்கும். அவன் புரிகின்ற லீலைகளும், குறும்புச் செயல்களும் தத்துவார்த்தமானவையாகவே காட்டப்பட்டிருக்கும். ஆனால் வில்லுப்பாட்டில் அவ்வாறு அவன் சித்திரிக்கப்படவில்லை. திருமால் கண்ணனாக வந்து அவதரித்தார் என்ற செய்தி கூறப்படுகிறது. பிறர் வீடுகளில் வெண்ணை திருடி உண்ணும் நிகழ்ச்சி காட்டப்பட்டுள்ளது.

குறும்புகள் நிறைந்த சிறுவனின் செயல்களாகவும், அதிலும் அப்பெண்களுக்குச் சற்றே கோபத்தை உண்டாக்குகின்ற செயல்களாகவுமே அவை சித்திரித்துக் காட்டப்பட்டுள்ளன. அது போன்றே இந்திர பூசைக்காகக் கொண்டு சென்ற பொருட்களைத் திருடி உண்டான் என்று விவரிப்பதால் குறும்புக் குணமுள்ள சிறுகுழந்தையாகவே கண்ணன் படைக்கப்பட்டுள்ளதை அறிந்து கொள்ளலாம்.

இவையன்றி, பாவையரைப் பழிவாங்குகின்ற இயல்பும் கொண்ட சிறுவனாகவும் காட்டப்பட்டிருக்கின்றான். தான் வெண்ணை திருடி உண்ட போது தன்னை ஆயர்குலப் பெண்கள் குட்டினார்கள் என்பதற்காக, அவன் பின்னர் பழிவாங்குகிறான். அவர்களை மாய கர்ப்பம் தரிக்கச் செய்து, மனம் கலங்க வைக்கின்றான். திருமணம் செய்து கொள்ள வேண்டுமென்றால் நிறைய பொன் கொண்டு வரவேண்டும் என்கிறான். அவ்வாறு கொண்டு வந்த பொன்னைக் காற்றில் பறக்குமாறு செய்து விடுகிறான். பின்னர் மீண்டும் பொன்வாங்கி அவர்களைத் திருமணம் செய்து கொள்கிறான். தான் செய்த திருட்டை உணராமல் அத்திருட்டைக் கண்டித்த பெண்களைப் பழிவாங்குபவனாகக் காட்டப்பட்டுள்ளான். ஒரு சாதாரண குறும்புச் சிறுவன் நடந்து கொள்வது போல் தான் கண்ணனும் நடந்து கொண்டான் என்று காட்டவே இவ்வாறு படைக்கப் பெற்றுள்ளான்.

இப்பாடலின் இறுதிப் பகுதியில் கண்ணன் அப்பெண்களின் கர்ப்பத்தை மறையச் செய்து, தானும் மறைந்து விடுகிறான். இங்குக் கண்ணனின் மாயத்தன்மையும், தெய்வீகத் தன்மையும் இணைக்கப்படுகின்றன. கண்ணன் கம்சனைக் கொல்லும் நிகழ்ச்சியில், குழந்தையாயிருந்த கண்ணன் திருமாலின் உருவத்தை எடுத்துக் கம்சனை அழிக்கின்றான். சிறுகுழந்தையாயிருக்கும் கண்ணன் எவ்வாறு அவ்வளவு பெரிய கம்சனைக் கொன்றான் என்ற கேள்வி எழாமலிருக்கவே, படைப்பாளி திருமாலாக மாறி வதை செய்ததாகக் காட்டுகின்றான். இவ்வாறு பாகவத புராணங்கள் காட்டும் கண்ணனிலிருந்து மாறுபட்டு, சற்றுப் புதிய முறையில் இவ்வில்லுப்பாட்டில் கண்ணன் பாத்திரப் படைப்பு அமைந்திருப்பதை அறிந்து கொள்ள முடிகிறது.

**கதை முடிவு**

கம்சன் வில்லுப்பாட்டுக் கதையில் கம்சனின் இறப்புடன் கதை முடியாமல் கண்ணன் பங்கேற்கும் வேறு சில நிகழ்ச்சிகளும்

கூறப்பட்டுள்ளன. எந்த ஒரு கதையும் சுபமாக முடிய வேண்டும் என்பது நம் மரபு. அதிலும் நாட்டுப்புறக் கலைஞர்கள், தங்கள் அனைத்துக் கதைகளிலும் மங்கலமான முடிவைக் காட்டி, கேட்போரை இறுதியில் மகிழ்ச்சிப்படுத்துவார்கள். அதற்காக இக்கதையில் கம்சனின் இறப்புடன் கதையை அமங்கலமாக முடிக்காமல், கண்ணனின் திருமணத்துடன் முடிக்கப்படுகிறது. இவ்வில்லுப்பாட்டுக்கு 'அரியோன் கதை' என்ற மற்றொரு பெயர் இருப்பதற்கேற்ப கம்ச வதைக்குப் பின்னரும் அது தொடர்ந்து கண்ணனின் லீலைகளைக் கூறி முடிகின்றது. கம்ச வதைக்குப் பின், மதுராவை உக்கிரசேனர் ஆள்வதும், தேவகி - வசுதேவர் சிறையிலிருந்து வெளிவருவதும், கண்ணனும், பலராமனும் கல்விகற்க அனுப்பப் பெறுவதும், அதன்போது கண்ணன் செய்யும் சாகசங்களும் பிறவும், பாகவதத்தில் விரிவாகக் கூறப்பெற்றுள்ளன. சிறுவனான கண்ணனின் சிறப்புக்குப்பின், அவன் இளைஞனான பின்னரும், பாண்டவர் தோழனாய்ப் பணியாற்றிய பின் தன் சொந்த அரசியல் வாழ்வில் கருத்தூன்றுவதும் பிறவும் அக்காப்பியத்திலும், பிற புராணங்களிலும் விரிவாகச் சித்திரிக்கப்பெற்றுள்ளன. இத்தகு நிகழ்ச்சிகளில் சிலவற்றைக் கூறி "இவ்வில்லுப்பாட்டானது கம்சன் கதையாயினும் 'அரியோன் கதை'யே" என்று வலியுறுத்தி, மக்களிடம் அரி பக்தியை உணர்த்தி, இனிதே முடிகின்ற நிலை இக் கதைப்பாட்டின் வெற்றிக்கு வழிவகுக்கின்றது.

# கம்சன் வில்லுப்பாட்டு

### விருத்தம்

முந்தம் பரத்தி முக்கோண சக்களத்தி
இன்னம் பரத்தி ஈசனுக்கு இவளொருத்தி
எங்கெங்கும் ஏகமாய் சூலி கபாலி
ஏற்றதோர் வயிரவி பாணிவேணி அந்தரி
சுந்தரி நிரந்தரி புரந்தரி ஆரணிவாரணி
காரணி நாரணி சீரணி பூரணி
சிந்தையில் உனைப்பணிந்தேன் யான்சிற்பரத்தி முப்புரத்தி
அரியோன் கதைபாடுதற்கு அருள் புரிவாய் 1

---

1. முந்தம் < முந்தன் - இறைவன், சிவன்.
பரத்தி < பரைத்தி - பார்வதி.
முக்கோண < முக்கணன் - மூன்று கண்களையுடைய சிவபெருமான்.
சக்களத்தி - மனைவி.
இன்னம் - இன்னும்.

2-3. ஏகமாய் - எல்லா இடங்களிலும்
சூலி, கபாலி, வயிரவி < பைரவி, பாணி, வேணி, அந்தரி, சுந்தரி, நிரந்தரி, புரந்தரி, ஆரணி, வாரணி, காரணி, நாரணி, சீரணி, பூரணி - பார்வதியின் பல பெயர்கள்.

4. சிற்பரத்தி - சிற்பரன் என்னும் அழைக்கப்படும் சிவனின் மனைவியான பார்வதி.
முப்புரத்தி - திரிபுரம் எரித்தோனின் மனைவி; அல்லது திரிபுராதியர்க்குத் துணையாயிருந்த முப்புராதி அம்மன் எனவும் கூறலாம்.
சிந்தை - எண்ணம், மனம்.
பணிந்தேன் - வணங்குகின்றேன்.
அரியோன் - திருமால்.

## இராமன் துதி

### விருத்தம்

நாடிய பொருள் கைகூடும்
ஞானமும் புகழு முண்டாம்
வீடுயர் வழியு மாக்கும்
வேரியங் கமலை நோக்கும்
நீடிய வரக்கர் சேனை
நீறுபட் டொழிய வாகை
சூடிய சிலையில் ராமன்
றோள்வலி கூறு வோர்க்கே 2

### வேறு

கருமணி உண்டு காயாம்பு மேனியுண்டு
கருணை உண்டு
ஒருமணி யுண்டு என்று உள்ளத்தில்
உபதேசம் சொல்ல
குருமணி உண்டு வெகுகோடி சூரியபர
காச முண்டு
திருமணி உண்டு ராம ரெகுராமனென்ற
தேசம். உண்டே 3

### காப்பு

### வேறு

கரியமால் மருகா கணநாதா
காத்தருள்வாய் இக்கதையை

---

5-8. இப்பாடல் கம்பராமாயணத் தனிப்பாடல்.

9. கருமணி - கருமை நிறம் கொண்டவன் திருமால்.
காயாம்பூ - நீலமும் கருப்பும் இணைந்த வண்ண நிறத்தவன்.

11. குருமணி - குண்டுமணி.
பரகாசம் < பிரகாசம் - ஒளிபொருந்திய.

13. கணநாதா - பூதகணங்களின் தலைவனான விநாயகப் பெருமான்

## கதை

### நாட்டுவளம்

நாடான நாடதிலே
நல்ல மதுராபுரி யானதிலே
தேசமானதோர் தேசத்திலே
தென்மதுராபுரியானதிலே
வாடாமல்வாழ்ந்திருந்தான்
மன்னன் கஞ்சராசனவன்
மாதமும்மாரிமழைபொழியும்
மதுராபுரியானதிலே
வயல்களெல்லாம் சென்னல்கன்னல்
வரப்பெல்லாம் முத்துருளும்
தெருவெல்லாம் பூம்பாளைவீசும்
தென்மதுராபுரியதிலே
வாழைகள் பழுத்துதிரும்
மந்தினங்கள் கூத்தாடும்

---

14. மதுராபுரி - கண்ணன் பிறந்த இடமான இது, இப்பொழுது மதுரா என்றழைக்கப்படுகிறது. ஆக்ராவின் அருகே உள்ளது. யமுனை நதிக்கரையின் மேல் அமைந்துள்ள நகரம் இது. மதுரமுள்ள பொருள்கள் நிறைந்ததனால் இப்பெயர் பெற்றது. இதனை வடமதுரை எனத் தமிழிலக்கியங்கள் கூறும்.

15. தென்மதுராபுரி- கம்சன் ஆண்ட பகுதி, மதுராபுரிநாட்டின் தெற்கு பகுதி.

16. வாடாமல் - எவ்விதத் துன்பமும் நேராமல்.
கஞ்சன் < கம்சன் - யதுவம்சத்தைச் சேர்ந்த போசகுலத்தவன். உக்கிரசேனனின் புதல்வன். இவன் முற்பிறப்பில் காலநேமி என்னும் அசுரனாக இருந்தவன். தங்கை தேவகியையும், அவள் கணவன் வசுதேவரையும் ஒருநாள் விளையாட்டாய் தேரில் அழைத்துச் சென்றான். அப்போது அசரீரியாக ஒரு குரல், தேவகியின் வயிற்றில் பிறக்கும் எட்டாவது குழந்தை உன்னைக் கொல்லும் என்று சொன்னது. அதன்படியே பின்னர், எட்டாவது குழந்தையாகப் பிறந்த கண்ணன் கம்சனை அழித்தான்.

17. மும்மாரி - மாதந்தோறும் பெய்யும் மூன்று மழை, வளமையும் செம்மையும் நிறைந்த நாடு என்பதைக் குறிக்க.

18. சென்னல் < செந்நெல் - சிவந்த அரிசியைக் கொண்ட நெற்பயிர்கள்
கன்னல் - கரும்பு.

19. பூம்பாளை - மணம் கமழும் தென்னம்பாளை.

20. மந்தினங்கள் - குரங்குக் கூட்டங்கள்

### வசனம்

இப்படிப்பட்ட மதுரைதன்னை ஆண்டிருந்தானே கஞ்சராசன். ஆண்டிருக்கிற நாளையிலே, அம்மதுராபுரி பட்டணத்தில் கஞ்சனுடைய தங்கையர்கள் காரிளைமார் இரண்டுபெண்களும் தேவகியாள் என்றொருத்தி; ரோகிணியாள் என்றொருத்தி;

## திருமணம்

தேவகியாள் என்றபெண்ணை
சிறந்தமணம் முடிப்பதற்கு
வடமதுராபுரிபட்டணத்தில்
வாசுதேவன் ஆண்டிருந்தான்
ஆண்டிருக்கிற நாளையிலே
அம்மதுராபுரிபட்டணத்தில்
வசுதேவ ராசனுக்கு
மாலையிட்டார் தேவகியை
அப்படியே மாலையிட்டு
அரசாண்டிருந்தானே வாசுதேவன்

---

காரிளைமார் - மிகுந்த இளமைப் பருவமுடைய மங்கையர்கள்.
தேவகியாள் - இவள் உக்கிரசேனின் தம்பியாகிய தேவகனின் மகள். இவளின் பெரியதந்தையின் புதல்வன் கம்சன். தேவகியின் வயிற்றில் பிறக்கும் எட்டாவது குழந்தை கம்சனை அழிக்கும் என்ற அசரீரியைக் கம்சன் கேட்டு, தேவகியையும், அவள் கணவன் வசுதேவனையும் சிறையில் அடைத்தான். அவள் வயிற்றிலுதித்த அனைத்துக்குழந்தைகளையும் கொன்றான். எட்டாவது குழந்தையாகப் பிறந்த கண்ணன், இடம் மாறி வளர்ந்து, பின்னர் கம்சனை அழித்தான் என்ற செய்தி புராணங்களில் கூறப்படுகின்றது.
ரோகிணியாள் - இவள் வசுதேவனின் இன்னொரு மனைவி. இவளுடைய மகன் பலராமன். இருவரும் சேர்ந்து ஆயர்குடியில், யசோதையிடம் வளர்ந்தனர்.

21. வடமதுராபுரி - மதுராபுரிநாட்டின் வடக்குப் பகுதி.
வசுதேவன் - இவன் சூரசேனன் புதல்வன் என்றும், எதுவின் மரபைச் சேர்ந்தவன் என்றும், உக்கிரசேனனின் மந்திரி என்றும் புராணங்கள் கூறுகின்றன. இவனுக்கு தேவகி, ரோகிணி என்ற இரு மனைவியர் உண்டு. அசரீரி கேட்ட கம்சன் தேவகியைக் கொல்ல முயல, வசுதேவன் தடுத்து, தங்களுக்குப் பிறக்கும் குழந்தைகளைக் கம்சனிடமே தந்துவிடுவதாக உறுதி கூறுகிறான். அதன் பின்னர் கம்சன் அவர்களைக் கொல்லாமல் சிறையில் அடைக்கிறான்.

24. மாலையிட்டார் - மணமுடித்தார்.

## வேட்டையாடுதல்

இப்படியாகவே இவரிருக்க
இயலழகுமன்னன் கஞ்சராசன்
மன்னனந்த கஞ்சராசன்
வனவேட்டை யாடவென்று
ப[றை]றக்காரன் தனைஅழைத்துப்
பறையறையு(ம்)மென்றுரைத்தான்.
அரசமன்னன் சொல்படியே
அறைந்தானே ப[றை]றயத்தான்

30. பட்டணங்கள் எத்திசையும்
பறையறைந்தான்பறைக்காரன்
தென்மதுரையில் அடித்தபறை
வடமதுரை கேட்டிடுமாம்
வடமதுரை வீற்றிருக்கும்
வாய்த்ததேவகியாள் காதில் கேட்டாள்

---

26. இயலழகு மன்னன் - ஒப்பனைகளின் தேவையின்றி, இயல்பாகவே அழகிய தோற்றத்தைப் பெற்றவன்.

27. வனவேட்டை - மக்களுக்குத் தொல்லை கொடுக்கும் கொடிய காட்டு விலங்குகளை அழித்து, மக்களைக் காக்க மன்னன் காட்டிற்குச் செல்லுவது.

28. பறைக்காரன் - மன்னன் கூறும் செய்திகளைப பறையறைந்து மக்களுக்குத் தெரிவிப்பவன்; இவனை வள்ளுவன் என்றும் தோட்டி என்னும் சொல்வார்கள்.

30. பட்டணங்கள் எத்திசையும் - எல்லா மக்களிடத்தும் செய்தி சென்று சேரவேண்டுப் என்பதற்காக நகரின் அனைத்துப் பகுதியிலும் பறையறைந்து தெரிவிப்பது. வேட்டைக்குச் செல்லுவது என்பது ஒரு கூட்டுமுயற்சி என்பதால், அனைவரும் கலந்து கொள்ள வேண்டி பறையடிக்கப்படும்.

31. வட மதுரை கேட்டிடுமாம் - பறைஒலியின் மிகுந்த ஓசையை இதன்மூலம் தெரிந்து கொள்ளலாம்.

தேவகியாள் காதில் கேட்டு
தென்மதுராபுரிவாறாள்
அண்ணனுட அரண்மனையில்
ஆயிளையாள் வந்து சேர்ந்தாள்

**வசனம்**

அரசமன்னன் ஏது செய்தான். வலைக்கயறும் கண்ணிகளும் மன்னவனும் சேகரித்தான். ஆயுதங்களைத் தெரிந்தெடுத்தான். அம்புராதூணிதனில் அடைத்தான். எப்பேர்ப்பட்ட அஸ்த்திரங்களைத் தெரிந்தெடுத்தான் தெரியுமா. வாயு அஸ்த்திரம், வருணா அஸ்த்திரம், சிங்கமுகா அஸ்த்திரம், இடி அஸ்த்திரம், கெருட அஸ்த்திரம், பருவதா அஸ்த்திரம், சூரியா அஸ்த்திரம், நாராயண அஸ்த்திரம், நரசிம்ம அஸ்த்திரம், காளி அஸ்த்திரம், நாற்ச பாணம், நாக பாணம், சுழல் பாணம், கட்டுப்பாணம், இந்திர பாணம், சந்திர பாணம், தெண்டாயுதம், சக்கரம், வேலாயுதம், இப்பேர்ப்பட்ட அஸ்த்திரங்களைச் சேகரித்து.

---

32. வாறாள் < வருகிறாள்; வலைக்கயறு - வலையும் கயிறும்; கண்ணிகள் - விலங்குகளைப் பிடிக்க உதவும் பொறிகள். இவை இருப்பது அறியாது, விலங்குகள் மாட்டிக் கொள்ளும்; அம்புராதூணி - கூர்மையான வில்வேல் போன்ற ஆயுதங்களை, அவற்றின் கூர் மழுங்காதிருப்பதற்காக வைத்திருக்க உதவும் குடுவை. அஸ்த்திரம் - நீண்ட தூரம் பாய்ந்து சென்று தாக்கும் அம்பு; வாயு - காற்று; வருணன் - மழை; சிங்கமுகா - பயத்தை உண்டாக்கும், சிங்கத்தின் முகத்தைப் போன்று தோற்றமளிக்கும் கருவி; கெருட < கருட - திருமாலின் வாகனமான கருடன் போன்ற ஆயுதம்; பருவதா < பர்வதா - மலை; பாணம் < பறந்து சென்று அழிக் கும் கருவி; நாற்ச பாணம் < நார் பாணம் - வில்லின் நாண் போன்ற கருவி; நாக பாணம் < பாம்பு போன்ற அம்பு; சுழல் பாணம் - சுழன்று சுழன்று செல்லும் அம்பு; கட்டுப் பாணம் - எதிரியைப் போராடவிடாமல் கட்டிவிடுகின்ற கருவி; இந்திர பாணம் - இந்திரனையும், அழிக்கின்ற பாணம்; சந்திர பாணம் - சந்திரனையும் அழிக்கின்ற பாணம்; தெண்டாயுதம் < தண்டாயுதம் - அருகில் நெருங்கி நின்று வலிமையுடன் தாக்கும் ஆயுதம்; சக்கரம் - எதிர்த்து நிற்கும் விலங்குகளின் உடல்களை அறுக்கும் கருவி; வேலாயுதம் - உடலினுள் புகுந்து, கிழிக்கும் கூர்மையான ஆயுதம்.

## வேறு

அம்புதெறி வில்லுகளும்
அதற்கேற்ற ஆயுதமும்
முஞ்சி வலையோடு
முசல் வலையாம்
முடுக்கு வலையோடு
அடுக்கு வலையாம்
காடைகள் பிடிக்கும் வலை
கதுவாலி தட்டுகளாம்
மாடம் புறா பிடிக்கும் வலை
மயிலன்னங்கள் தட்டெடுத்தான்.
துட்டநாயாம் புலிநாயாம்
சோமனென்ன குட்டநாயாம்
அலைவா கரைதோறுமங்கே
ஆந்தமுள்ளு புறக்கும்நாயாம்
தெருக்களென்ற தெருக்களெல்லாம்
தேங்காமுறி திருடும்நாயாம்

---

35. அம்புதெறி வில்லு - அம்பினை எறிகின்ற வில்.

36. முஞ்சி - ஒருவகை வலைக்கருவி.
முசல்வலை - முயலைப் பிடிக்கின்ற வலை.

37. முடுக்குவலை - முடுக்குகின்ற வலை.
அடுக்கு வலை - அடுக்கடுக்காய் இருக்கும் வலை.

38. காடை - காட்டுப்பறவைகளில் ஒன்று நெல் முற்றிய வயல்களிலும் காணப்படும்.
கதுவாலி < கருவாலி - இதுவும் ஒருவகையான காட்டுப்பறவை.
தட்டுகள் - இவை போன்ற பறவைகளைப் பிடித்து அடைக்கும் கூண்டுகள்.

39. மாடம் புறா < மாடப்புறா.

40. துட்டநாய் < துஷ்ட நாய் - கட்டளைக்குக் கீழ்ப்படியாத நாய்.
புலிநாய் - கோபம் அதிகம் வரும் ஒருவகை நாய்.
சோமனென்ன - பட்டுப்போன்ற மயிர்கள் உள்ள நாய்.
குட்ட < குள்ள - உயரம் குறைவான நாய்.

41. அலைவாகரை - நீர்நிலை ஓரங்கள்.
ஆந்தமுள்ளு - ஆழ்ந்த எலும்புகள்

42. தேங்காமுறி - உடைத்த தேங்காய்.

கட்டெறும்பைக் கண்டதுண்டால்
காதவழி ஓடும் நாயாம்
சித்தெறும்பைக் கண்டதுண்டால்
சீறிஎட்டிப் பிடிக்கும் நாயாம்
ஒருநாளும் பழகாத
ஊமாண்டி பொத்தநாயாம்.
படலை போட்ட வீடதிலே
பாராமல் பூரும்நாயாம்
சிறுத்தைபுலியாளிபன்றி
சீறிஎட்டி கடிக்கும் நாயாம்
கஞ்சிப்பானை தனை உருட்டும்
களவாணி பொட்டநாயாம்
சட்டிமுட்டி தனைஉருட்டும்
சண்டாள கருத்தநாயாம்
இப்பேர்ப்பட்டநாய்களைத்தான்
சேகரித்தான் அரசமன்னன்.

---

43. கட்டெறும்பு - கரிய உருவமுடைய பெரிய எறும்பு.
காதவழி - ஏழரை நாழிகை வழித்தொலைவு; பத்து கல் தொலைவு.

44. சித்தெறும்பு - சிறிய சிவந்த உருவமுடைய எறும்பு.

45. பழகாத - வேட்டைக்குப் பழக்கமில்லாத .
ஊமாண்டி - குரைப்பதற்குகூடச் சோம்பலடைந்து மௌனமாகவே இருக்கும் நாய்.
பொத்த - பெருத்த; வேலை செய்யாது தின்று கொழுத்த நாய்.

46. படலை - வீட்டைச் சுற்றி இடும் வேலி.
பூரும் < புகும் - நுழைதல்.

47. யாளி - சிங்கமும், யானையும் சேர்ந்த உருவமுடைய ஆளி.

48. களவாணி - திருட்டுக் குணமுடைய.
பொட்ட < பெட்டை < பெண்தன்மை - மனத்துணிவு அற்ற நாய் அல்லது கண்பார்வை மங்கிய.

49. சட்டிமுட்டி - பாத்திரங்கள்.
சண்டாள - உரியவர்களுக்குக் கிடைக்காதபடி, சமைத்து வைத்த உணவனைத்தையும் தின்றுவிடும் தீயகுணமுடைய.

50. சேகரித்தான் - ஒன்றிணைத்தல்.

சேனைபடைகளைச் சேகரித்தான்
தேருரதங்களைஅலங்கரித்தான்
வனவேட்டை போவதற்கு
வாய்த்த கமுசன் பயணமானான்
பார்த்தாரேதங்கையர்கள்
பைங்கொடிமார்ஏதுசொல்வார்

## தங்கையரின் ஆசை

அண்ணா அண்ணா கஞ்சராசா
அருமைத்தங்கைவார்த்தைகேளாய்
நாங்களும் கூடவாறோம்
நல்லவனவேட்டை பார்ப்பதற்கு
இப்படியாய்[ச்]சொன்னபோது
ஏதுசொல்வான்கஞ்சராசன்
அன்ம்புடைய தங்கையரே
அருமையுடன் சொல்லக்கேளும்
காட்டுவழி போவதற்குக்
கன்னியர்கள் ஆகாது
வேட்டையாடப் போவதற்கு
மங்கையர்கள் ஆகாது
தங்கையர்கள் வனமேக
தரிக்குதில்லை என்மனது
என்றுசொல்ல கஞ்சராசன்
ஏந்திளைமார் ஏதுசொல்வார்

---

52. பயணமானான் - வேட்டைக்குப் புறப்பட்டான்.

58. கன்னியர்கள் ஆகாது - பலவிதமான ஆபத்துகள் நிறைந்த காட்டுவழியில், பாதுகாப்பின்றிப் பெண்களை அழைத்துச் செல்வது தீமைபயக்கும் ஆதலால் இவ்வாறு கூறப்படுகிறது.

59. மங்கையர்கள் ஆகாது - விலங்குகளைக் கொல்வதற்கான மனத்துணிவு பெண்களிடம் இல்லாததால், அவர்களுக்கு ஊறுநேர்ந்துவிடும் என்று எண்ணிச் சொல்லப்பட்டுள்ளது.

60. வனமேக - காட்டிற்குள் செல்ல.
தரிக்குதில்லை - தாங்கவில்லை.

பச்சைமலை பவளமலை
 பைங்கொடிமார்பார்க்கவேணும்
கொச்சிமலை குடகுமலை
 கோதையர்கள்பார்க்கவேணும்
முல்லைவனம் இல்லைவனம்
 மூங்கில்வனம் பார்க்கவேணும்
பிச்சிவனம் நொச்சிவனம்
 பெண்கொடிமார்பார்க்கவேணும்
நந்தாவனம்பார்க்கவேணும்
 தங்கையர்கள் எந்தன் அண்ணா
ஆறுசுனை நதிகளெல்லாம்
 அருமையுடன் பார்க்கவேணும்
அண்ணன் வனமானதிலே
 அருமையுடன் கேளும் அண்ணா
வேட்டைஆடும் திறமைஎல்லாம்
 மடக்கொடிமார் பார்க்கவேணும்
காட்டிலுள்ள விலங்கினிடம்
 கடுகவேட்டை ஆடையிலே
தாட்டீகமாய்ப் பார்க்க வேணும்
 தங்கையர்கள் மகிழவேணும்.
இத்தனையும் பார்க்காவிட்டால்
 இப்போது மாண்டிடுவோம்
மாண்டிடுவோம் அண்ணாவே
 மண்மேலே இறந்திடுவோம்

---

66. நந்தாவனம் < நந்தவனம் - பூந்தோட்டங்கள் உள்ள வனம்.

68. அண்ணன் வனமானதிலே - கம்சனின் ஆளுகைக்கு உட்பட்ட காடு என்பதால், வனவேட்டை பார்ப்பதற்கு இது ஒரு நல்ல வாய்ப்பு என்று அவர்கள் கருதுவதாகச் சொல்லப்படுகிறது.

70. கடுகவேட்டை - தப்பிக்கும் திறன்கொண்ட விலங்குகளை மிகுந்த விரைவுடன் தாக்கும் தன்மையுள்ள - வேட்டை ஆடையிலே - ஆடும் வேளையிலே.

71. தாட்டீகமாய் - தங்கள் அண்ணன் ஆடும்வேட்டை இது என்பதால், அதனைப் பெருமிதத்துடன் பார்க்கவேண்டும் என்பதைக் குறிக்கிறது.

72. மாண்டிடுவோம் - இயற்கையாய் இறக்காமல் தற்கொலை செய்து கொள்ளுதல்.

வனம்பார்க்க இல்லையானால்
மாளுவது நிச்சயந்தான்
ஆனமட்டும்சொல்லிப்பார்த்தான்
அணுஅளவும் கேட்கவில்லை
ஏலுமட்டும் சொல்லிப் பார்த்தான்
எள்ளளவும் கேட்கவில்லை
வாறதெல்லாம் வரட்டெனவே
வாய்த்தநல்ல கஞ்சராசன்
பார்த்தானே கஞ்சராசன்
பாவினையாய் ஏதுசெய்தான்

**வேறு**

தண்டியலை வரவழைத்தான் வாய்த்த
தங்கையரை அதிலே வைத்தான்
வெடிவாண முழக்கத்தோட
வேட்டைக் கேகினானே கஞ்சராசன்
ஆனை சேனை அத்தனையும்
அடங்கலும் பயண மென்றான்

---

74. நிச்சயந்தான் - உறுதியாகத்தான்.

75. ஆனமட்டும் - முடிந்தமட்டும்.

76. ஏலுமட்டும் < இயலுமட்டும் - தன்னால் இயன்ற வரையும்.

77. வரட்டெனவே < வரட்டும் + எனவே.

78. பாவினையாய் - நடப்பதெல்லாம் நடக்கட்டுமென அதன் போக்கிலேயே விட்டுவிடுதல்.

79. தண்டியல் < தண்டிகை - பல்லக்கு அல்லது சிவிகை. இது உட்காருவதற்கான இருக்கைகளுடனும், உள்ளே இருப்பவர்களைப் பிறர்பார்க்க இயலாத பாதுகாப்புடனும் அமைந்திருக்கும்.

80. வெடி - மிகுந்த ஓசையுடன் வெடிக்கும் பட்டாசு.
வாணம் - சீறிப்பாய்ந்து வானில் சென்று வெடிப்பது; இவற்றை ஒரு நிகழ்ச்சி தொடக்கத்திற்காக வெடிப்பது வழக்கம். இந்த ஓசையைக் கேட்டுப்பலரும் அந் நிகழ்ச்சி தொடங்கிவிட்டது என்பதை அறிந்துகொள்வார்கள்.

81. அடங்கலும் - அனைத்தும்.

வாழும் மதுராபுரி தான்கடந்து
வாறானே கஞ்சராசன்
கானவனத்திலே வந்து நின்று
கஞ்சனும் ஏது செய்தான்
தண்டியலை இறக்கச் செய்து
தங்கையர்க் கேது சொல்வான்.

### வேறு

வனவாசக் காடதிலே
வடவா ஆலமரத்திலே
ஆலமர நிழலதிலே
ஆயிளைமாரை யிருக்கச் செய்து
வேட்டையாடி வருமளவும்
வடவால மரமானதிலே
இந்த இடத்தில் இருப்பீர்என்று
இன்பமுடன் வழிநடந்தான்
கானவனமெல்லாந்தான்திரிந்து
கஞ்சன் வேட்டை ஆடுகிறான்
வனங்களென்ற வனங்களெல்லாம்
மன்னவனும் அலையுகிறான்
கானவனவேட்டை பலியாமல்
கஞ்சன்மனம் பரதவித்து
வடவால மரமதில்
வந்துசேர்ந்தானே கஞ்சராசன்

---

83. கானவனம் - காடுகளும் மரங்களும் செறிந்த வனம்.

85. வனவாசக் காடு - மரங்களும் புதர்களும் நிறைந்து, கொடிய விலங்குகள் வசிக்கும் காடு.
வடவா ஆலமரம் - விழுதுகள் நிரம்பிய ஆலமரம்.

90. அலையுகிறான் < அலைகிறான்.

91. கானவனவேட்டை - காட்டில் நிகழ்த்தும் வேட்டை

92. பலியாமல் - பயன்தராமல்.
பரதவித்து < பரிதவித்து - ஒரு வழியும் புரியாமல் திகைத்து.

தங்கையர்கள் இடமதிலே
ஓடிவாறானே கஞ்சராசன்
என்னுடைய தங்கையரே இப்போ
தொருவார்த்தை சொல்லக்கேளும்
வனவேட்டை பலிக்கவில்லை
மதுராபுரி போவோம் என்றான்
அண்ணனுட வார்த்தைகேட்டு
அருமைத்தங்கை ஏதுசொல்வார்
தாகவிடை ஆகுதண்ணா
தண்ணீர்கொண்டுவரவேணும்
நாக்குதான் வரளுதையா
நந்தாவனக் காடதிலே
பாரவனம் ஆனதிலே பாவி
எங்களுயிர் போகுமுன்னே
தண்ணீர்கொண்டுவரவேணும்
தாகவிடை ஆச்சுதண்ணா
இப்படியே அண்ணனிடம்
ஏந்திளைமார்சொன்னபோது
பார்த்தானேகஞ்சராசன்
பரதவித்து ஏது சொல்வான்
எங்கேபோய் கண்டிடுவோம்
ஏற்றநல்ல சுனையதையும்
அரண்மனைக்குச் சென்று தண்ணீர்
அருந்திடலாம் தங்கையரே
என்றுசொல்ல கஞ்சராசன்
ஏந்திளைமார் ஏதுசொல்வார்
தண்ணீர்[த்]தாகம் தீரர்விட்டால்
தார்வனத்தில் இறந்திடுவோம்

---

97. தாகவிடை < தாகவிடாய் - மிகுந்த தாகம்.

98. வரளுதையா - நீர்ப்பசை அற்று வரண்டிருத்தல்.

99. பாரவனம் - கொடிய விலங்குகள் நிறைந்த வனம்.

103. சுனை - காடுகளிலும், மலைகளிலும் இயற்கையாகவே நீர் பெருகிவரும் நீர் ஊற்று.

106. தார்வனம் - பாலவனம் நிறைந்த காடு.

மதுராபுரி வருவதில்லை
மாளுவது நிச்சயந்தான்
அப்படியே சொன்னபோது
அரசமன்னன் ஏது சொல்வான்
ஆலமர மீதிலேறி
அருஞ்சுனைகள் பார்க்கலுற்றான்
அருஞ்சுனை காணாமல்
ஆலமரம் விட்டிறங்கி
மசங்கி அவன் நிற்கும்போது
மங்கையர் கனியைக் கண்டு
மாமரத்தில் கனியைக் கண்டு
மங்கையர்கள் ஏது சொல்வார்
அருங்கனியை எங்களுக்கு
அறுத்துத்தர வேணும் அண்ணாவே
அந்தக் கனியைப் பொசிப்பதற்கு
அருமைவனத்திலே ஒருமுனிவன்
பன்னிரண்டு வருடமட்டும்
பாரதவமது செய்யுகிறான்.

**வசனம்**

அந்த மரமானது தளுப்பதற்கு மூன்று வருசமாகும். தளுத்து பூப்பதற்கு மூன்று வருசமாகும். காய்க்கிறதற்கு மூன்று வருசமாகும். பழுக்கிறதற்கு மூன்று வருசமாகும். இப்படி 12 வருசம், 12 நாள், 12 நாழிகை 12 நிமிசமானால் ஒரு பழம் பழுக்கும். அப்போது அந்த தவமுனிவன் வந்து தவசைவிட்டு (தவமுனிவன்)

---

108. அரசமன்னன் - ஒருபொருளையே குறிக்கும் இரு சொற்கள்.

109. ஆலமரமீதிலேறி - உயர்ந்த மரத்தின் உச்சியில் ஏறி நின்று பார்த்தால், தொலைவில் இருக்கும் நீர்நிலை எளிதில் தெரியும் ஆதலால் இவ்வாறு செய்வர்.

111. மசங்கி < மயங்கி - தங்கையரின் துன்பம் கண்டு தாங்காது கனி - பழம்.

113. அருங்கனி - தாகத்தைத் தீர்த்து உயிர்காக்கும் அரிய கனி. ஒற்றைப்பழமாகத் தோன்றிய அருமையான கனி.

114. பொசிப்பதற்கு < புசிப்பதற்கு - உண்ணுவதற்கு.

115. பாரதவம் - உடலை வருத்திச் செய்யும் கடுமையான தவம்.

தானேவந்து மரத்தடியில் கண்ணுரண்டும் மூடிக்கொண்டு கையிரண்டும் விரித்துக்கொண்டு சிவசிவா ராமாவென்று சிவமுனிவர் தானிருப்பார். பழுத்தகனிதானறுந்து பாரமுனிவன் கையில் விழுந்திடுமாம். அறுந்தகனிதனை எடுத்து அம்முனிவன் புசித்துக் கொள்ளுவான். இப்படியே அருந்துவது இயல்முனிவன் தன்வழக்கம்.

## முனிவரின் சாபம் பெறுதல்

### வேறு

தவசுஇருந்து புசிக்கும்கனி
　　தேவகியாள் கண்ணில்கண்டாள்
அப்பேர்ப்பட்ட கனியதைத்தான்
　　அறுத்துத்தர வேணும் என்றுரைத்தார்
கனியதைக் கண்ணில்கண்டு
　　கஞ்சராசனும் ஏதுசொல்வான்
அம்புதனில் நாணேற்றி
　　அறுத்துவிட்டான் அக்கனியை
விட்டசரம் பட்டுருவி
　　மண்டலங்கள் கிடுகிடென
அந்தரத்தில் இருந்தகனி
　　அறுந்துகீழே விழுந்துதையா
அந்தக்கனி தனைஅறுத்து
　　அருமைத்தங்கையர்க்குத் தான்கொடுத்தான்.

---

தளுப்பதற்கு < தளிர்ப்பதற்கு - இலைகள் தோன்றி முளைப்பதற்கு .
தளுத்து < தளிர்த்தல்.
தவசை - தவம்.
இயல்முனிவன் - தவத்தை இயல்பாகக் கொண்ட முனிவன்.
தானறுந்து - தானே காம்பிலிருந்து விடுபட்டுக் கீழே விழுதல்.
புசிக்கும் - தின்னும்.

117. அறுத்து - பறித்து.

119. அம்பு - விலங்குகளைக் கொல்லக் கொண்டு வந்த கூரான அம்பு.
நாணேற்றி - வில்லில் அம்பினைச் செலுத்துவதற்காக நாணை ஏற்றுதல்.

120. சரம் - அம்பு
மண்டலங்கள் - பல கோள்கள்.

121. அந்தரம் - மிக உயரத்தில் தொங்கிக் கொண்டிருத்தல்.

இப்படியே இவரிருக்க
ஏற்றதொரு மாமுனியும்
வருசம்பனிரண்டு திகைத்ததென்று
வளரும் மரத்தடி தனிலேவந்தார்
மரத்தில்கனியதைக்காணாமல்
மாமுனிவர் பரதவித்தார்
பரதவித்து நிற்கையிலே
ஒருபாலனுட அடியைக் கண்டார்
அந்தஅடி பிறகாலே
அம்முனிவர் ஓடிவாறார்
மடமடென்றும் திடுதிடென்றும்
மாமுனிவர் ஓடிவாறார்
கண்டானே மாமுனிவன்
கஞ்சனுட தங்கையரை
பாரவன மாமுனிவன்
பழுத்த கனியதைக் கண்ணிலே கண்டான்
கன்னியரே உங்களுக்குக்
கனிஅருந்தக் கொடுத்தது யார்
என்றுசொல்ல மாமுனிவன்
ஏந்திளைமார் ஏது சொல்வார்
அண்ணர்எங்கள் கஞ்சராசன்
அறுத்துத்தந்தார் எங்களுக்கு
என்றவர்கள் சொன்னபோது
ஏதுசொல்வார் மாமுனியும்
ஏதுக்கு வேடுவனே
என்கனியை நீ அறுத்தாய்

---

124. திகைத்ததென்று < திகைந்ததுஎன - முடிவுற்றது என்று.

126. பாலன் - ஆண்மகன்.

127. பிறகாலே - பின்தொடர்ந்து.

128. மடமட, திடுதிடு - விரைவை உணர்த்துகின்ற அடுக்குச் சொற்கள்.

132. மாமுனிவன் - தவவலிமை வாய்ந்த பெரிய முனிவன்.

135. ஏதுக்கு < எதுக்கு - என்ன காரணத்திற்காக.
வேடுவனே - விலங்குகளை வேட்டையாட வந்தவனாதலால் கம்சனை இவ்வாறு அழைக்கிறான்.

தங்கையர்கள் தாகம்தீர
தானறுத்தேன் இக்கனியை
இப்படியே வாதுபேசி
இயல்முனிவன் ஏதுசெய்தான்
என்கும்பிதானும் கொதிக்குதடா
என்குடல்கிடந்து மாளுதடா
வயறுதானும் பசிக்குதடா
என்வாணாளும் போகுதடா
பனிரண்டு வருடம் சென்றால்
பழுத்தகனி உண்டிடுவேன்
தவசிருந்து வீணாச்சே
சண்டாளப் பாதகனே
என்று சொல்லி தவமுனிவன்
ஏங்கியவன் பரதவித்து
கண்ணுரண்டும் சிவப்பேறி
காதுரண்டும்பொறிகிளம்பி
மண்ணுவிண்ணும் தானதிர
மாமுனிவன் கோபங்கொண்டு
பசிபொறுக்கக் கூடாமல்
பாரமுனி ஒரு சாபமிட்டார்
தங்கைவயத்திலே பிறக்கும்பிள்ளை
தலைஅறுக்கும் வேடுவனே

---

137. வாது < வாதம் - ஒருவர் மாற்றி ஒருவர் தங்கள் கருத்துக்களைக் கூறிவிவாதித்தல்.
138. கும்பி - வயிறு.
கொதிக்குதடா - பன்னிரண்டு வருடப்பசியால், உணவுக்காகப் பரிதவித்தல்.
குடல்கிடந்து மாளுதல் - பசியால் துடித்து இயக்கமில்லாதிருத்தல்
139. வாணாளும் < வாழ்நாளும் - இனிமேல் நான் வாழப்போகும் ஆயுட்காலம்.
141. சண்டாளப் பாதகன் - அடுத்தவர் பொருளைப் பறிப்பவன்
143. கண்சிவப்பேறுதல் - கோபத்தால் கண்கள் சிவத்தல்.
144. அதிர - முனிவனின் கோபத்தால் அனைத்துமே நடுங்க.
145. கூடாமல் - இயலாமல்.
சாபம் - தவறிழைத்து விட்டவர்களை நோக்கி, தவவலிமை வாய்ந்தவர்கள், ஏதேனும் ஒருதீங்கு நேரக்கடவது என்று சபித்தல்.
146. தங்கை வயத்திலே - தேவகி வயிற்றில்

மருமகனாய்த் தான்பிறந்துஉன்
மார்பைப்பிளக்கும் வேடுவனே
இப்படியும் சாபமிட்டு
இயல்முனியும் தவசிருந்தார்
முனியிட்ட சாபம் வாங்கி
மதுராபுரி நகர்வந்தார்.

**வசனம்**

அரண்மனையில் தானும் வந்து அரசமன்னன் கஞ்சராசன் எண்ணாதெல்லாம் எண்ணி எண்ணி (எண்ணி, எண்ணி) மனம் புண்ணாய் உழல்கிறான்.

## கம்சனின் வருத்தம்

**வேறு**

வஞ்சக நெஞ்சு தானே உருகி
வாய்த்த அறையிலே தானே படுத்து
தீயிலே இட்ட மெழுகதுபோல் உருகி
வாடி மசங்கி மூடிப் படுத்தான்
கண்டானே மந்திரியும் கஞ்சனுட திருமுகத்தை

**வேறு**

அரசே உம்முடைய திருமுகம்தான்
அருள்குறைந்து இருப்பதென்ன
வாடாத கமலைமுகம்
வாடித்தானும் இருப்பதென்ன

---

உழல்கின்றான் - தப்பிக்க முடியாத சாபத்தை நினைத்து வருந்துகிறான்.

150. வஞ்சக நெஞ்சு - தன் தங்கையின் மகன் தன்னைக் கொல்வான் என்பதைக் கேட்டுத் தேவகிமேல் வஞ்சகம் கொண்ட கம்சன்.

152. தீயிலே இட்ட மெழுகதுபோல் உருகி - தீயில் விழுந்து மெழுகு உருகுதல் உவமையாகக் கூறப்படுகிறது.

153. மசங்கி < மயங்கி
மூடிப்படுத்தல் - போர்த்துப்படுத்தல்.

155. அருள் குறைந்து - தெளிவின்றி.

156. கமலை < கமலம் - தாமரை.

கோடாத கமலைமுகம்
கோடித்தானும் இருப்பதென்ன
என்றுசொல்ல மந்திரியும்
எடுத்துரைத்தான் ராசமன்னன்
வனத்திலே நடந்தெல்லாம்
வரிசையுடன் எடுத்துரைத்தான்
மாமுனியிட்ட சாபமதை
மந்திரிக்கு எடுத்துரைத்தான்
இதற்கென்ன உபாயமென்று
எடுத்துரைத்தானே ராசமன்னன்
கேளுமையா ராசமன்னா
கீர்த்தி உள்ள வார்த்தையொன்று
வாசுதேவனை ஒருஅறையதிலும்
வான்மயிலாளை ஒரு அறையிலும்
அருஞ்சிறையில் வைத்ததுண்டால்
அவர்தனக்குப் பிள்ளையில்லை
என்றுசொல்லிமந்திரியும்
எடுத்துரைத்தான் ராசமன்னன்
இப்போர்பட்ட மந்திரியை
ஈரேழுஉலகத்தில் கண்டதில்லை
என்றுசொல்லி ராசமன்னன்
இவர்களையும் தான்பிடித்து

---

157. கோடாத - முகம் மாறுபடாத.

159. வரிசையுடன் - நடந்தவைகளை நடந்தமுறைப்படி கூறுதல்.

161. உபாயம் - சாபத்தினின்றும் தப்பிக்கும் வழி.

162. கீர்த்தி - புகழ்.
வார்த்தை - தப்பிக்கும் வழி.

163. வான்மயிலாள் - வனத்தில் உள்ள மயில் போன்று அழகான தோற்றமுடைய தேவகி.

164. அருஞ்சிறை - கொடிய சிறை.
வைத்ததுண்டால் - தனித்தனியே சிறையில் அடைத்து விடுதல்.

166. ஈரேழு உலகம் - பதினாலு உலகங்கள் இருக்கிறது என்று நம் புராணங்கள் கூறுகின்றன. அதனை ஒட்டிக் கூறப்பட்டது இத்தொடர்.

வாசுதேவனை ஒரு அறையதிலும்
வான்மயிலாளை ஒரு அறையதிலும்
ஆளுக்கொரு அறையதிலே
அடைத்தானே ராசமன்னன்
சிறையிலே தானடைத்து
சீமைஆண்டான் கஞ்சராசன்

## கருத்தரித்தல்

### வேறு

இப்படியே சிலநாளாய் ஆண்டிருக்கும் நாளையிலே
தேவகியாள் திருவயற்றில் சிறுகுழந்தை தரித்திடுமாம்
மாயகற்பம் தரித்துதையா மாமுனியிட்ட சாபத்தினால்
கதவது திறக்கவில்லை கற்பழியப் போகவில்லை
காற்றடித்துத் தாழைபூத்ததுபோல் காரிளையாள் கற்பமானாள்
குருமுனியிட்ட சாபத்தினால் குழந்தைகருவாகத் தரித்திடுமாம்
அப்படியே மாசம்பத்து அன்புடனே சரியாச்சு

## குழந்தை பிறப்பும் அழிவும்

பத்தான மாஸ்த்தையிலேஒரு பாலகனைப் பெற்றெடுத்தாள்
குழந்தையது தான்பிறந்து கூகூவென்றழுதிடவே

---

170. சீமை - நாடு, தேசம்.

172. தரித்திடுமாம் - கரு உருவாகி வருதல்.

173. மாயகற்பம் - கணவனுடன் இல்வாழ்க்கை உறவு கொள்ளாது மாயத்தால் ஏற்படுவதால் மாயகர்ப்பம் என்று சொல்லப்பட்டுள்ளது.

174. கற்பழியப் போதல் - தன்கணவனுடன் சேருதல்.

175. காற்றடித்துத் தாழை பூத்தது போல் - காற்றிலே தாழை அசைவதால், தாழை பூக்கிறது என்ற பொருத்தமான உவமை, தேவகியின் கருத்தரித்தலுக்குக் கூறப்பட்டுள்ளது.

177. சரியாச்சு - முடிந்துவிட்டது.

178. மாஸ்த்தையிலே - மாசத்திலே.

அழுதகுரல் தான்கேட்டு அரசமன்னன் ஓடிவாறான்
தங்கையுட சி[ெ]றச்சாலையில் தானே கஞ்சராசன்
கதவுதன்னைத் தாள்திறந்து காரிளையாள் அருகேசென்று
குழந்தைவந்த மாயமென்ன கொடியிடையே கூறு(ம்)மென்றார்
அறையிலே இருந்தவள்க்கு அருங்குழந்தை வந்ததென்ன
சிறையிலே இருந்தவள்க்கு சிறுகுழந்தை வந்தமாயமென்ன
என்றுசொல்ல கஞ்சனுமே ஏதுசொல்வாள் தங்கையரும்
என்னுடைய அண்ணா தனியிடம்போகவில்லை கற்பழிய
போகயில்லை
இட்டபங்கு தானிருக்க இடும்புகளாய் நடக்கவில்லை
வைத்தபங்கு தானிருக்க வம்புகளாய் நடக்கவில்லை
என்றுசொல்ல தேவகியாள் ஏதுசொல்வான் கஞ்சராசன்
அண்ணன்தான் அவுருவமா இந்த ஆண்குழந்தை அவுருவமா
அண்ணன்தான் அவுருவமேஎனக்கு அல்லாது வேறு துணையில்லை
இப்படியே அவளுரைக்க இளங்குழந்தை தனைஎடுத்து
கண்ணுரண்டும் சிவப்பேறி காதுரண்டும் பொறிகிளம்பி
கடுங்கோபம் உண்டாகி காலையுமே தான்பிடித்து
காலையுமே தான்பிடித்து கல்தூணில் அடித்து[க்]கொன்றான்
இளங்குழந்தை தன்னைக் கொன்றுவிட்டு கதவுதன்னைத் தாள்பூட்டி

---

183. மாயமென்ன - சிறையில் தனித்துப் பூட்டி வைத்திருந்தும் கருஉருவானதால், அதன் மாயமென்ன என்று வினவுகிறான்.

184. இருந்தவள்க்கு < இருந்தவளுக்கு.
அருங்குழந்தை - பிறகுழந்தைகள் போல் இல்லறவாழ்வின் மூலம் தோன்றாது பிறந்த அரிய குழந்தை.

187. தனியிடம் - கணவன் தங்கியுள்ள தனிஇடம்.
கற்பழிய - கணவனிடம் சேர்ந்து வாழ்ந்து கருத்தரிக்கவில்லை.

188. இட்டபங்கு - தங்களுக்கென்று அளித்துள்ளபடி.
இடும்புகள் - சேட்டைகள்.

189. வம்புகள் - வேண்டாத தீச்செயல்கள்.

191. அவுருமா < அபூர்வமா - அருமையானதா, அண்ணன் வேண்டுமா, குழந்தை வேண்டுமா என மறைமுகமாக வினவுதல்.

196. கல்தூண் - குழந்தையின் உயிர், உரு அனைத்தையும் சிதைக்கத் தேவைப்பட்ட சிறையின் வலிமையான கல்தூண்.

197. தாள்பூட்டி - வெளியில் வரமுடியாதபடி சிறையைப் பூட்டி.

அரண்மனைதனிலே வந்து ஆண்டிருந்தானே கஞ்சராசன்
அப்படியாய் அவனிருக்க அருஞ்சிறையில் இருந்தவள்க்கு
மாமுனிஇட்ட சாபத்தினால் மாயகற்பம் தரிக்குதையா
அப்படியே மாசம்பத்து அன்புடனே சரியாகி
பத்தான மாஸ்த்தையிலே பாலகனை[ப்] பெற்றெடுத்தாள்
குழந்தையது தான்பிறந்து கூகூவென் றழுதிடுமாம்
அந்தசத்தம் காதில்கேட்டு அரசமன்னன் ஓடிவாறான்
கதவுதன்னைத் தாள்திறந்து காரிளையாள் முன்னேவந்து
கண்ணுரண்டும் சிவப்பேறி காதுரண்டும் பொறிகிளம்பி
கடுங்கோபம் உண்டாகி காரிளையாள் முகம்னோக்கி
குழந்தைவந்த வாறுதன்னை[க்] கொடியிடையே கூறுமென்றான்
என்றுசொல்ல கஞ்சராசன் எடுத்துரைத்தாள் தேவகியாள்
தனியிடம் போகவில்லை கற்பழிய போகவில்லை
இட்டபங்கு தானிருக்க இடும்புகளாய் நடக்கவில்லை
என்றுசொல்லி தேவகியாள் எடுத்துரைத்தாளே கஞ்சராசனுக்கு
அண்ணன்தான் அவுருவமாஉனக்கு இந்தஆண்குழந்தை அவுருவமா
அண்ணன்தான் அவுருவமே எனக்கு அல்லது வேறுமில்லை
அப்படியே அவருரைக்க அரசமன்னன் கஞ்சராசன்
காலைரண்டும் தான்பிடித்து கல்தூணில் அடித்துக்கொன்றான்
மதலைதன்னைக் கொன்றுவிட்டு மனைதனிலே வந்து சேர்ந்தான்.
அரண்மனை யானதிலே ஆண்டிருந்தானே கஞ்சராசன்
இப்படியே சிசுக்களையும் இவனடித்து[க்] கொன்றுவிட்டான்
தொண்ணித்தொன்பது பிள்ளைகளை[த்] தூணதிலே அடித்து[க்] கொன்றான்
சிசுக்களெல்லாம் இருளாக[ச்] சிவனிடத்தில் சூழ்ந்திருக்க
இருளாகத் திரண்டுகொண்டு யீசனிடத்தில் முறையமிட

---

207. கடுங்கோபம் - தன்னை மீறி மீண்டும் நடந்து விட்டதால் தோன்றிய கொடுமையான கோபம்.

208. வந்தவாறு - குழந்தை தோன்றியவிதம்.

219. சிசுக்கள் - இளங்குழந்தைகள்.

220. தொண்ணித்தொன்பது - தொன்னூற்றொன்பது.

221. இருளாக - கரிய உருவங்களாக.

222. யீசன் < ஈசன் - சிவன்
முறையமிட < முறையிட - தங்களின் துயரினைக் கூறி அழ.

பார்த்தாரே கறைக்கண்டர் பரமசிவனாரும் அன்னேரம்
ஆருடைய திருக்கூத்தென்று அறிந்தாரே ஆதிசிவன்

## சிவனின் கூற்று

கண்டாரே கறைக்கண்டர் கஞ்சனுட திருக்கூத்தை
பிட்டுக்கு மண்சுமந்த பித்தனாரும் ஏதுசொல்வார்
அவனை[ச்] செயிப்பதற்கு ஆராலே ஆகுமென்று
மாயவனே அல்லாது மற்றஒருவராலே செல்லாது
மைத்துனரை மனிதிலெண்ணி மகாதேவர் வரவழைத்தார்
பால்கடலில் பள்ளிக்கொள்ளும் பச்சமால் ஓடிவாறார்
கைலாச பர்வதத்தில் கரியமால் வந்துநின்று
மைத்துனரே எனைஅழைத்த மர்மமதைச் சொல்லுமையா

---

223. கறைக்கண்டர் - இது ஒரு புராண நிகழ்ச்சி. பாற்கடலைக் கடைய வாசுகி என்னும் பாம்பினைக் கயிறாகப் பயன்படுத்தித் தேவரும் அசுரரும் அக்கடலைக் கடைந்தனர். அப்பொழுது அப்பாம்பு அதனைத் தாங்கமுடியாமல் நஞ்சினைக் கக்கிற்று. அந்நஞ்சினைச் சிவன் விழுங்கும் போது, பார்வதி தேவியார் அவர் தொண்டையை அமுக்க, அந்நஞ்சு அவரின் தொண்டையில் தங்கியது. அதனால் அவருக்கு அப்பெயர் உண்டாயிற்று.

224. திருக்கூத்து - விளையாட்டு, வேலை.

226. பிட்டுக்கு மண்சுமந்த பித்தனார் - இது திருவிளையாடற் புராணத்தில் சுட்டப்படும் ஒரு நிகழ்ச்சியாகும். வயது முதிர்ந்த ஒரு மூதாட்டியின் பங்கிற்காக, உடைப்பெடுத்துச் சென்ற வைகை ஆற்றின் கரைக்கு மண் இட்டார் சிவபெருமான். அந்த வேலைக்குக் கூலியாக அக் கிழவியிடம் பிட்டினைப் பெற்றுக் கொண்டார்.

227. செயிப்பதற்கு - வெல்வதற்கு.

228. மாயவன் - திருமால். பலவிதமான அவதாரங்கள் எடுப்பவன்.

229. மகாதேவன் - சிவன் தேவர்களினினும் பெரியவன்.

230. பால்கடல் - திருமால் துயில் கொள்ளும் கடல்
பள்ளிகொள்ளும் - அறிதுயில் கொள்ளும்
பச்சமால் < பச்சைமால் - பசுமையான நிறத்தை உடையவன்.

231. கைலாச பர்வதம் - சிவன் வாசம் செய்யும் கைலாசமலை.
கரியமால் - கருநிறமுடைய திருமால்.

232. மைத்துனர் - திருமாலின் தங்கை பார்வதியைச் சிவன் மணந்ததால் ஏற்பட்ட உறவு
மர்மம் - என்னவென்று தெரிந்துகொள்ள முடியாத செய்தி.

எனைஅழைத்த வாறுதன்னை யீசுரரே சொல்லுமையா
கஞ்சராசன் திருக்கூத்தை[க்] கண்டீரோ மைத்துனரே
கைலாசம் இருளாச்சே காண்கலையோ மைத்துனரே
தொண்ணித்தொன்பது பிள்ளைகளை[த்] தூணதிலே அடித்து[க்] கொன்றான்
அவனைத்தான் சிரமறுக்க அழைத்தேனே ரெகுபதியே
உம்மாலே ஆகும்யென்று உலகளந்தோன் உம்மை அழைத்தேன்
என்னாலே அவனைவெல்ல யீஸ்பரனே ஏலாது
பத்திரகாளி வந்ததுண்டால் [பாவியவனைக்] கொன்றிடலாம்
என்று சொல்ல ரெகுபதியும் ஏதுசொல்வார் யீஸ்பரனார்
அழைத்துமே இருபேரையும் ஆதிசிவனாரும் ஏதுசொல்வார்
கைலாசம் தனிலிருந்து காரணங்கள் பேசுவாராம்
காரணங்கள் வெகுபேசி கறைக்கண்டர் அனுப்பிவைத்தார்.

---

233. யீசுரரே - ஈசுவரரே.

234. திருக்கூத்து - குழந்தைகளை வரிசையாகக் கொன்று, கம்சன் செய்த அநியாயச்செயலை, வஞ்சப் புகழ்ச்சியாகச் சுட்டுவது.

235. இருளாச்சே - கரிய உருவமெடுத்த குழந்தைகளின் வருகையால், இருளாகிவிட்டது.

236. தொண்ணித்தொன்பது பிள்ளைகளை - பாகவதத்தில், எட்டாவது குழந்தையாகப் பிறக்கும் கண்ணன், கம்சனை அழிப்பான் என்று அசரீரி சொல்வதாகக் கூறப்படுகிறது. ஆனால் இக்கதைப்பாடலில், தொண்ணூற்றொன்பது குழந்தைகளுக்குப்பின் நூறாவதாகக் கண்ணன் பிறக்கிறான் என்று சொல்லப்படுகிறது.

237. சிரமறுக்க - தலையினை அறுக்க
ரெகுபதி < ரகுபதி - ரகுகுல தோன்றல்.

238. உலகளந்தோன் - இது ஒரு புராணச்செய்தி. திருமால் வாமன உருவத்தில் அவதரித்து, மாவேலியிடம் மூன்றடி நிலம் கேட்டார். அவன் மமதையில் தர, இந்த உலகத்தை ஓரடியிலும், வானுலகத்தை ஓரடியிலும், அளந்தார். மூன்றாவது அடியில் மாவேலியின் தலையைப் பாதாளத்தில் அழுத்தினார். மாவேலியினை அழிப்பதற்காக எடுத்த அவதாரம் இது.

239. ஏலாது < இயலாது - முடியாது.

240. பத்திரகாளி - பார்வதியின் இன்னொரு அம்சமான காளி
வந்ததுண்டால் - வந்தால்.

242. ஆதிசிவனார் - இவ்வுலகம் தோன்றியதற்கு முன்னரே தோன்றியவர்.

243. காரணங்கள் - கம்சனை அழிப்பதற்கான காரணங்களையும், அதற்கு வேண்டிய செயல்கள் பலவற்றையும் பேசினார்.

## கண்ணனைக் கருத்தரித்தல்

ஆதிசிவன் அங்கிருக்க அரிராமரும் தங்கையுமாய்
இருபேரும் வாறபோது ஏழைப் பங்கோனும் ஏதுசொல்வார்
என்னுடைய தங்கையரே ஏற்றநல்ல பத்திரகாளி
ஆயர்பாடி தனிலேதான் அம்பலக்கோன் வீட்டிலே
அசோதையுட திருவயற்றில் அவள்தனக்கு[ப்] பிள்ளையாக
பத்திரகாளி நீயும்சென்று பாலகியாய்ப் பிறக்கவேண்டும்
தேவகியாள் திருவயத்தில் சிசுவாக நான்பிறந்து
அவள்தனக்கு[ப்] பிள்ளையாக ஆயிளையே நான்பிறந்து
என்றுசொல்லி தங்கையரை ஏழைப்பங்கோனும் அனுப்பி வைத்தார்
தேவகியாள் திருவயற்றில் திருமாலும் அவதரித்தார்
அரிராமர் சொல்படியே அசோதையுட திருவயற்றில்
பத்திரகாளி அம்மனுந்தான் பாவினையா அவதரித்தாள்

## கண்ணன், பத்திரகாளி பிறப்பு

கருவாகத்தான் அவதரித்து கெற்பமேதான் உண்டாகி

---

245. ஆதிசிவன் - மும்மூர்த்திகளில் முதல்வன்

அரிராமர் - திருமாலான 'அரி' இராமராக அவதரித்து அரிராமர் என அழைக்கப்பெற்றார்.

தங்கை - பத்திரகாளி.

246. ஏழைப் பங்கோன் - திருமால் ஏழை எளிய மக்களின் துயர்துடைப்பவன்.

248. ஆயர்பாடி - கன்றுகாலிகள் மேய்ப்பதைத் தம்தொழிலாகக் கொண்டிருக்கும், இடையர்களின் வசிப்பிடம்.

அம்பலக்கோன் - இடையர்களின் தலைவன். அவர்களுக்கு அரசன் போன்றவன். பாகவதத்தில் நந்தகோபன் என்ற பெயருடையவன். வசுதேவரின் நண்பன். பலராம கிருஷ்ணர்களை வளர்த்தவன்.

249. அசோதை < யசோதை - அம்பலக்கோனின் மனைவி.

250. பாலகி - பெண்குழந்தை.

251. திருவயத்தில் < திருவயிற்றில்.

256. பாவினையா - திட்டமிட்டவாறு.

257. அவதரித்து - குழந்தை உருவமான தோற்றம் எடுத்து.

வளருதல்லோ கருஉருவாய் வா[ர்]ப்புருக்கி வா[ர்]த்ததுபோல்
அப்படியே மாசம்பத்தும் அன்புடனே சரியாகி
பத்தான மாசமதில் பாலன்பிறக்க நாளாச்சே
மருத்துவத்தை வரவழைத்து மன்னவனே வாரும் என்றாள்
அசோதையுட சொல்படியே அம்பலக்கோன் ஓடிவாறான்
அம்பலக்கோன் ஓடிவந்து அழைத்தானே மருத்துவத்தை
ஒருகழஞ்சி பொன்தாறேன் ஓவியமே எழுந்திரம்மா
ஒருகழஞ்சி பொன்னதுதான் உரக்குழியிலே தூத்தெடுப்பேன்
மூன்றுகழஞ்சி பொன்தாறேன் மருத்துவமே எழுந்திரம்மா
மூன்றுகழஞ்சி பொன்னதுதான் முத்தத்திலே தூத்தெடுப்பேன்
ஏழுகழஞ்சி பொன்தாறேன் எழுந்திரம்மா மருத்துவமே
ஏழுகழஞ்சி பொன்னதுதான் இருப்பிடத்தில் தூத்தெடுப்பேன்
பத்துகழஞ்சி பொன்தாறேன் பைங்கொடியே எழுந்திரம்மா
பத்துகழஞ்சி பொன்னதுதான் பாலகரே வேண்டாமையா
ஆயிரம்கழஞ்சி பொன்தந்தால் அன்புடனே வருவேனென்றாள்

---

258. வளருதல்லோ - வளர்கிறதன்றோ
வா[ர்]ப்புருக்கி - வார்ப்பு + உருக்கி - ஒழுங்கான அங்க அமைப்பிற்காகத் திட்டமிட்ட தோற்றம்
வா[ர்]த்தது போல் - அழகிய சிலைபோன்ற தோற்றத்தை உருவாக்கியதுபோல்.

261. மருத்துவம் - குழந்தைப் பேறு பார்க்கும் குலத்தைச் சேர்ந்த மருத்துவச்சி.

262. சொல்படியே - கேட்டுக் கொண்டதின்படி.

264. கழஞ்சி < கழஞ்சு - குறிப்பிட்ட அளவு எடை. அன்றைய வழக்கில் இருந்த சொல்
ஓவியமே - அழகிய சித்திரம் போன்றவளே.

265. உரக்குழி - ஆடுமாடுகளின் கழிவுகளையும், சருகு தூசுகளையும் ஒரு ஆழமான குழியில்இட்டு, வயலுக்கு உரமாகச் சேமித்து வைக்கும் எருக்குழி.
தூத்தெடுப்பேன் < தூர்த்தெடுப்பேன் - அரித்து, சலித்து எடுத்தல். அவ்வளவு செல்வம் நிறைந்தவள். எருக்குழியில் தங்கம் கிடைக்கும் அளவிற்கு வளம் நிறைந்தவள் என்பதைக் குறிக்கின்றது.

267. முத்தம் < முற்றம் - வீட்டின் முன்பகுதி.

269. இருப்பிடம் - அவள் வசிக்கும் இடம்.

271. பாலகர் - இங்கு அம்பலக்கோனைக் குறிக்கிறது; ஆண் என்பது பொருள்.

272. அன்புடனே - தான் விரும்பிய அளவு பொன் கொடுத்ததால்தான், இவள் விருப்பமுடன் வருகின்றாள். அன்பு என்பது இங்குப் 'பொருள் கிடைத்த மனநிறைவு' என்பதைக் குறிக்கின்றது.

அப்படியே சம்மதித்து அம்பலக்கோன் வீட்டில்வந்தாள்
ஆயிழையாள் இங்குவர அழகுமதுரா புரியதிலே
தேவகியாள் திருவயத்திலே செங்கண்நெடுமாலும் தான்பிறந்தான்
செங்கண்நெடுமால்வந்தபோது தெய்வரம்பையரும் குரவைபாட
சப்தரிசி கன்னிமார்கள் சரமாரி பூச்சொரிய
அப்படியே அவரிருக்க ஆயர்பாடி தானதிலே
மருத்துவமே வந்தபோது மங்கைநல்லாள் அசோதையரும்
சலித்துவந்த மருத்துவமேநானும் சாவேனோ பிழைப்பேனோ
என்தாயே மருத்துவமேநானும் என்ன செய்யப்போறேம்மா
வயிற்றை வலிக்கு(து)தென்பாள் வாணாளும் போகுதென்பாள்
என்னமாய் வருகுதென்பாள் இப்போஉயிர் போகுதென்பாள்
பெண்ணாக[ப்] பிறந்தேனான் பொல்லாங்கு செய்தேனோ
அண்டினோரை ஏசினேனோ ஆண்டிகளை அடித்தேனோ

---

273. சம்மதித்து - அவன் கேட்ட பொன்னிற்கு ஒத்துக் கொண்டு.

275. செங்கண்நெடுமால் - சிவந்த கண்களையுடைய திருமால்.

276. தெய்வரம்பையர் - தேவருலகத்தைச் சேர்ந்த அழகிய நடனமாதர்; இவர்கள் இளமை நீங்காது, வேண்டிய உருவினை எடுப்பர்
குரவைபாட - இசைப்பாடல்களைப் பாட

277. சப்தரிசி கன்னிமார்கள் < சப்தரிஷிகன்னியர் - சப்தரிஷிகள் என்று அழைக்கப்படும் ஏழு முனிவர்கள் யாகஞ்செய்ய, அவர்களுக்குப் பணிவிடைகள் செய்ய நதிகள், கன்னியர் தோற்றம் எடுத்து வந்தன. அவர்கள் 1. சுப்பிரபை, 2. காஞ்சனாக்ஷி, 3. விசாலை, 4. மனோரமை, 5. ஓகவதி, 6. சுரேணு, 7. விமலோதகை என்பவர்களாகும்.
சரமாரி - மழைச்சரம் போன்று இடைவிடாது
பூச்சொரிய - பூமழை பொழிய.

280. சலித்துவந்த - நடந்துவந்த களைப்புடன் உள்ள.

282. வாணாளும் < வாழ்நாளும் - ஆயுள்
போகுதென்பாள் - உயிர் போகிறது என்கிறாள்.

283. என்னமாய் வருகுதென்பாள் - இன்னதென்று சொல்ல முடியாத அளவிற்கு வேதனைதருகின்றது என்பதைக் குறிக்கச் சொல்லப்பட்டுள்ள ஒரு பேச்சுவழக்கு.

284. பொல்லாங்கு - பிறர்க்குக் கெடுதிகள்.

285. அண்டினோர் - தன்னிடம் உதவிவேண்டி அடைக்கலமாய் வந்தவர்
ஆண்டிகள் - இல்லறவாழ்க்கையைத் துறந்து, காவி உடையும், உத்திராட்ச கொட்டையும் அணிந்த சாமியார்கள்.

பிச்சைக்கு வந்தவரை நானும் பின்னே வரச்சொன்னேனோ
பிழைப்பேனோ சாவேனோ பெரும்பாவி யான்தானும்
குறுக்கோட வலிக்குதென்பாள்என் குடல்கிடந்து நோகுதென்பாள்
நான்படும் பாடுதன்னை இந்த நாட்டிலுள்ளோர் படுவாரோ
வருபறியா பாடறிந்து வீற்றிருப்பா ருண்டானால்
கருமருந்தை[க்] குடித்துவிட்டு[க்] கல்போல் இருந்திருப்பேன்
இடிமருந்தை[க்] குடித்துவிட்டு நான் அம்மிபோல் இருந்திருப்பேன்
நஞ்சைத்தான் நடுவயிற்றில் நாயகமே தின்றேனில்லை
சாவேனோ பிழைப்பேனோ சண்டாளி நான்தானும்
பொம்மி பொம்மி தானழுவாள் வயிற்றோடே நோகுதென்பாள்
ஏங்கி ஏங்கி தானழுவாள் என்னமைாய் வருகுதென்பாள்
வயிற்றோட அடித்துக்கொள்வாள் வாயிலே அறைந்துகொள்வாள்
என்றுசொல்லி அசோதைஅம்மன் ஏங்கி அவள் பரதவித்து

---

286. பிச்சை - ஏதேனும் வேண்டி யாசிப்பவர்கள்
பின்னே வரச்சொன்னேனோ - பொருள் இருந்தும் கொடுக்க மனமில்லாமல் பிறகுவரச் சொல்லுதல்.

288. குறுக்கு - இடுப்பு
குடல்நோகுதல் - குழந்தைப்பேறால் வரும் துன்பம்
படுவாரோ - அடைவாரோ.

289. நான்படும்பாடு - குழந்தைப்பேறால் வரும் துன்பம்
படுவாரோ - அடைவாரோ.

290. வருபறியாபாடு - (வரவு + அறியா) வரக்கூடிய துன்பத்தினை அறியாது
வீற்றிருப்பார் -பார்த்துக்கொண்டிருப்பவர்
உண்டானால் - இருப்பார் என்றால்.

291. கருமருந்து - கருவைக் கலைக்கக்கூடிய கரிய கலவை மருந்து.

292. இடிமருந்து - வயிற்றுக் குழந்தையை அழிப்பதற்காக உரலில் இடித்துச் செய்யப்படும் கலவை மருந்து.

293. அரைமருந்து - கருவை அழிக்க அம்மியில் வைத்து அரைத்துக் கொடுக்கப்படும் மருந்து.

294. நாயகமே - பெரியவளை அழைக்கும் விளிச்சொல்.

295. சண்டாளி - தன்னையே வைதுகொள்ளுதல்.

296. பொம்மிபொம்மி - பொருமலுடனும், விம்மலுடனும், விம்மிவிம்மி
நோகுதல் - வலித்தல்.

297. ஏங்கிஏங்கி - தன்மேலேயே இரக்கம்கொண்டு.

அழுததொரு அசோதையர்க்கு அருங்குழந்தை பிறந்திடுமாம்
பத்திரகாளி பிறந்தபோது பாவினையா மருத்துவமும்
அம்மாஅம்மா மருத்துவமே ஆண்பிள்ளையா பெண்பிள்ளையா
என்றுசொல்ல அசோதைஅம்மன் எடுத்துரைத்தாள் மருத்துவமும்
பெண்பிள்ளைதான் என்றுசொல்லி[ப்] பெண்கொடியும்
எடுத்துரைத்தாள்
இப்படியும் சொன்னபோது ஏந்திளையும் ஏதுசொல்வாள்
அருந்தவசு செய்தவள்க்கு ஆண்குழந்தை இல்லாமல்
பெருந்தவசு செய்தவள்க்கு[ப்] பெண்குழந்தை பிறந்ததென்ன
இப்படியாய் அசோதைஅம்மன் ஏங்கிஅவள் பரதவித்து
வருத்தமது உண்டாகி வாய்த்ததொரு அசோதையரும்
மனக்கலக்கம் உண்டாகி மதிமயங்கி எல்லோரும்
மசங்கிஅவர் எல்லோரும் மண்மேல்தான் விழுந்தார்
அப்படியே மசங்கியிருக்க அழகுமதுராபுரி யானதிலே
தென்மதுராபுரி யானதிலே செங்கண் நெடுமாலும் பிறந்தபோது
மாயராமன் பிறந்தபோது மாதாபிதாவிலங்கு தெறித்திடுமா[ம்]
அப்படியே மசங்கியிருக்க அழகுமதுராபுரி யானதிலே
மாயனுட அழகைக்கண்டு மயங்கிஅழுதாள் மாதாவும்

## தேவகி கண்ணனிடம் சொல்லுதல்

மாதாவும் மயக்கங்கண்டு மாயவனும் ஏதுசொல்வார்

---

301. பத்திரகாளி பிறந்தபோது - குழந்தையாய் உருவெடுத்தபோது.

303. எடுத்துரைத்தாள் - விவரமாகச் சொன்னாள்.

304. பெண்கொடி - மருத்துவச்சி.

306. அருந்தவசு - ஆண்குழந்தைக்காக இறைவனை வேண்டித் தவம் இருத்தல்.

309. வருத்தம் - பெண்குழந்தை பிறந்துவிட்டதே என்று அடைந்த மனத்துயரம்.

310. மதிமயங்கி - மனம் குழம்பி.

311. மசங்கி < மயங்கி - மயக்கம் அடைந்து.

314. மாயராமன் - மாயகிருஷ்ணன்
மாதாபிதாவிலங்கு- தேவகி, வசுதேவன் இருவரையும் தனித்தனியே பிணைத்திருந்த இரும்புச்சங்கிலி
தெறித்திடுமா(ம்)- தானே உடைந்துவிடுமாம்.

316. மயங்கி அழுதாள் - இவ்வளவு அழகாகப் பிறந்த இந்தக் குழந்தையும், கம்சனின் கையால் இறந்து போகப் போகிறதே என்று எண்ணி மனம்வருந்தி அழுதாள்.

317. மயக்கம் - வருத்தம்.

மதலையாய் இருந்தவரும் வாய்திறந்தங்கு ஏதுசொல்லுவார்
மாதாவே என்தாயே மனக்கவலை வருவானேன்
அழுததொரு வகைதானென்ன அன்னையரே சொல்லுமென்றார்
உன்மாமனென்ற கஞ்சராசனுன் அண்ணர்களை[க்] கொன்றுவிட்டான்
தொண்ணித்தொன்பது பிள்ளைகளை[த்] தூணதிலே அடித்துக்
கொன்றான்
உன்தகப்பனையும் எந்தனையும் தனித்தனியே சிறையில் வைத்தான்
கண்மணியே உந்தனையும் கல்தூணில் அடித்துக் கொல்வான்
கொல்லுவான் உன்னைஎன்று நாளெலாம் அழுதே னென்றாள்
அப்போது பாலகனும் அன்னையவள் முகம்னோக்கி
தந்தை சிறையிருக்குமிடம் தாயாரே சொல்லுமென்றார்

## கண்ணனின் யோசனை

வாசுதேவன் இருப்பிடத்தை வகையுடனே அவளுரைத்தாள்
தாயே நீ எனைஎடுத்துஎன் தந்தை இடத்தில் விட்டு
பழையடி உன்சிறையில் பாவினையாய் இருக்கவேண்டும்
என்றுசொல்ல பாலகனும் எடுத்தாளே பாலகனை
திருமாலைக் கையிலெடுத்து[த்] தேவகியாள் உருகலுத்தாள்
கதவருகில் வந்துநிற்க கரியமாலும் அன்னேரம்
கால்கொண்டு உதறிடவே கதவுதாள் திறந்திடுமாம்

---

320. அழுததொருவகை - அழுவதன் காரணம்.

321. அண்ணர்கள் - முன்னர் பிறந்த தொண்ணூற்றொன்பது குழந்தைகள்.

325. நாளெலாம் - நாள்முழுவதும்; எந்நேரமும்.

326. பாலகன் - சிறு குழந்தையான கண்ணன்.

328. இருப்பிடம் - சிறைக்கூடம்
வகையுடனே - தெளிவுடன்.

330. பாவினையாய் - ஒன்றும் தெரியாதவனைப் போன்ற முகக் குறிப்பினளாய்.

332. உருகலுத்தாள் < உருகலுற்றாள் - பெற்ற மகனை உடனே பிரிகின்றோமே என்று மனம் உருகி அழுதாள்.

333. கரியமால் - கருமைநிறம் கொண்ட கிருஷ்ணன்.

334. உதறிடவே - காலைக்கொண்டு உதைத்துவிடவே.

பூட்டிருந்த கதவதுதான் போய்விடவே தாள்திறந்து
மடமடென்றும் திடுதிடென்றும் மங்கையவள் ஓடிவாறாள்
கணவனுட இடமதிலே கைக்குழந்தை தனைக்கொடுத்து
மதலைதனைக் கையில் கொடுத்து மனைதனில் வந்து சேர்ந்தாள்
பழையபடி அவள்சிறையில் பாவினையாக அவளிருந்தாள்
அப்படியே அவளிருக்க அருமை[ப்] பாலகனும் ஏதுசொல்வான்
என்னுடைய தந்தையரே இப்போதொருவார்த்தை சொல்லக்கேளும்
மாமனென்ற கஞ்சனைத்தான் வதைகள்செய்ய வேணுமென்று
மதலையாக நான்பிறந்தேன் மாதாபிதா சிறைதீர
ஆயர்பாடி தானதிலே அம்பலக்கோன் வீடதிலே
அசோதையுட இடமதிலே அருமைத்தங்கை பத்திரகாளி
தங்கையங்கே பத்திரகாளி தான்மதலையாய்(ப்) பிறந்தாள்
ஆயர்பாடி தனிலேதான் அசோதையுட இடமதிலே
ஆயிளைமார் அறியாமல் அங்கேளனைத் தான்கிடத்தி
தங்கையவள் பத்திரகாளி தனைஎடுத்து நீர்வருவீர்
ஆயனுடை செயலாலே அருஞ்சிறையில் இருந்தவர்தான்
மதலையவர் தானெடுத்து மதுராபுரிகோட்டை வாசல்வந்தார்
மதகரியானைகள் சாற்றும் கதவை மாயவனாரவர் மனதிலேஎண்ண
மண்டப[க்]கதவது இரண்டாய்[ப்]பிரிய மண்டபவாசல் படியது கடந்து
மண்டபவாசல் படியது கடந்து பட்டணம் மேடை கொத்தளம் விட்டு

---

338. மனை - சிறைக்கூடம்.

342. வதைகள் - உடலாலும் உள்ளத்தாலும் துன்புறுத்தல்.

343. சிறைதீர - சிறையில் அடைத்துக் கிடப்பதினின்றும் விடுதலை பெற.

348. ஆயிளைமார் அறியாமல் - பத்திரகாளியைப் பெற்றெடுத்த அசோதை அம்மனும், மருத்துவச்சியும் அறிந்துகொள்ள முடியாமல்.

350. ஆயன் - இடையர் குலத்தில் வாழும் கண்ணன்.

352. மதகரியானைகள் - மதம் கொண்ட வலிமையான மலை போன்ற யானைகள்
சாற்றும் - அடைக்கும்.

353. மண்டப[க்]கதவு - உட்கோட்டைக்கதவு.

354. பட்டணம் - நகரம்
மேடை - திண்ணை
கொத்தளம் - பாதுகாப்பிற்கு அமைக்கப்பட்ட வெளிப்புறச்சுவர்

### வசனம்

மதுராபுரி நகர்தானே கடந்து, வாசுதேவன் வருகிறபோது வருணனானவன் மழைகளைப் பொழிய வழியிலே இருந்தவர் மழையைக் கண்டோட, கண்டஇடம் எல்லாம் ஆறாய்[ப்] பெருக அரிகரராமன் அச்சுதராமன் பச்சமால் ராமன் மனதிலே எண்ண மழையில் நனையாது இவர்கள் வருக.

### வேறு

### கண்ணன் ஆயர்பாடி வருதல்

செடிகளின் காடு சேறைக் கடந்து
வாசுதேவன் வருகிற வழியில்
வந்த ஆற்றின் கரையிலே வந்து
அக்கரை செல்ல காலேற மாட்டாமல்
மனதிலே எண்ண மாயமாய் ஆறும்
முன்னால் வற்றிப் பின்னால் சுரக்க
வாசு தேவன் ஆற்றைக் கடந்து
அம்ப லக்கோன் வீடதில் வந்து
அரிகரி ராமனைத் தானே கொடுத்து
பத்திர மாகாளி தன்னை எடுத்து
பத்திர மாகவே கோட்டையில் வந்து
சித்தரம் போல் சிறையில் இருந்த
தேவகி யாளுட திருக்கையில் குடுத்து
தானும் சிறையில் போய் இருந்தான்

### வேறு

அப்படியே அவரிருக்க ஆயர்பாடி தனிலேதான்

---

மழையில் நனையாது இவர்கள் வருக - குழந்தை, திருமாலின் அவதாரம் என்பதால் எங்கும் மழைபொழிந்தும், இவர்களின் மேல் மழைநீர் படாது நனையாமல், தாங்கள் செல்லும் இடம் நோக்கிச் சென்றார்கள்.

355. சேறு - மழைநீரால் நனைந்த மண்.

358. அக்கரை - ஆற்றுக்கு அப்பக்கம்
காலேற - கால்களை எடுத்துவைக்க.
மாட்டாமல் - முடியாமல்.

360. முன்னால் வற்றிப் பின்னால் சுரக்க - வசுதேவர் குழந்தையுடன் நடந்து செல்வதற்கு ஏற்றவகையில், அவர் நடந்து செல்லும் பகுதி நீர் இல்லாமல் 'வற்றியும், நடந்து சென்று கடந்த பகுதி நீர் பெருகியும் காணப்பட்டது.

365. பத்திரமாகவே - பாதுகாப்பாகவே.

மசக்கமது தான்தெளிந்து மதலையவள் தான்பார்த்தாள்
ஆண்மதலை என்றுசொல்லி அசோதைஅம்மன் சந்தோசமாய்
மருத்துவத்தை[த்] தானெழுப்பி மங்கையவள் ஏதுசொல்வாள்
பேதையரே நீஎனக்குப் பெண்மதலை என்றுரைத்தாய்
அறியாமல் சொல்லிவிட்டேன் அசோதைஅம்மா பொறுக்க வேணும்
என்றுசொல்லி மருத்துவமும் அரிராமர்தனை எடுத்து
குளிப்பாட்டி அவளெடுத்துக் கொப்பிழறுத்து[க்] குரவையிட்டார்
அசோதையர்க்குப் பிறந்தமகன் அனந்தகிட்டனன்என்று பேரும் இட்டு
பேரும்இட்டு குரவையிட்டு[ப்] பெண்கொடிமாரும் அன்னேரம்
தட்டானை வரவழைத்துஒரு தங்கமணி தொட்டிலைச் செய்து
தங்கமணி தொட்டிலிட்டு[த்] தாலாட்டி[ப்] பாலகனை
அப்படியே அவரிருக்க அழகுமதுராபுரி யானதிலே
அம்மைபத்திரகாளி அழுதகுரல் அரசமன்னன் காதில்கேட்டான்
மறுபடியும் ஓடிவாறான் மன்னனந்த கஞ்சராசன்
கதவருகில் வந்துநின்று கதவுதனைத் தாள்திறந்து
அருகேவந்து நின்றுகொண்டு அரசமன்னன் ஏதுசொல்வான்
அண்ணன்தான் அவுருமா பெண்குழந்தை அவுருவமா
என்றுசொல்ல கஞ்சராசன் எடுத்துரைத்தான் தேவகியும்
தொண்ணித்தொன்பது பிள்ளைகளைத் தூணதிலே அடித்து[க்] கொன்றாய்
ஆண்மதலையாய் இருந்ததுண்டால் அறுத்துவிடும் உன்சிரசை

---

371. ஆண்மதலை - ஆண் குழந்தை.

373. பேதையரே - அறிவில்லாதவள்.

374. பொறுக்கவேணும் - மன்னிக்க வேண்டும்.

376. கொப்பிழறுத்து - தாயுடம்புடன் இணைந்திருக்கும் குழந்தையின் நடுவயிற்றில் உள்ள கொப்பூழ்க் கொடியை அறுத்தல் வழக்கம்
குரவையிட்டு - நாவால் ஒலிஎழுப்பிப் பாடுவது.

377. அனந்தகிஸ்ட்னன் < அனந்த கிருஷ்ணன்.

379. தட்டான் - தங்க நகைகள் செய்பவன்
தங்கமணிதொட்டில் - தங்கமணிகளைக் கோர்த்துச் செய்யப்பட்ட தொட்டில்.

389. அறுத்துவிடும் - முனிவரின் சாபப்படி கஞ்சனின் தலையைக் கொய்து கொல்லும்
சிரசு - தலை.

பெண்மதலையாய் இருப்பதினால் பெற்றதற்காய் வளத்திடுவேன்
பார்த்தானே கஞ்சராசன் பாவியவன் கோபமானான்
கண்ணுரண்டும் சிவப்பேறி காதுரெண்டும் பொறிகிளம்பி
விண்ணும்மண்ணும் தானதிர வேங்கைபோல் சீறிக்கொண்டு

**வசனம்**

தந்திரமாகவே தங்கையை நோக்கி, இப்படி[ச்] சொன்னாய் தங்கையே, உன்னை[க்] கானவனத்திலே கொல்லுதல் நன்று. ஆரபாரத்தோடு கிட்டே நெருங்கினான். கொண்டை மயிரைச் செண்டோடு பிடித்து வஞ்சகநெஞ்சம் கொண்டந்த கஞ்சன் வாய்த்தர்க்கமிட்டான். தங்கை தேவகி தானேபயந்து தமையனாருட கையைப் பிடித்து, தேவகியாள் ஒரு வார்த்தை சொல்லுவாள்.

**வேறு**

**காளியின்சக்தி**

மங்கை அவள்தான் பதறி
மறுத்துஒரு வார்த்தை சொல்வாள்
அண்ணனே அவுருவ மென்று
ஆயிளையும் சொல்லலுற்றாள்
தங்கை யவள் சொன்ன போது
தாடாளன் ஏது செய்தான்

---

390. வளத்திடுவேன் < வளர்த்திடுவேன் - வளர்ப்பேன்.

391. பாவியவன் - பாவச்செயல்களைச் செய்பவன்.

393. விண்ணும் மண்ணும் - வானமும் பூமியும்.
தானதிர - நடுங்கும்படியாக ஆடும்படியாக.
வேங்கைபோல் - பாயும் புலி போல்
தந்திரமாக - வஞ்சமாக, கோபத்தைக் காட்டிப் பயமுறுத்தி
கானவனம் - முன்பு வேட்டைக்குச் சென்ற அடர்ந்த காடு
கொண்டை - தலைமுடியினை மொத்தமாக முடிதலுக்குப் பெயர்
செண்டோடு - கொத்தாக, மொத்தமாக
தர்க்கம் - விவாதம்
பயந்து - தன்னைக் கொன்றுவிடுவானே என்று பயந்து
தமையனாருட - அண்ணனுடைய.

394. பதறி - வேகமாக அவள் துடித்து.

396. தாடாளன் < தாளாளன் - ஊக்கம் உள்ளவன்.

கல்தூணில் அடிக்க வென்று
காலையு மேதான் பிடித்தான்
ஆனமட்டும் தூக்கிப் பார்த்தான்
அணுஅளவும் அசைய வில்லை
ஏலுமட்டும் தூக்கிப் பார்த்தான்
எள்ளளவும் அசைய வில்லை
அண்ணன் படும் துயரமதை
அறிந்தாளே தேவகியாள்
தமையன் படும் துயரமதை[த்]
தங்கையரும் தான் அறிந்தாள்

## வேறு

கலகலெனவே சிரித்தாள் கற்புடைய மங்கையரும்
பெற்றதாய் சிரித்ததினால் பெண்குழந்தை எழும்பிடுமாம்
தேவகியாள் சிரித்ததினால் சிறுகுழந்தை எழும்பிடுமாம்
கல்தூணில் அடிக்கும்முன்னே கஞ்சனுட நெஞ்சதிலே
சிந்தையுள்ள பத்திரகாளி கஞ்சனுட மார்பில்
சீறிஎட்டி தானுதைத்து அந்தரத்தில் நின்று
பண்டுவினையால் கெடுவாய் சண்டாளா கஞ்சா
அண்ணரெங்கள் மாயராமன் ஆயர்பாடி தன்னில்
அம்பலக்கோன் வீடதிலே அன்புடனே இருக்கார்
வஞ்சனான கஞ்சா உன்னை நெஞ்சைப் பிளக்குமுன்னே
ஆறிக்கோ நெஞ்சு தேறிக்கோ வென்று

---

398. ஆனமட்டும் - தன்னால் முடிந்த அளவு.
அணு அளவும் - கொஞ்சம்கூட

399. ஏலுமட்டும் < இயலுமட்டும் - முடிந்தவரை.

400. துயரம் - துன்பம்.

403. எழும்பிடுமாம் - தரையை விட்டு மேலெழும்புதல்.

407. சீறிஎட்டி - கோபமுற்றுக் கால்களைத் தூக்கி.

408. பண்டுவினை - முன்னர் செய்த தீயசெயல்கள்.
கெடுவாய் - அழிந்து போவாய்.

412. ஆறிக்கோ - உன்னை ஆறுதல் படுத்திக்கொள்.
தேறிக்கோ - உன்னை நீயே தேற்றிக்கொள்.

## வேறு

## கஞ்சனின் துன்பம்

அம்மை பத்திரமா காளி தானும்
அந்தர மார்க்கமாய் எங்கும் மறைந்து
எள்ளுக்குள் எண்ணைபோல் ஏகமாய் இருந்தாள்
கெட்டுப்போற புத்திகொண்ட அந்த[க்] கஞ்சன்
சட்டமுடன் தங்கையைத் திட்டமுடன் சிறையில்
சிறையில் வைத்தவன் திரும்பியே வந்து
அரண்மனையில் வந்து மனமது துடித்து
எண்ணாத தெல்லாம் எண்ணி எண்ணி

**வசனம்**

எண்ணி எண்ணி மனம் புண்ணாய் உழல்கிறான். வஞ்சகநெஞ்சுதானே உருகி, வாய்த்த அறையிலேதான் படுத்தான். தீயிலே மெழுகது போல் உருகி, மனமது ஏங்கி, சினமதுபொங்கி, மண்டையில் மூளை வரண்டு கொதித்து வாடிமசங்கி

---

414. அந்தர மார்க்கம் - தரைவழியில் அல்லாது, வான்வழியில் செல்லுதல்
மறைந்து - பிறர் கண்களுக்குத் தெரியாத வகையில்.

415. எள்ளுக்குள் எண்ணைபோல் - எள்ளுக்குள் எண்ணெய் இருப்பது, வெளியில் தெரியாமல் எள்முழுவதும் எண்ணெய் பரவி இருக்கும். அதுபோன்று பத்திரகாளி எல்லாஇடத்திலும் பரவி இருக்கிறாள்.
ஏகமாய் - முழுவதுமாய்.

416. கெட்டுப்போற புத்தி கொண்ட - தன்னைக் கண்ணன் அழிக்கப் போகிறான் என்பதை உணர்ந்து கொள்ள முடியாமல், தன் அழிவைத் தானே தேடிக்கொள்ளும் குணம் கொண்ட கம்சன்.

417. சட்டமுடன் - மிகுந்த ஆணவத்துடன்
திட்டமுடன் - திட்டமிட்டு.

420. எண்ணாத தெல்லாம் எண்ணி - என்ன தீங்குகள் நேருமோ, என்று பலவாறு மனம் உழன்று
மனம் புண்ணாய் - மிகுந்த மனவேதனையில்
மண்டை - தலை
மூளைவரண்டு - தப்பித்தலுக்கான வழி எது என்று தெரியாமல் அதிகமாகச் சிந்திப்பதால் ஏற்பட்ட மூளை அயர்ச்சி.

மூடிப்படுத்தான். அப்படியே அவனிருக்க ஆயர்பாடி தானதிலே நாளொரு வண்ணமாகப் நந்த கோபாலன் வளருகிறான். பொழுதொரு வண்ணமாக பெரிய பெருமாளும் வளருகிறார். தங்கத் தொட்டில் மீதிருந்து தாமோதரன் வளருகிறார். மதலையாய் இருந்துகொண்டு மாயவனும் ஏது செய்தார்.

### வேறு

பால்தயிர் வெண்ணைகளை[ப்] பாலகனும் திருடிஉண்டார்
அசோதையிடம் பிறந்ததுமுதலாய் ஆயர்பாடி தன்னிலேதான்
பால்தயிர் வெண்ணைகள்தான் பாதியது தேறவில்லை
இப்படியாய் அனந்தகிஸ்ட்னன் இருக்கிறதோர் வேளையிலே
மதுராபுரி நகர்தனிலே மன்னனந்த கஞ்சராசன்
மனக்கவலை பெரிதாக மன்னவனும் போய்[ப்]படுக்க
கண்டானே மந்திரியும் கஞ்சனுட திருமுகத்தை
ஏங்காணும் ராசமன்னா இப்படித்தான் இருப்பதென்ன
அந்தநல்ல விபரமதை அரசமன்னா சொல்லுமையா
என்றுகேள்க்க மந்திரிக்கு எடுத்துரைத்தான் ராசமன்னன்
தொண்ணித்தொன்பது பிள்ளைகளை[த்] தூணதிலே அடித்துக்
கொன்றேன்
இப்போதொரு பெண்குழந்தை யானெடுத்து அடிக்குமுன்
அந்தரத்தில் பறந்த அந்த அழகுசிறு குழந்தையது
ஆயர்பாடி[ப்] பட்டணத்தில் அம்பலக்கோன் வீடதிலே
அசோதையுட திருவயிற்றில் அண்ணருமேதான் பிறந்து வளருகிறார்
அரசமன்னா உந்தன் சிரமறுக்க ஆயர்பாடியில் வளருகிறார்
என்றுசொல்லி சிறுகுழந்தை ஏகிவிட்டாள் அந்தரத்தில்

---

நாளொருவண்ணம் - மிகுந்த செல்வத்தினோடும், தனியான கவனிப்போடும் வளருவதால், அழகிய மேனிநிறத்தவனாக இருக்கிறான்
தாமோதரன் - கண்ணனின் மற்றொரு பெயர்.

423. தேறவில்லை - மிஞ்சவில்லை.

424. அனந்தகிஸ்ட்னன் < அனந்தகிருஷ்ணன் - பாம்பின் மேல் துயில் கொள்ளும் திருமால்.

428. ஏங்காணும் - இங்கே பாருங்கள்; வழக்குச் சொல்.

429. விபரம் < விவரம் - நடந்த செய்திகள் குறித்த விளக்கம்.

430. கேள்க்க < கேட்க - வினவுதல்.

435. அண்ணருமே - பத்திரகாளியின் சகோதரனான கண்ணன்.

437. ஏகிவிட்டாள் - சென்றுவிட்டாள்.

மசக்கமதாய் நான்படுத்தேன் மந்திரியே எனஉரைத்தான்
அந்த வார்த்தை காதில் கேட்டு அறிவுள்ள மந்திரியும்
அஞ்சவேண்டாம் மலையவேண்டாம் அரசமன்னா சொல்லக்கேளும்
ஆயர்பாடி[ப்] பட்டணத்தில் அனந்தகிஸ்ட்னனைக் கொல்வதற்கு[ப்]
பாதிநாடு தாறேன் என்று பறையறைய வேண்டுமென்றான்
அப்படியே சொன்னபோது அரசமன்னன் சந்தோசமாய்

**வேறு**

இங்கேவா இங்கேவா மந்திரியே என்று
இரண்டு கையாலே சேர்த்தெடுத்தான்
ஆவிகட்டியே முத்தங்கள் இட்டான்
உன்னைப் போலொரு மந்திரியானுமே
உலகத்திலே கண்டதும் இல்லையே
கட்டிமுத்தங்கள் திட்டமாய் இட்டவன்
கிட்டகிட்ட வாமந்திரியே

**வசனம்**

என்றுமே பலவிருதுகள் பேசியே, பறையடிக்கும்படி பறையர்களைக் கூப்பிடச் சொன்னான் கஞ்சராசன். பறையடிக்கும் பறைக்காரனை வரவழைத்துச் சொல்வார்.

**வேறு**

## கண்ணனைக் கொல்ல அரக்கி வருகை

தன்ன னன்ன தன்னதன்ன னன்னா தன்னா
அம்பலக்கோன் வீடதிலே அனந்தகிஸ்ட்ன பாலன்

---

440. அஞ்சவேண்டாம் - பயப்படுதல் வேண்டாம்.
மலைய வேண்டாம் - திகைப்படைய வேண்டாம்.

442. தாறேன் < தருகின்றேன்.

445. சேர்த்தெடுத்தான் - இருகைகளாலும் சேர்த்துப் பிடித்தான்.

446. ஆவிகட்டியே - உடலைத் தழுவியே.

449. திட்டமாய் - அளவோடு.

450. கிட்ட கிட்ட வா - அருகில் வந்து கேள்
விருதுகள் - புகழ்ந்து பேசும் சொற்கள்.

பாலகனை[க்] கொண்டதுண்டால் பாதிநாடு தருவோம்
நாடுகளும் வீடுகளும் நலமுடனே தருவோம்
கொல்லத்தக்க வீரருண்டானால் சொல்லவேணும் இப்போ
என்றுசொல்லி பறையறைய ஏற்றராசன் சொல்லவே
கெட்டிஎன்று பறையரவரிட் திட்டமாகச் சொல்லி
அரசனுடைய சொல்படியே அறைந்தாரே பறையை
பாரவன[ப்] பேச்சியவள் பறயோசை கேட்டு
வாய்த்ததென்று பேச்சியவள் பறையவ[ரி]டம் சென்று
பறையறைய வேண்டாங்காண் பாலகனைக் கொல்ல
கொன்றிடுவேன் பாலகனை[க்] கொட்டவேண்டாம் பறையே
கைஅமத்திப் பறையதனை[க்] கண்காட்டி ஏதுசொல்வாள்
அரசனிடம் இருபேரும் அன்புடனே சென்று
அரசனிடம் வந்துநின்று ஆயிளையாள் ஏதுசொல்வாள்

**வேறு**

ஆயர்பாடி தானதிலே அருங்குழந்தைதனைக் கொன்றுவாறேன்
பாதினாடு தாறேன்என்று பரமசிவன்மேலாணையிட்டு

---

453. கொண்டதுண்டால் - கொன்றது உண்டால்.

457. கெட்டி - உத்தரவுக்குப் பணிதல்.

459. பாரவன - கொடுமையான பண்புகள் கொண்ட.
பேச்சி - புராணத்தில் பூதனை என்று சொல்லப்படும் அரக்கி. கம்சன் ஏவலுக்காக, கண்ணனைக் கொல்ல வந்தவள். தன் மார்பகத்தில் ஊறிய பாலில் நஞ்சு கலந்து, கண்ணனுக்கு ஊட்ட முயலுகையில், அவளின் வஞ்சனையறிந்த கண்ணன், அவளுடைய மார்பகத்தின் வழியாகவே அவள் உயிரை எடுத்துக்கொன்று விடுகிறான்.

460. வாய்த்ததென்று - நல்லதொரு வாய்ப்பு இது என்று.

461. வேண்டாங்காண் - வேண்டியதில்லை.

462. கொட்ட வேண்டாம் - பறையை அடிக்க வேண்டாம்.

463. கைஅமத்தி < கையமர்த்தி - பறையடிப்பதை நிறுத்தச் சொல்லி கையால் சைகை செய்தல்
கண்காட்டி - கண்ணை இடமும் வலமும் திருப்பி, பறையறைவதை நிறுத்தச் சொல்லுதல்.

464. இருபேரும் < இருவரும் - பூதனை என்ற அரக்கியும் பறையறைபவனும்.

467. பரமசிவன் மேலாணையிட்டு சிவனை முன்னிறுத்திச் சூளுரைத்து உறுதிப்படுத்துதல்.

ஆணையிட்டுத் தந்ததுண்டால் அந்தப்பாலகனைக் கொன்றிடுவேன்
அரசனவன் சம்மதித்து ஆதிசிவன் மேலாணையிட்டு
தாம்பூலம் தான்கொடுத்து தயவுடனே[த்] விடைகொடுத்தான்
விடைவாங்கி அரக்கியவள் விரைவுடனே ஓடிவாறாள்
மாயமென்று அறியாமல் வாளரக்கி ஓடிவாறாள்

## வேறு

தானன்ன தானன தன்னா தனைதன்ன தானனன தனனதன்னா

சீவிச்சிணுக்குகெடுத்து[ச்] சிங்காரமாய் சிணுக்கெடுத்து
ஆயிளையா ளந்தவா ளரக்கியவள் கைவீசிவீசி
மெள்ளமெள்ள கான அரக்கியவள்
நெத்திக்கு மையை நிறையுடன்தீட்டி
கொண்டைக்குப் பூவை[ச்] செண்டோடுவைத்து
கோதையாளந்த வாளரக்கி யவளுமே
காலிலே தண்டை சிலம்பணிந்தாள்
கையிலே பலவளைய லிட்டு
மெய்யிலே சிலபணிகள் பூண்டு
மெள்ளமெள்ள வாள் அரக்கியவள்

---

470. தாம்பூலம் - வெற்றிலை, பாக்கு இரண்டையும் சம்மதத்திற்கு அடையாளமாய்க் கொடுத்தல். இவை மங்கலப் பொருட்களும் ஆகும்.
விடைகொடுத்தான் - காரியத்தைச் செய்து முடிக்கப் புறப்படுவதற்கு அனுமதி வழங்கினான்.

474. சிணுக்கெடுத்து - கூந்தலிலுள்ள சிக்குகளை எடுத்து.
சிங்காரமாய் - உற்சாகமாய்.

475. நிறையுடன் - நிறைந்த அளவில்.
தீட்டி - வைத்துக்கொண்டு.

476. செண்டோடு - மொத்தமாகக் கட்டிவைத்த பூங்கொத்து.
கோதை - அழகிய பெண்.

477. தண்டை - காலணி வகைகளுள் ஒன்று.
சிலம்பு - இக்காலத்தில் அணியும் கொலுசு போன்ற ஓர் அணி. ஓசைகேட்பதற்காக இதனுள் முத்துப் பரல்களோ, வைரக்கற்களோ பொதிந்து வைக்கப்படும். சிலப்பதிகாரக்கதையில் ஒரு முக்கிய திருப்பு முனையாகச் சிலம்பு பற்றிய நிகழ்ச்சிகள் அமைவதைக் குறிப்பிடலாம்.

478. மெய்யிலே - உடம்பிலே.
பணிகள் - நகைகள்.

நல்லபாலை ஒருஸ்த்தன மதிலும்
நஞ்சு[ப்]பாலை ஒரு ஸ்த்தன மதிலும்
நந்தகோபால் அரிகிஸ்ட்ணா ராமனைக் கொல்ல
வஞ்சனையாகவே கஞ்சன் சொல்புத்தியாக - சீவி
ஆரபாரத்துடன் அசோதை வீட்டில்
ஆயிளை யாளவள் மீளவே சென்று
அம்மாசும்மா தாயே அசோதையரே
அன்புடன்வந்தேன் வனப்பேச்சி யென்றவள் - சீவி

**வேறு**

## அரக்கி இறத்தல்

அம்மம்மா அசோதையரே அனேகநாள் தவசிருந்தீர்
ஆண்மதலை இல்லாமல் அருந்தவசு செய்யலுற்றீர்
பெண்மதலை இல்லாமல் பெருந்தவசு செய்யலுற்றீர்
ஆண்குழந்தை பிறந்ததென்று அறிந்துவந்தேன் அசோதையரே
பாலனுட திருமுகத்தை[ப்] பார்க்கவென்று வந்தேனம்மா
அப்படியே சொன்னபோது அனந்தகிஸ்ட்னன் தானறிந்தார்
கஞ்சனுட திருக்கூத்தைக் கண்டாரே கரியமாலும்
அரக்கியுட மடிதனிலே அனந்தகிஸ்ட்னன் ஏறிக்கொண்டார்
பேச்சியுட மடிதனிலேஎங்கள் பெருமாளும் ஏறிக்கொண்டார்
மார்போட தானணைத்து மதலைக்கு[ப்] பால்ஊட்டுகிறாள்
நஞ்சுப்பாலை[ப்] பிடித்துக்கொண்டு நல்லபாலெல்லாம்
குடித்துக்கொண்டார்

---

479. ஸ்த்தனம் - தனம். பெண்ணின் மார்பகம்.
480. சொல்புத்தியால் - கஞ்சன் சொல்லிக்கொடுத்த அறிவுரையைப் பின்பற்றி.
481. ஆரபாரத்துடன் < ஆரவாரத்துடன் - மிகுந்த உற்சாக இரைச்சலுடன். மீளவே - மீண்டும்.
482. வனப்பேச்சி - காட்டில் வாழும் அரக்கி.
483. அனேகநாள் - நீண்ட நாள். தவசிருந்தீர் - தவம் இருந்தீர்கள்.
487. திருமுகத்தை - அழகிய முகத்தை.
489. திருக்கூத்து - சதித்திட்டம்.
490. மடிதனிலே - உட்கார்ந்த நிலையில் இருந்த அரக்கியின் மடியில் ஏறுதல்.
493. நஞ்சுப் பால் - கண்ணனைக் கொல்வதற்காக அரக்கியின் ஒரு மார்பகத்தில் இருந்த நச்சுப்பால்.

ஊனிருக்க உயிரைஎல்லாம் உலகளந்தோன் வாங்கலுற்றார்
மாயப்பேச்சி தன்னை[க்] கொன்று மாயவனும் இறங்கிவிட்டார்
மலைக்குமேல் மலைபோல்மண்மேலே மாண்டாளே வாளரக்கி
அப்படியாகவே வனப்பேச்சி ஆயர்பாடிதனில் மடிந்தாள்
உதையகிரி மலைதனிலே உதித்தானே ஆதித்தனும்

## அரக்கியை வெட்டிக் கடலில் எறிதல்

கண்டாரே அம்பலக்கோன் காட்டரக்கி சடலமதை
இதுவென்ன அதிசயங்காண் என்றுமே மனதிலெண்ணி
அதிசயத்தை[த்] தான்பார்த்து அம்பலக்கோன் ஏது செய்வார்
ஆயிரம் இடையருக்கும் ஆள்விட்டார் அம்பலக்கோன்
அம்பலக்கோன் சொல்படியே ஆயிரம்பேரும் வந்துசேர்ந்தார்
அசோதையுட மனைதனிலே அதிசயத்தைத் தான்பார்க்க
ஆயுதங்கள் கொண்டுவந்து அரக்கியைவெட்டி தான்சுமந்தார்
கண்ட கோடாலி தனைக்கொணர்ந்து கண்டதுண்டம் செய்கிறார்
சக்கைசக்கையாய்[த்] தான் பிளந்து சமுத்திரத்தில் எறியும் என்றார்
சவத்தை ஏழரைநாழிகை இடைவிடாமல் சுமக்கலுற்றார்

---

494. ஊனிருக்க - உடம்பு மட்டும் இருக்க.
உயிரை . வாங்கலுற்றார் - உயிரை எடுத்தல். அரக்கியின் எண்ணத்தை அறிந்து கொண்ட கண்ணன், அவள் உடம்பாகிய சக்கை இருக்க, சாறுபோன்ற உயிரை உறிஞ்சி எடுத்தார்.

496. மலைக்குமேல் மலைபோல் - உயிர் போய்விட்டதால், அரக்கி, பெரிய மலைபோன்ற தோற்றத்துடன் இறந்துகிடந்தாள். மலைக்குத் தரையும் அரக்கியும் உவமிக்கப்பட்டுள்ளனர்.

498. உதையகிரிமலை - ஆயர்பாடியின் அருகேயுள்ள ஒரு மலை.

499. காட்டரக்கி - காட்டில் வாழும் அசுரவமிசத்துப் பெண்.

502. ஆட்களை அழைத்து வரச் சொல்லுதல்.

505. கத்தி, வாள் போன்ற கூர்மையான கருவிகள்.

506. கண்டகோடாலி - வெட்டும் கோடரி.
கொணர்ந்து - கொண்டுவந்து.
கண்டதுண்டம் - சின்னச்சின்ன துண்டுகளாக.

507. சக்கைசக்கையாய் - துண்டுத் தசைகளாய்.

508. சவத்தை - இறந்த உடலை.
ஏழரைநாழிகை - சுமார் இரண்டேமுக்கால் மணி நேரம்.

அரக்கியவள் தனை[ச்]சுமந்து அலைகடலில் தான்மூழ்கி
ஆயிரம் இடையவரும் அவரவர்மனையில் சென்றார்

## கண்ணனின் குறும்பு

அப்படியே அவரிருக்க அனந்தகிஸ்ட்ணன் ஏதுசெய்தான்
பால்தயிர் வெண்ணைகளைப் பாலகனும் திருடிஉண்டான்
முத்தெடச்சி வீடதிலே முகில்வண்ணன் வந்து சேர்ந்தான்
பூனைபோல வடிவெடுத்துப் புகுந்தானே அனந்தகிஸ்ட்ணன்
பால்தயிர் வெண்ணைகளைப் பாலகனும் திருடிஉண்டான்
மாயவனும் திருடிஉண்டு மற்றுமொரு மனையில் சென்று
வெண்ணைகளை[த்] தானெடுத்து மகளினுட வாயில்தேய்த்து
கண்ணனான அனந்தகிஸ்ட்ணன் கடுகவீட்டில் வந்து சேர்ந்தான்
அப்படியாய் அவருக்க ஆதித்தனும் உதயமானான்
முத்தெடச்சி தானெழுந்து மோர்கடைய வேணும் என்று
பால்கடைய வேணும்என்று பானைகளை[ப்] பார்க்கும் போது
பாலைஅவள் காணாமல் பரதவித்து ஏதுசெய்தாள்
அக்காஅக்கா தோழிகளே அனியாயம் கேட்டீர்களா
வெண்ணைக் கலசமெல்லாம் வெறுங்கலசமாய் இருக்குதுஅய்யா

---

509. அலைகடலில் மூழ்கி - புராணத்தில், பூதனையை வாளால் துண்டுதுண்டாக வெட்டி, சுடுகாட்டிற்குக் கொண்டு சென்று தீயிலிட்டுக் கொளுத்தினர் என உள்ளது.

513. முத்தெடச்சி - முத்து + இடைச்சி. இடையர்குலப்பெண்.
முகில்வண்ணன் - கருமேகம் போன்ற கரியநிறத்தையுடைய கண்ணன்.

514. பூனைபோல - பூனை அடிஎடுத்து வைக்கும் பொழுது ஒலிஎதுவும் கேட்பதில்லை. ஆதலால் பூனைபோல் என்று உவமிக்கப்பட்டுள்ளது.

517. மகளினுட வாயில்தேய்த்து - அந்த வீட்டுப் பெண்ணும் தெரியாமல் வெண்ணை உண்டாள் என்று ஒரு தோற்றத்தை உருவாக்க, அவ்வாறு செய்தான்.

518. கடுக - விரைவாக.

520. மோர்கடைய - முதல் நாள் இரவில் உறை ஊற்றி வைத்தபால், மறுநாள் காலையில் கெட்டியாக உறைந்து நிற்கும். அதை நீர்விட்டு, மத்துகொண்டு கடைந்தால் வெண்ணை திரண்டுவரும். மோர் தனியாகப் பிரிந்து நிற்கும்.

524. கலசம் - வெண்ணையை வைத்திருக்கும், மண்ணால் செய்யப்பட்ட பானை.

பாலையுமே காணவில்லை பாருங்கள் அக்காமாரே
ஆர்செய்த மாயமென்று அறிந்ததுண்டால் சொல்லுமம்மா
அசோதைமகன் செய்தமோசமென்று அறிந்தாளே முத்தெடச்சி
அசோதையுட இடமதிலே ஆயிளையும் ஓடிவந்து
பாரடி அசோதையளேஉன் பாலன்செய்த அனியாயத்தை
அப்படியே சொன்னபோது அசோதையரும் ஏதுசொல்வாள்
பால்குடிக்கும் குழந்தைதன்னைப் பாவிநீங்கள் சொல்லலாமோ
கள்ளனென்று நீயுரைத்தாய் கைப்பிடியாய் பிடித்தாயோ
இவளேச அவ்ளேசஆக இருபேரும் சண்டைசெய்தார்
இப்படியே ஆயிளைமார் எல்லோரும் கூடனிற்க
அப்படியே அவர்கள் நிற்க அனந்தகிஸ்ட்டினன் ஏதுசெய்தார்
இடச்சிகள் நிற்கும்போது எம்பெருமான் ஏது செய்தார்
ஒருத்தியவள் ஒருத்தி அறியாமல் உலகளந்தோன்
இடச்சியுட சேலைகளை முடிச்சுப்போட்டு நின்றார்
முடித்துப்போட்டு வெண்ணை யுண்டோன் திண்ணமாநிற்க
ஆயர்பாடி இ[ை]டப்பெண்கள் மாயமதைத் கண்டு
மாயனென்று அறியாமல் ஆயர்பாடிப் பெண்களெல்லாம்
மண்டையது உடையும்படி[ச்] சண்டையது போட்டுக்கொண்டு

---

526. ஆர் < யார்?.

527. மோசம் - திருட்டு.

528. இடமதிலே - வீட்டிலே.

529. அசோதையளே - மதிப்பிற்காக 'அள்' விகுதி வந்துள்ளது.

532. கள்ளன் - திருடன்.
கைப்பிடியாய் - கையும் களவுமாக வெண்ணையைத் திருடிக் கொண்டிருக்கும் போது, களவுப் பொருளும் கையுமாகப் பிடித்தல்.

533. இவளேச அவளேச - இவளும் அவளும் ஒருவரையொருவர் திட்டிக்கொள்ள.

538. முடிச்சுப்போடுதல் - ஒரு சேலையின் முனையையும் (முந்தானை), மற்றொரு சேலையின் முனையையும் (முந்தானை), இணைத்து முடிச்சுப் போட்டு விடுதல்.

539. வெண்ணையுண்டோன் - வெண்ணையைத் திருடி உண்டதால் கண்ணனுக்கு இப்பெயர் ஏற்பட்டது.
திண்ணமாய் - திடமாய்.

542. மண்டையது உடையும்படி[ச்] சண்டை - ஒருவரைஒருவர் தலை உடையும் அளவுக்குத் தாக்கிக் கொண்டனர்.

சண்டையிட்ட பெண்களெல்லாம் தங்கள் வீடுபோக
காலெடுத்து வைத்திடவே சேலையது இழுத்திடவே
திரண்டபெண்கள் சிரித்திடவே ..... .....
முடித்தசீலை தனைஅவிழ்த்து முனைந்து சண்டையிட்டார்

### வேறு

இப்படியே சண்டையிட்டு எல்லோரும் ஒன்று சேர்ந்தார்கள்
வாயிலே வெண்ணை தேய்த்ததொரு பெண்ணை
பெண்ணினுட அன்னையவள் கண்ணிலே கண்டு
வெண்ணை களவாடித் தின்னதொரு கள்ளி
வெளியேபோ வெளியேபோ என்றவள் சொல்ல
வெண்ணைகள் திருடி உண்டதும் இல்லை
கண்ணில் காணாது வார்த்தைகள் சொன்னாய்
என்று சொல்லி இருவருங் கூடியே
வாயினால் வெண்ணை தின்றதும் நீயே
வாயினால் பொய்யை[ச்] சொன்னதும் நீயே
மகளும் தாயும் மனது கலங்கிடவே
சினமது பொங்கிச் சீறி எழுந்து
சண்டை யிட்டார் தாயும் மகளும்

### வேறு

## கண்ணன் வாயில் அண்டம் தெரிதல்

இப்படியே இவரிருக்க ஏற்ற திருமாலும் ஏதுசெய்தார்

---

545. திரண்ட பெண்கள் - அவர்களின் சண்டையைப் பார்ப்பதற்காகக் கூடிநின்ற பெண்கள்.

546. முனைந்து - மறுபடியும் அதிக வேகத்துடன்.

548. தேய்த்ததொரு பெண் - முன்பு கண்ணன், வெண்ணை தேய்த்துவிட்ட பெண்.

550. களவாடி - திருடி.
கள்ளி - திருட்டுப் பெண்.

557. கலங்கிடவே - தாயும் மகளும் தங்களுக்குள் சண்டையிட்டுக் கொண்டதால் அவர்களுக்கு ஏற்பட்ட மனவருத்தம்.

560. திருமால் - அவதாரக் கண்ணன்.

அசோதையரும் பார்க்கவேணுமென்று அந்தநடுச் சாமத்திலே
தன்னுடைய உறியதிலே தாமோதரன் ஏறிக்கொண்டார்
பால்தயிர் வெண்ணைகளை[ப்] பாலகனும் திருடிஉண்டார்
உருட்டின சத்தத்திலே உறங்கினவள் தானெழுந்து
பார்த்தாளே அசோதையரும் பாலனுட திருக்கூத்தை
கண்டாளே அசோதையம்மன் கள்ளனுட திருக்கூத்தை
கைப்பிடியாய்[த்] தான்பிடித்து[க்] கன்னஞ்செவிடு செவிடெனவே
அடித்தாளே அசோதையரும் அரிராமன் தனைப்பிடித்து
அடிபொறுக்க மாட்டாமல் அனந்தகிஸ்டனன் தானழுதார்
வாய்திறந்து அழுகையிலே மாயனுட நெஞ்சத்திலே
ஏழுகடல் அங்கிருக்க இலங்காபுரி அங்கிருக்க
கைலாசம் அங்கிருக்க கண்ணனுட நெஞ்சகத்தில்
வைகுந்தம் அங்கிருக்க மாயனுட நெஞ்சகத்தில்

---

562. உறியதிலே - தங்கள் வீட்டிலும் கண்ணன் வெண்ணெய் திருடுகிறான் என்பதை யசோதை அறிந்து கொள்ள வேண்டும் என்பதற்காக, உறியில் வைத்திருக்கும் வெண்ணையை வேண்டுமென்றே கண்ணன் திருடி உண்கிறான்.
தாமோதரன் - திருமாலின் மற்றொரு பெயர்.

564. உருட்டின சத்தம் - இருளில் உறிகளிலுள்ள அடுக்குப்பானைகளை நகர்த்தியதால் ஏற்பட்ட ஓசை.

565. திருக்கூத்து - திருட்டு.

567. கன்னஞ்செவிடு செவிடெனவே - கன்னத்தில் அறைந்த அறையில் காதுசெவிடாகிவிட
செவிடு - கன்னம்.

568. அரிராமன் - திருமாலின் அவதாரமான இராமன், கிருஷ்ணன்.

569. அடிபொறுக்க மாட்டாமல் - சிறுகுழந்தையானதால் அடியினைத் தாங்கிக் கொள்ள முடியாமல்.

570. நெஞ்சத்திலே - வாய்க்கு உள்ளாக.

571. ஏழுகடல் அங்கிருக்க - புராணத்தில், கண்ணன், தன் வாயில் மண்ணைப் போட்டுக்கொண்டபோது, தாய் யசோதை அவனுடைய வாயைத் திறக்கச் சொல்லிப் பார்க்கிறாள். அவனுடைய வாயில் உலகம் முழுவதும் தெரிவதைப் பார்த்து வியப்படைகின்றாள் என்று சொல்லப்பட்டுள்ளது.
ஏழுகடல் - உப்பு, நீர், பால், தயிர், நெய், கருப்பஞ்சாறு, தேன், இவற்றை உடைய ஏழுவகைக் கடல்கள்.
இலங்காபுரி - இலங்கை.

572. கைலாசம் - சிவன் வசிக்கும் இமயம்.

573. வைகுந்தம் - வைகுண்டம்; திருமாலின் உறைவிடம்.

முப்பத்திமுக்கோடி தேவர்களும் முனிவர்களும் அங்கிருக்க
பூலோகம் அங்கேஇருக்க பூமியது அங்கிருக்க
சந்திரரும் சூரியரும் தாமோதரன் நெஞ்சத்திலே
பார்த்ததுமே அசோதைஅம்மன் பாலனுட நெஞ்சகத்தை
அதிசயந்தான் பார்த்துஅவன் அழுவதையும் தானமர்த்தி
அழுவதையும் தானமர்த்தி அசோதைஅம்மன் தானிருந்தார்

## அரக்கர்கள் வருகை

அப்படியாய் அவரிருக்க அழகுமதுராபுரி யானதிலே
வாய்த்த கஞ்சராசன் வன்மந்திரியை வரவழைத்து
ஆயர்பாடி தானதிலே அரக்கியரை அனுப்பிவைத்தோம்
பேச்சிதனை அனுப்பிவைத்தோம் பிள்ளைதனை[க்] கொன்றுவர
கொல்லாமல் சென்றுவிட்டாள் கோதைஅந்த அரக்கியவள்
ஆலோசனை செய்யுகிறான் அரசமன்னன் கஞ்சராசன்
அப்படியே தானும்எண்ணி அரசமன்னன் நிற்கையிலே
மந்திரியும் தான்பார்த்து மதுரைமன்னனுக்கு ஏதுசொல்வான்
பழையபடி ராசமன்னா பறைக்காரன் தனைஅழைத்து
பறைக்காரன் தனைஅழைத்து பறைசாத்தும் என்றுரைத்தான்
அப்படியே சம்மதித்து அழைத்தானே பறைக்காரனை
பட்டணங்கள் எத்திசையும் பறைசாத்தும் என்றுரைத்தார்
பாதிநாடு தாறேன்என்று பறையறையும் என்றுரைத்தான்
அரசமன்னன் சொல்தட்டாமல் அப்படியே பறையறைந்தான்
பட்டணங்கள் எத்திசையும் பறையறையும் சத்தமதை

---

575. பூலோகம் - பாதாள லோகங்கள்.

579. அமர்த்தி - ஆறுதல் கூறி; நிறுத்தச் செய்து; பசியடக்கி.

581. வன்மந்திரி - வலிமைமிகுந்த மந்திரி, வன்மையான பண்பு நலன்கள் கொண்ட மந்திரி.

583. பேச்சி - பூதனை என்ற அரக்கி; பேய்ச்சி.

586. நிற்கையில் - எண்ணிக் கொண்டிருக்கும் அவ்வேளையில்.

589. சாத்தும் < சாற்றும்.

593. சொல்தட்டாமல் - ஆணைப்படி.

மான்மர ராச்சதனும் மதுரைமர ராச்சதனும்
பறைக்காரன் இடமதிலே பாவினையா ஓடிவாறார்
மதுராபுரி நகரானதிலே வந்துசேர்ந்தாரே மூபேரும்
கஞ்சராசன் இடமதிலே கடுகராச்சதர் ஓடிவந்து
அரசமன்னா உந்தன் சொல்படியே ஆயர்பாடி தனிலேசென்று
அனந்தகிஸ்ட்ன பாலகனை அரைச்சணத்தில் கொல்லுகிறோம்
நாட்டில்பாதி தாறேன்என்று நமக்குவிடை தந்ததுண்டால்
யீஸ்பரன் மேலாணையிட்டு எங்களுக்குத் தந்ததுண்டால்
அப்படியே சம்மதித்து அரசமன்னன் ஆணையிட்டான்
ஆணையிட்டு அரசமன்னன் அன்புடனே விடைகொடுத்தான்
விடைவாங்கி ராச்சதரும் விரைவுடன் புறப்பட்டார்
உல்லாச கெர்விதமாய் ஓடிவாறார் இருபேருமாம்
ஆயர்பாடிக் கொருபுறமாய் அந்தராச்சதரும் ஓடிவந்தார்
அப்படியே அவரிருக்க அனந்தகிஸ்ட்னன் ஏதுசெய்தார்
பால்தயிர் வெண்ணைகளைப் பாலகனும் தின்பதற்கு
உண்டுறங்கி சாமத்திலே உலகளந்தோன் ஓடிவாறார்
முத்தெடச்சி வீடதிலே முகில்வண்ணன் வந்துசேர்ந்து
வந்துமே உள்நுழைந்து மாயவனும் ஏதுசெய்தார்
உறியிலே ஏறிக்கொண்டு உருட்டியவர் வெண்ணையுண்டார்
மடமடென்று உருட்டுவதை மடக்கொடியாள் காதில்கேட்டு

---

595. மான்மரராச்சதன்.. இக்கதைப்பாடலின் படி, மாமர ராச்சதன், மருதமர ராச்சதன் என்ற பெயர்களை உடைய அரக்கர்கள் இருவர் கண்ணனைக் கொல்ல மரங்களாக மாறுகிறார்கள் என்று சொல்லப்படுகின்றது.

597. மூபேரும் - அரக்கர் இருவரும் பறைக்காரனும்.

600. அரைச்சணம் - அரைக்கணம்; அரை வினாடி நேரம்.

603. மேலாணையிட்டு - சிவனின் முன்னிறுத்தி உறுதிதந்தால்.

605. விடைவாங்கி - அனுமதி பெற்று.
விரைவுடன் < விரைவுடன் - வேகமுடன்.

606. உல்லாசம் - மகிழ்ச்சி.
கெர்விதமாய் < கர்வமாய் - கண்ணனைத் தாங்களே அழிக்க முடியும் என்று பெருமிதமாய்.

610. உண்டுறங்கி - உணவு உண்டபின் தூங்கிவிட்டு, எல்லோரும் தூங்கியபின் எழுந்து.

தீக்கல்லை வெட்டியவள் தீபமதை ஏற்றிவைத்தாள்
பார்த்தாளே பாலகனை[ப்] பைங்கொடியாள் ஏதுசெய்தாள்
கண்டாளே முத்தெடச்சி கைப்பிடியாய்[ப்] பிடித்துக் கொண்டாள்
அண்டைஅசல் பெண்டுகளா அக்காமாரே தங்கைமாரே
கன்னமிட்ட கள்ளனைத்தான் கன்னியரே பிடித்துக் கொண்டேன்
அந்தசத்தமது காதில்கேட்டு ஆயிளைமார் ஓடிவாறார்
கன்றுகட்டும் கயிறெடுத்து[க்] கல்லுரலில் கட்டிவைத்தார்
எல்லோரும் தான்திரண்டு ஏற்றதொரு கோபாலனை
முத்தெடச்சி சொல்படியே மூன்றுகொட்டு கொட்டுவாராம்
கொட்டின கொட்டையெல்லாம் கோபாலன் கணக்கெடுத்து
கன்னியரே கொட்டினகொட்டு கணக்குஉண்டு எந்தனுக்கு
இப்படியே சொல்லிக்கொண்டு இவனிருக்கும் வேளையிலே
உரலிலே கட்டுப்பட்டு உலகளந்தோன் இருக்கையிலே
மான்மர ராச்சதனும் மதுரைமர ராச் சதனும்
அம்பலக்கோன் வாசலிலே அனந்தகிஸ்டனைக் கொல்வதற்கு
மாமரமும் மதுரைமரமுமாக வாசலிலே முளைத்துக்கொண்டார்

---

615. தீக்கல்லை வெட்டுதல் - பழங்காலத்தில் தீயை உண்டாக்குவதற்கு ஒரு குறிப்பிட்ட கல்லைப் பயன்படுத்தினர். அதற்கு சக்கிமுக்கிக்கல் என்று பெயர். இக்கற்களை ஓசையுடன் தட்டினால், அதிலிருந்து தீப்பொறிகள் கிளம்பி தீயினை உண்டாக்கும். இதனைத் தீக்கடைதல் என்று கூறுவர்.
தீபம் - விளக்கு.

618. அண்டை அசல் - அருகாமையில் உள்ள; அடுத்தவீட்டில் உள்ள.
பெண்டுகளா - பெண்களே.

619. கன்னமிடுதல் - கன்னக்கோலிடுதல்; திருடர்கள் சுவரினுள் ஓட்டையிட்டு, வீட்டினுள் புகுந்து திருடுவர். இதற்குக் கன்னமிடுதல் என்று பெயர்.

621. கன்றுகட்டும்கயிறு - பசுக்கன்றுகளை ஓடவிடாமல் தடுத்துக்கட்டும் கயிறு.
கல்லுரல் - நெல்லை மாவாக்குவதற்காகக் கல்லால் செய்யப்படும் உரல்.
கட்டிவைத்தார் - புராணத்தில் கண்ணனின் குறும்பு தாளாமல், அவன் தாய் அசோதை அவனை ஒரு உரலில் கட்டிவைத்ததாகக் கூறப்பட்டுள்ளது. இக்கதைப்பாடலில் இடையர்குலப் பெண்கள் கட்டிவைத்ததாக வருகிறது.

622. கோபாலன் - கன்றுகாலி மேய்த்த கண்ணன்.

623. கொட்டுதல் - தண்டனை தரும்முறையில் தலையில் குட்டுதல்.

624. கணக்கெடுத்து - எத்தனை குட்டுகள் என்று எண்ணுதல்.

627. கட்டுப்பட்டு - கயிறால் பிணைக்கப்பட்டு.

630. முளைத்துக்கொண்டார் - மரங்களாக உருவெடுத்தார்.

## ராச்சதர்களின் இறப்பு

இருபக்கமும் மரமதைப்போல் இருக்கிறதோர் வேளையிலே
இப்படியே அவரிருக்க ஏற்றதொரு அனந்தகிஸ்ட்ணன்
உரலதிலே இருந்துகொண்டு உலகளந்தோன் ஏதுசெய்தார்
நித்ராதேவியை வரவழைத்து நிலைக்கட்டோடு இருந்தவனை

முத்தத்திலேபோய் நிற்கச்செய்தார் முத்தெடச்சி தூங்கிவிட்டாள்
வாசநடை காத்திருந்த மங்கையரும் தூங்கிவிட்டார்
கட்டின கட்டோடு கல்லுரலை இழுத்துக்கொண்டு
நகண்டு நகண்டேஅவரும் நடையைவிட்டு வெளியில்வந்தார்
அவனுட மாளிகையில் அருகாக வந்துநின்று

பார்த்தானே அனந்தகிஸ்ட்ணன் பாலனந்த அதிசயத்தை
கண்டானே மரமதையும் கஞ்சனுட திருக்கூத்தை
இழுத்துவந்த உரலதையும் இவனுதறி விட்டானே
மைந்தனிவன் உதறிவிடவே மரத்திலடி பட்டிடுமாம்
ஒருமரத்தில் உரல்விழவே மறுமரத்தி லடிவிழவே

அடித்தநல்ல அடியாலே அவர்கள்இருபேரும் தான்மாண்டார்

---

631. இருபக்கமும் - நடுவில் இடைவெளிவிட்டு, வாசலில் இருபக்கங்களிலும் இருத்தல்.

634. நித்ராதேவி - தூக்கத்தை அளிக்கின்ற பெண்கடவுள். .
நித்திரை - தூக்கம், உறக்கம்.
நிலைக்கட்டு < நிலைக்கட்டை - தலைவாசலில் உள்ள நிலைப்படியில் காவல் காத்துக் கொண்டிருந்த வீரன்.

635. முத்தம் < முற்றம் - வீட்டின் முன்பகுதி.

636. வாசநடை காத்திருந்த - வாசற்பகுதியில் உள்ள சிறுதிண்ணையில் கண்ணன் வெளியேறிவிடாதபடி, காவலுக்கிருந்த.

638. நகண்டு < நகர்ந்து - மெதுவாக அசைந்து.
நடை - தாழ்வாரம்.

639. அருகாக - அண்மையில்; தன்வீட்டுக்குப் பக்கத்தில்.

642. உதறி - தன்னிடமிருந்து தள்ளிவிடுதல்.

643. மைந்தனிவன் - இளைய சிறுவன்; கண்ணன்.

மரம்போல் நின்றவர்கள் மடிந்தாரே இருபேரும்
அந்த அதிசயம் தான்பார்த்து அவனுடைய மனையில்வந்தார்
பழையபடி தாயிடத்தில் படுத்துக்கொண்டான் அனந்தகிஸ்ட்னன்
அப்படியே அவரிருக்க ஆதித்தனும் உதயமானான்
ஆதித்தனும் உதயமாக அம்பலக்கோன் வெளியேவந்தார்
மலைபோல ராச்சதர்கள் மாண்டிருப்பதைக் கண்ணிலேகண்டு
அதிசயத்தை[த்] தான்பார்த்து அம்பலக்கோன் ஏதுசெய்தார்
ஆயிரம் இடையருக்கும் அம்பலக்கோன் ஆள்விட்டார்
அம்பலக்கோன் சொல்படியே ஆயிரம்பேரும் வந்தார்
பார்த்தாரே அதிசயத்தை[ப்] பட்டுக்கிடக்கும் ராச்சதரை
இதுவென்ன மாயமென்று எல்லோரும் ஒருமுகமாய்
ஆயிரம் இடையரும் அரக்கரைவெட்டி[த்] தான்சுமந்தார்
ஒன்றரை நாளாக இடைவிடாமல் சுமக்கலுற்றார்
ஆயர்பாடி ஆனதிலே அசோதைமகன் பிறந்தநாள்முதலாய்
பிணமே சுமைஒழிய பின்னும் ஒரு சுமையுமில்லை
அப்படியே தான்சுமந்து அலைகடலில் தான்மூழ்கி

---

646. மரம் போல் நின்றவர்கள் - புராணத்தில் இந்நிகழ்ச்சி வேறொரு விதமாகச் சொல்லப்படுகிறது. நளகூபரன், மணிக்கிரீவன் என்ற இருவரும், குபேரனின் புதல்வர்கள். இவ்விருவரும் மதுவுண்ட மயக்கத்தில் நீராடிக்கொண்டிருந்தனர். அப்பொழுது அங்கு நாரதர் வந்தார். அவ்விருவரும் அவரை வணங்காது, மமதையுடன் மரம் போல் நின்றுகொண்டிருந்ததால், அவர் அவ்விருவரையும் மரங்களாகும்படிச் சாபமிட்டார். அதன்படி அவர்கள், நந்தகோபன் வீட்டில் கண்ணனின் வருகையால்தான் சாபம்தீரும் என்பதை அறிந்து மரஉருவில் காத்திருந்தனர். யசோதை கட்டிய உரலுடன் கண்ணன் மரங்களுக்கு நடுவில் தவழ்ந்து சென்றான். அப்போது, உரல் இரண்டு மரங்களுக்குள் சிக்கி, அவற்றைத் தகர்த்து விட்டது. சாய்ந்த மரங்களிலிருந்து, சகோதரர்கள் மீண்டும் உருவம் பெற்றுச் சாபம் நீங்கினர்.
இக்கதைப்பாடலில் இந்நிகழ்ச்சி வேறுவிதமாகச் சொல்லப்பட்டுள்ளது. குபேரனின் புதல்வர்கள், இதில் இராட்சதர்களாகக் காட்டப்பட்டுள்ளனர்.
மடிந்தாரே - இறந்தனர்.

647. அந்தஅதிசயம் - மரமாய் இருந்தவர்கள், அரக்கர்களாக மாறி இறந்து கிடக்கும் நிகழ்ச்சி.

656. ஒருமுகமாய் - ஒன்றுசேர்ந்து.

657. அரக்கரை வெட்டி - முன்னர் பூதனையை வெட்டியது போல் இந்த அரக்கர்களையும் வெட்டித் துண்டாக்கினர்.

660. பிணமே சுமைஒழிய பின்னு ஒரு சுமையுமில்லை - கண்ணன் ஆயர்பாடிக்கு வந்தபின் பேச்சி என்ற அரக்கி அவனால் கொல்லப்பட்டாள். அடுத்ததாக, மரங்களாக நின்ற இரு அரக்கர்களும் கொல்லப்பட்டார்கள். இதனால் அவர்களின் பிணங்களைச் சுமந்து சென்று கடலில் விடுவது என்பதே பெரிய வேலையாக இருக்கிறது என்று இடையர்கள் சலித்துக் கொண்டார்கள்.

அப்படியே அவரிருக்க அம்பலக்கோன் ஏதுசெய்தார்

## தெய்வேந்திர பூசை

ஆயிரம் இடையருக்கும் அம்பலக்கோன் அறிக்கை செய்தார்
வருசத்திற்கு ஒருநாளையிலே வாய்த்த தெய்வேந்திரர்க்கு
குடத்து[ப்] பலகாரம் கொண்டுபோக வேணும்என்று
ஆயிரம் இடையருக்கும் அம்பலக்கோன் அறிக்கைசெய்தார்
அம்பலக்கோன் சொற்படியே ஆயர்பாடி இடையர்களும்
பலகாரங்களை[ப்] பால்குடத்திலே தானடைத்தார்
கட்டிச்சாதங்கள் கட்டினார் திட்டமாய்க் கன்னியர்கள்
யாபேருங்கூடியே
அவரவர் பிள்ளைகளை அவரவர் இடுப்பில் வைத்தார்
உல்லாச கெர்விதமாய் உற்றமங்கையர் வழிநடந்தார்

### வேறு

ஆயர்பாடி யானதைவிட்டவர்
ஆயிளைமார் ஆனந்தம்பாடினார்
இந்திரன்மேலொரு சந்ததம் பாடியே
ஏகிநடந்தனர் இடையர்களும்

---

663. அறிக்கை செய்தல் - அறிவித்தல்; தெரியப்படுத்துதல்.

664. தெய்வேந்திரர் < தேவேந்திரன் - தேவர்களின் தலைவனான இந்திரன்.

665. குடத்துப் பலகாரம் - பலவிதமான பலகாரங்கள் செய்து அவற்றைக் குடத்தில் வைத்துக்கொண்டு போவது. இது இந்திரனுக்குச் செய்கின்ற வழிபாடு. இந்திரனை வழிபட்டால் நன்மை உண்டாகும் என்பதினால் ஆயர்குலத்து மக்கள் இந்திரனை மகிழ்வுறுத்தும் வண்ணம், வேண்டிய பொருள்கள் சேகரித்துக் கொண்டாடுவர். சிலப்பதிகாரத்தில் 'இந்தரவிழவூரெடுத்த காதை' என்று ஒரு பகுதியே உண்டு.

669. கட்டிச்சாதங்கள் - கட்டுச்சோறு பலவகையான சாதங்களை வழிப்பயணத்தில் உண்பதற்காகக் கட்டிக்கொண்டு, செல்லுதல்.
யாபேரும் - எல்லோரும்.

671. உற்றமங்கையர் - அவரவர்க்குற்ற பெண்கள்.
வழிநடந்தார் - பயணம் மேற்கொண்டார்.

672. ஆனந்தம் பாடினார் - மகிழ்ச்சியுடன் பாடல்களை இசைத்தல்.

673. சந்ததம் - ஓசையுடன் கூடிய இனிமையான பாடல்கள்
ஏகி - விரைந்து.

காடுவனங்களும் சோலைவிட்டு
கல்லாறு புனலாறுவிட்டு
இஞ்சிஎன்ற தோப்புவிட்டு
இலுமிச்சம் வனம்கடந்தார்
அன்றுநட்டு அன்றறுக்கும்
அழகுசம்பா வயல்கடந்தார்
கொக்கிருந்து இறகுதட்டும்
குடமாடி மலைகடந்தார்
ஈய்இருந்தால் அத்துவிழும்
இந்திராணி மலைகடந்தார்
ஆற்றங்கரை ஓரத்திலே
ஆயிளைமார் வந்தமர்ந்தார்
இந்தஇடத்திலே தகையாறி
எல்லோரும் போவோம்என்று
தாகவிடைதீர்த்துப்போவோம்
என்று தானம ர்ந்தார் எல்லோரும்
ஆயிரம் இடையர்களும்
அமுதுண்டு இளைப்பாறி

---

674. சோலை - மரம், செடிகள் நிறைந்த பசிய சோலைகள்.
கல்லாறு புனலாறு - இருவகை ஆறுகள்.

675. இஞ்சித்தேப்பு - ஒருவகைத் தேர்ப்பு.
இலுமிச்சம் < எலுமிச்சை.

676. அன்று நட்டு அன்றறுக்கும் - எந்த நாளில் நாற்று நட்டார்களோ, அதைப் போன்ற மற்றொரு நாளில் அறுவடை செய்வது வழக்கம். அதனால் இவ்வாறு கூறப்படுகிறது.
சம்பா - ஒருவகை நெல்.

677. கொக்கிருந்து இறகுதட்டும் - கொக்கு நீரில் நனைந்து விட்டு தன் இறகை உலர்த்துவதற்காக மலைப்பகுதிக்குச் செல்லும்.
குடமாடி மலை - குடக்கூத்து ஆடிய மாயோன் மலை என்று கூறுவது வழக்கம்.

678. ஈய் இருந்தால் அத்துவிழும் - அந்தரத்தில் மலை நிற்பது போன்ற தோற்றமுள்ளதால் இவ்வாறு கூறப்பட்டுள்ளது.
இந்திராணி - இந்திரனின் மனைவி.

680. தகையாறி - இளைப்பாறி.

681. தாகவிடை - தண்ணீர்த்தாகம்.

682. அமுதுண்டு - கட்டுச்சாதங்களை உண்டு.
இளைப்பாறி - ஓய்வெடுத்துக்கொண்டு.

ஆற்றங்கரை தன்னைவிட்டு
ஆயிளைமார் வழிநடந்தார்
அப்படியே வருகையிலே
அனந்தகிஸ்ட்னன்ஏதுசெய்தார்
கட்டினகட்டு இருக்க
கன்னமிட்டானே அனந்தகிஸ்ட்னன்

**வேறு**

## இந்திரனின் கோபம்

பலகாரம் அத்தனையும் பால்வண்ணன் திருடிஉண்டார்
கட்டின கட்டவிராமல் கன்னமுமிட்டார் கரியமாலும்
அணுஅளவும் இல்லாமல் அனந்தகிஸ்ட்னன் திருடிஉண்டார்
கட்டினகட்டு தனைஅவிழ்த்து[க்] காவலவன் பார்க்கலுற்றான்
பால்குடங்கள் இருப்பதல்லால் பலகாரம் ஒன்றுமில்லை
எள்ளளவும் இல்லாமல் ஏங்கிஅவன் பரதவித்து
ஏய்த்துவிட்டான் என்றுசொல்லி இந்திரனும் ஏதுசெய்தான்
ஆலோசனை செய்யுகிறான் அழகுமன்னன் இந்திரனும்

---

685. கட்டினகட்டு இருக்க - குடத்தைக் கட்டி வைத்த கட்டு அவிழாமல், குடத்துக்குள்ளிருந்த பலகாரங்கள் அனைத்தையும் கண்ணன் உண்டுவிட்டான். களவு போனது தெரியாதவகையில் இவ்வாறு செய்தான்.

686. பால்வண்ணன் - பாற்கடலில் பள்ளிகொள்ளும் திருமால்.

689. காவலவன் - இந்திரன்.

690. பால்குடங்கள் - ஆயர்பாடிமக்கள் பால்வைத்திருந்த குடங்களில்தான் பலகாரங்களைக் கொண்டுவந்திருந்தனர். அதனால் இவ்வாறு சொல்லப்பட்டுள்ளது.

692. ஏய்த்துவிட்டான் - ஏமாற்றிவிட்டான். புராணத்தில் வேறுமாதிரியாக உள்ளது. நந்தகோபன், இந்திரபூசைக்கான ஆயத்தங்கள் செய்தபோது, கண்ணன் அங்குச் சென்று, 'யாகம் செய்து தேவேந்திர பதவி பெற்றவன் இந்திரன். அவன் நமக்கு வ்வித வளத்தையும் தரவில்லை. கோவர்த்தனமலைதான் நம் ஆடுமாடுகளைக் ாத்துப் பயன்தருகிறது. ஆகையால் நாம் இம்மலைக்குத்தான் பூசனை செய்ய வண்டும்' என்றான். அதன்படியே பூசை நடக்கிறது. அதனால் கோபம் காள்ளுகிறான் இந்திரன்.

## கண்ணன் ஆயர்களைக் காத்தல்

ஆயர்பாடிப் பட்டணத்தை அழித்துவிட வேணுமென்று
வருணபகவானை வரவழைத்து வசனமொன்று சொல்லுகிறான்
ஆயர்பாடிப் பட்டணத்தை அழித்துவிட வேண்டுமென்றான்
மழைமாரி தான்பொழிந்து மன்னவனே அழியுமென்றான்
இந்திரன் சொல்தட்டாமல் ஏற்றவர்ணனும் ஓடிவாறான்
ஆயர்பாடிப் பட்டணத்தில் வருணபகவானும் வந்துசேர்ந்தான்
வருணபகவான் வந்துநின்று மழைமாரிதான் பொழிந்தான்
பார்த்தானே அனந்தகிஸ்ட்னன் பாலகனும் அந்நேரம்
இந்திரனுடைய மாயமென்று எம்பெருமாளும் அறிந்துகொண்டார்
குன்றுதனைப்[ப்] பிடிங்கிமாயன் குடையாக[ப்] பிடித்துக்கொண்டார்
இருளாகி இருக்கக்கண்டு ஏழைப்பங்கோனும் ஏதுசெய்தார்
சந்திரர்க்கும் சூரியர்க்கும் சங்குசக்கரம் தனைப்போட்டார்
இரவும் பகலுமாக ஏழைப்பங்கோனும் செய்துவைத்தார்
அப்படியே அவரிருக்க அழகுமன்னன் வருணனுந்தான்
ஏழரை நாளாக இடைவிடாமல் மழைபொழிந்தான்
பாலமறை தெரியுதென்று பாவியவன் ஏதுசெய்தான்

---

694. அழித்துவிட - இந்திரபூசை செய்யாமல் தன்னை ஏமாற்றிய ஆயர்களை அழிக்கவேண்டும் என.

695. வருணன் - மழைக்கடவுள்.
வசனம் - உரை, பேச்சு.

697. மழைமாரி - ஒரேபொருளைத்தரும் இருசொற்கள்.

702. மாயம் - இந்திரனுடைய செய்கை.

703. குன்று - கோவர்த்தனகிரி.
குடையாகப்பிடித்துக் கொண்டார் - ஆயர்குல மக்கள் மீது வருணன் மழையைப் பொழிந்ததால், மக்களும், மாக்களும் துன்புற்றனர். இதனால் கண்ணன் தன் தெய்வத்தன்மைக்கேற்ப, கோவர்த்தன மலையைப் பிடுங்கி தன் கைவிரலால் உயர்த்திப் பிடித்து அவர்களின் மேல் மழை பொழியாது காப்பாற்றினான்.

704. இருளாக இருக்கக் கண்டு - கருமேகங்கள் நிறைந்து இருப்பதாலும், சூரியன் மறைந்துவிட்டதாலும், அவ்விடம் இருண்டுவிட்டது.

705. சங்கு சக்கரம் - இவை திருமாலிடம் உள்ளவை. சங்கினைச் சந்திரனாகவும், சக்கரத்தினைச் சூரியனாகவும் மாற்றி, இரவிலும் பகலிலும் ஒளிகொடுக்க வைத்தார்.

ஆயர்பாடி[ப்] பட்டணத்தை அழித்துவிட்டோம் என்றுஎண்ணி
இந்திரனுட இடமதிலே ஏற்றவருணனுந்தான் ஓடிவாறான்
அந்தரத்து இந்திரனிடம் அழகுமன்னன் ஏதுசொல்வான்
ஆயர்பாடி[ப்] பட்டணத்தை அழித்துவந்தேன் என்றுரைத்தான்
பாலமறை தெரியும்படிப் பட்டணத்தை அழித்துவந்தேன்
கல்மழையாய்த் தான்பெய்து கடலதிலே தள்ளிவிட்டேன்
ஆயர்பாடிப் பட்டணத்தை அனிதமாக்கி வந்துவிட்டேன்
அப்படியாகவே அவனுரைக்க அழகுமன்னன் சந்தோசமாய்
அப்படியாய் அவரிருக்க அனந்தகிஸ்டனன் ஏதுசெய்தான்
வருணன் ஓடிவிட்டானென்று மலையைத்தூக்கி வீசிவிட்டான்
குடைபிடித்த மலையதுதான் குப்புறப் போய் விழுந்திடுமாம்

## மந்திரியின் யோசனை

அப்படியே அவனிருக்க அழகுகஞ்சராச மன்னன்
மந்திரியை வரவழைத்து மதுரைமன்னன் ஏதுசொல்வான்
மைந்தனைக் கொன்றுவாறேன்என்ற மன்னர்இருபேரும் ஓடிவிட்டார்
என்றுசொல்லி கஞ்சராசன் ஏங்கிஅவன் பரதவித்து
ஆலோசனை செய்யுகிறான் அரசமன்னன் கஞ்சராசன்
பார்த்தானே மந்திரியும் பாவியவன் ஏது சொல்வான்
ஐயாவுக்குத் திவசமென்று அறிக்கைசெய்யும் என்றுரைத்தான்
பால்குடம் கொண்டுவர பதியுமென்றான் திருநீட்டை

---

712. அந்தரச் து இந்திரன் - தேவருலகத்தில் உள்ள இந்திரன்.

715. கல்மழை - சிறுகல்போன்று பெரிய துளிகளையுடைய பனிக்கட்டி மழை. கடலதிலே தள்ளிவிட்டேன் - ஆயர்பாடி நீருக்குள் மூழ்கி, கடலினுள் இழுத்துச் செல்லப்படும் அளவிற்கு மழைபெய்தது.

716. அனிதம் < அந்தம் - முடிவுக்குக்கொண்டு வருதல்.

720. குப்புறப்போய் விழுதல் - தலைகீழாகப் போய்விழுதல். இச்செய்தி புராணத்தினின்றும் மாறுபட்டது. இங்குக் கண்ணனின் வலிமையைப் பகர்வதற்காகச் சொல்லப்பட்டுள்ளது.

723. மைந்தன் - குழந்தையான கண்ணன்.

727. ஐயாவுக்குத் திவசம் - ஒருவர் இறந்த அதே திதியில் ஒவ்வொரு வருடமும் செய்யப்படும் சடங்கு. திருநீட்டு கம்சனின் தந்தைக்குத் திவசம் எனச் சொல்லப்படுகிறது.

728. பதியும் - எழுதி, அறிவிப்புச் செய்யும்; செய்தியினைத் தாங்கிய ஓலை

மந்திரியின் சொல்படியே மன்னவனும் ஏதுசொல்வான்
என்னவென்று எழுதுகிறான் ஏற்றநல்ல கஞ்சராசன்
பங்குனி மாஸ்த்தையிலே பதிமூன்றாம் தெய்தியிலே
வெள்ளிக் கிழமையிலே விடிந்தஐந்து நாழிகையில்
எந்தைக்கு[த்] திவசமென்று இருப்பதினால் எல்லோரும்
ஆயர்பாடி[ப்] பட்டணத்தில் அம்பலக்கோன் அவர் தனக்கு
ஆயிரங்குடம் பாலதுதான் அவசரமாய் வேணும்என்றான்
பால்குடத்தையும் தானெடுத்து[ப்] பாலகரையும் தானெடுத்து
அவரவர் பிள்ளைகளை ஆயிளைமார் தானெடுத்து
வரவேண்டும் என்றுசொல்லி மன்னன்ஓலை எழுதுகிறான்
ஓலைஎழுதி மன்னவன் ஒட்டனையும் வரவழைத்து
ஒட்டனையும் வரவழைத்து ஓலைச்சுருளதைக் கையில்கொடுத்தான்
ஓலைச்சுருளைத் தான்வாங்கி ஒட்டனுமே ஓடிவாறான்
நாடும்பல காடுவிட்டு நல்லமதுராபுரியும் விட்டு
ஆறுசுனைகளை[த்] தான்கடந்து ஆயர்பாடி தனிலேவந்தான்

## கண்ணன் மதுராபுரிக்குப் புறப்படுதல்

ஆயர்பாடி ஆனதில் அம்பலக்கோன் வீடதிலே
ஓலைச்சுருளதை[க்] கையில்கொடுத்து ஒட்டன் தூதுவனும்
ஆயர்பாடி நகரைவிட்டு அவன் மனையில் தான்போனான்
வாசகத்தைத் தான்பிரித்து அம்பலக்கோன் பார்க்கலுற்றார்

---

731. மாஸ்த்தையிலே - மாதத்திலே.
தெய்தி < தேதி - நாள்.

733. எந்தைக்கு - எம் தந்தைக்கு.

739. ஒட்டன் - வெவ்வேறு ஊர்களுக்கு ஓலைகொண்டு செல்பவன்.

740. ஓலைச்சுருள் - செய்தியைத் தாங்கிய ஓலை.

741. ஒட்டனுமே ஓடிவாறான் - இச்செய்தி புராணத்தில் வேறு மாதிரியாக உள்ளது. நாரதமுனிமூலம் கண்ணனின் இருப்பிடத்தை அறிந்த கம்சன், அக்குரூரன் என்னும் கண்ணன் நேசனை அழைத்து, கண்ணனையும், பலராமனையும் தான்நடத்தும் தனுர்வேள்வியில் கலந்து கொள்ள அழைத்துவரும்படி வஞ்சகமாகச் சொல்கிறான். அதன்படி அமைச்சன் அக்குரூரன் அழைத்து வருகிறான்.

747. வாசகம் - ஓலையில் எழுதப்பெற்றுள்ள செய்தி.
திட்டம் செய்தல் - உறுதிசெய்தல்.

ஆயிரம் இடையருக்கும் அம்பலக்கோன் திட்டம்செய்தார்
வாசகத்தில் இருந்தபடி மன்னவனும் திட்டம் செய்தார்
அம்பலக்கோன் சொல்படியே ஆயிரம்பேரும் சம்மதித்தார்
ஆயிரம்குடம் பாலதுதான் அம்பலக்கோன் திட்டம்செய்து
ஆயிளைமா ரெல்லோரும் அருமைப்பாலகனை[த்] தானெடுத்து
அசோதைஅம்மனும் சந்தோசமாய் அனந்தகிஸ்ட்னனைத்
தானெடுத்து
ஆயிரம்பேரும் ஒருமுகமாய் ஆயர்பாடி தனையும் விட்டு
வனங்களென்ற வனங்களெல்லாம் மங்கையரும் தான்கடந்து
மதுராபுரி நகரத்திலே வந்துசேர்ந்தார் மங்கையரும்
கதவருகே வந்துநின்று காலேற மாட்டாமல்
கன்னியர்கள் நிற்பதைத்தான் கரியமால் கண்ணில்கண்டார்
கரியமால் கண்ணிலேகண்டு கதவுதனில் கையைவைத்தார்
கதவுதனில் கையைவைக்க கஞ்சன்கோட்டை திறந்திடுமாம்
மாயனுட செயலாலே வந்துசேர்ந்தார் மங்கையரும்
கன்னியர்கள் வந்துநிற்க கண்டானே கஞ்சராசன்
மந்திரிதனை வரவழைத்து மதுரைமன்னன் ஏதுசொல்வான்
பால்குடங்களை இறக்கிவைத்து மங்கையரை அனுப்பும் என்றார்
அம்பலக்கோன் தேவியையும் அவனுடைய பாலகனையும்
இருபேரையும் நிற்கச்சொல்லும் என்று சொன்னானே ராசமன்னன்
கஞ்சனுட சொல்படியே கன்னியரை அனுப்பிவைத்தான்

---

753. அசோதை அம்மனும் .. அக்குரூரன், கம்சன் நடத்தும் தனுர் வேள்விக்கு அழைக்க வந்ததாகச் சொல்லவும், அவனுடன் கண்ணனும், பலராமனும் புறப்படுகிறார்கள் என்று புராணத்தில் உள்ளது.

757. கதவருகே - மதுராபுரிக்குள் செல்லும் வாசல் அருகே.
காலேறமாட்டாமல் - காலினை எடுத்துவைக்க முடியாமல், கோட்டைக்கதவுகள் அடைத்திருந்தன. அதனால் அதனைத் திறக்கும் வகைதெரியாது நின்றனர்.

759. கையைவைத்தார் - கதவினை மெதுவாகத் தள்ளினார்.

761. மாயனுட செயலாலே - கண்ணனின் தெய்வீகத் தன்மையினால் வன்மையான கதவு எளிதாகத் திறந்தது.

766. நிற்கச் சொல்லும் - ஊருக்குச் செல்லாமல் தங்கச் சொன்னான்.

அப்போதந்த ராசமன்னன் அறியாத குழந்தைமேலே
கண்ணனென்று அறியாமல் கஞ்சன்படையை ஏவிவிட்டான்

வசனம்

## போர் நடத்தல்

கண்ணனென்று அவன் அறியாமல் கண்ணைக் காட்டினான் பெரும்படையை. கண்ணைக்காட்டவே கஞ்சன் பெரும்படை வந்து வளைத்தாரே சந்தம்பாடியே. ஆடினார் சிலர்; பாடினார் சிலர்; ஆயுதங்களைக் கையில் எடுத்தார். அரசன் கீர்த்தியை ஆரபாரத்துடன், கஞ்சராசன் மேல் கொஞ்சராகமாய், கோடு கோடுடென்று ஆடுவார்; சாடுவார். எங்கள் ராசனைக் கொல்வதும் நீதானோ என்று சொல்லி எல்லோரும் கூடியே சுத்திவந்தார்கள் புத்தி இல்லாமலே. சூழவந்தார்கள் தாளங்கள் போட்டுமே. சோதியானந்த சூசக சடாதரி தெய்வஞான சிகாமணியானவர் கஞ்சனிவனுட வஞ்சனை என்றுமே, வெண்ணை உண்டோனும் கண்ணிலே கண்டவர் அன்னை அசோதை அம்மன் மடிமீதில் திண்ணமாக இருந்த திருமாலும், தொட்டகம்பை[த்] திருப்பியே பாலனும் மடிமீதிலிருந்து ஒரு ஓங்கார சத்தம் போட்டார்.

வேறு

770. தாயார்மடி மீதிருந்தஇந்த தாமோதரனும் சத்தம்போட
தாமோதரன் சத்தம்போட தார்வேந்தன் படைகளெல்லாம்

---

769. படை - வீரர்கள்.
கண்ணைக்காட்டுதல் - கண்ணினால் சைகை செய்தல்.
வளைத்தாரே - சுற்றி வளைத்தல்.
புத்தி இல்லாமல் - கண்ணனைத் திருமாலின் அவதாரம் என்று எண்ணாது, சிறுகுழந்தையாகக் கருதி, அவனைக் கொல்வது வெகு எளிதான செயல் என்று நினைத்தார்கள். கண்ணன் முன்னர் செய்திருந்த செயல்களை அவர்கள் எண்ணிப் பார்க்கும் அளவுக்கு புத்தி இல்லாதவர்கள் என்பதால் இவ்வாறு சொல்லப்பட்டது.
தாளங்கள் - கைதட்டி ஓசை எழுப்பி.
சோதியானந்த சூசக சடாதரி தெய்வஞான சிகாமணி - தெய்வங்களுக்கெல்லாம் மேலான திருமால்.
தொட்டகம்பைத் திருப்பியே - கஞ்சன் அனுப்பிய படைஆட்கள், கண்ணனைக் கொல்வதற்காகக் கொண்டுவந்த தடியை மாற்றியே.
ஓங்காரசத்தம் - அடித்தொண்டையிலிருந்து மிகுந்த பலத்துடன் பிறர் அச்சமடையும்வண்ணம் உரக்கக் கத்துதல்.

771. தார்வேந்தன் - மாலையணிந்த மன்னன்.

ஒருவர்முகம் ஒருவருக்கு உலகளந்தோன் செயலாலே
கண்ணனுட திருமுகம்போல் கண்டாரே கஞ்சன்படை
அரசனுட படைகளெல்லாம் அறிவுகெட்டு[த்] தான்மசங்கி
புத்திகெட்டு[த்] தான்மசங்கி பிடித்தாரே வில்லுதனை
வில்லுதனில் நாணேற்றி விரைவுடன் ஏதுசெய்தார்

## வேறு

ஒருவர் பேரில் ஒருவர் தொடுக்கவே
ஒருவரை[ப்] பார்த்து ஒருவர் நிற்கவே
ஒருவரை[ப்] பிடித்து ஒருவர் தின்னவே
ஒருவரை ஒருவர் எடுத்துமே
பந்ததுபோல் செண்டுக ளாடினார்
அஸ்த்திரங்களைத் தானெடுத்துத் தொடுப்பதும்
தண்டாயுதங் கொண்டு தடம்பத்தி அடிப்பதும்
சுத்தவீரர்கள் ரத்தத்தில் மூழ்கினார்
காளிகூளிகள் தாளங்கள் போடவே
கொள்ளிவாய்[ப்] பேய்கள் குதிகள் போடவே
நரிக்குட்டிகள் எனக்கென்று மறிக்குதாம்

---

773. கண்ணனுட திருமுகம்போல் - கண்ணன் செய்த மாயத்தால், அனைவரின் முகங்களும் கண்ணனின் முகம் போலத் தோன்றியதால், எதிரி என்று எண்ணித் தங்களைத் தாங்களே கொன்று கொண்டனர்.

777. தொடுக்க - ஆயுதங்களை எறிய.

779. தின்னவே - மிகுந்தவெறியில் ஒருவரைஒருவர் கிழித்துக் கொண்டனர்.

781. செண்டுகளாடினார் - பூப்பந்துபோல் ஒருவரை ஒருவர் எறிந்து விளையாடினர்.

783. தண்டாயுதம் - கதை; நீண்ட தண்டுடன் கூடிய ஆயுதம்.
தடம்பத்தி அடிப்பதும் - பகைவர் சென்ற வழியினைத் தொடர்ந்து சென்று தாக்குவதும்; பத்தி - பின்பற்றி.

785. காளிகூளிகள் - போர்க்களத்தில் உள்ள பேய்கள்.

786. கொள்ளிவாய்ப் பேய்கள் - வாயில் தீக்கனல் உள்ள பேய்கள்.
குதிகள் - உற்சாகத்தில் துள்ளுவது.

787. மறிக்குதாம் - மேலே செல்லவிடாமல் தடுக்கின்றதாம்.

கழுகானது நுணைந்தாடுது போய்
செம்பிறாந்துகள் சம்ராயம் போடுதாம்
கஞ்சனும் போய்ஒடி ஒளிக்கவே
காக்கையானது கண்பார்த்து நிற்குதாம்

## யானையை அழித்தல்

கஞ்சனுடைய படைகளெல்லாம் பஞ்சுபோல் பறந்தாரே
வஞ்சனானதோர் கஞ்சனும் தேறியே
சிங்கம்போல் சீறி எழுந்திருந்தான்
இன்ன மேதென்று எண்ணியே கஞ்சனும்
பட்டத்துயானையைத் திட்டமாய் விட்டானே
பால்வண்ணனைக் கொல்ல யென்று யானையை
பாவிவிட்டானே மேவியே கஞ்சனும்
ஆங்காரங் கொண்டந்த சிங்கார யானையும்
யானையானது முனைந்து கொண்டுமே
கோதண்டபாணியைக் கொல்லவென்று எண்ணியே
கிட்ட வந்ததோர் பட்டத்து யானையை
அனந்தகிஸ்ட்னன் ஆனந்தம் கொண்டுமே

---

788. நுணைந்தாடுது - நுழை < முனை - வெகு ஆர்வத்துடன் இறந்த போர்வீரர்களின் உடல்கள் மீது விழுந்து ஆடின.

789. செம்பிறாந்துகள் < செம்பருந்துகள் - சிவந்த நிறமுடைய பிணந்தின்னும் பருந்துகள்.

790. ஒளிக்கவே - மறைந்து கொள்ளவே.

791. காக்கையானது . . . - கொத்தித் தின்பதற்காகக் கண்களைப் பார்த்து நிற்றல்.

793. தேறியே - தோல்வியைக் கண்டு மனந்தளர்ந்து, பின்னர் அதனின்று மீண்டு.

795. இன்னமேதென்று - இனிமேல் என்ன இருக்கிறதென்று.

798. மேவியே - ஏறியே.

799. ஆங்காரம் < அகங்காரம் - மிகுந்த கர்வமும், தானென்ற செருக்கும் கொண்ட யானை.
சிங்கார - நன்கு அலங்கரிக்கப்பட்ட

800. முனைந்து - மிகுந்த கோபம்கொண்டு விரைவுடன்.

801. கோதண்டபாணி - தண்டாயுதத்தைக் கையிலேந்திய திருமால் அவதாரமான கண்ணன்.

கொரட்டை[க்] கம்பைக் கண்ணன் எடுத்துமே
கொழுத்த மதயானையின் மத்தகத்தில் குத்தினார்
மத்த கத்திலே மாயனார் குத்தவே
மாண்டு மதகரி மண்மேல் விழுந்திடவே
மாய னானந்தம் கொண்டு மகிழ்ந்திடவே
கண்டு கஞ்சனும் கொண்டானே கோபத்தை
கோபம் கொண்டந்த கஞ்சனும் நாடியே
நந்தகோபாலனை[க்] கொல்லென்று எண்ணியே
சாகத் துணிந்தவன் தலைகீழாய்[ச்] சாடியே
ஆர பாரக் கொர்வித மாகவே
சிங்கம் போல கர்ச்சனை செய்தானே
சீறி எட்டி[ப்] பிடிக்கத் துணிந்தானே

## கம்சனின் அழிவு

பார்த்து இருந்ததோர் பால்வண்ண நாதனும்
வெண்ணை யுண்டோனும் வேறொரு ரூபமாய்
நீரணி சடை யீசனை எண்ணவே
தொண்டனாருட சொல்லின் செயலால்
வெண்ணை யுண்டோனும் ஆதியை எண்ணியே
அச்சுதனார் பச்சமால் மாயனும்

---

804. கொரட்டைக் கம்பு - தொரட்டிக் கம்பு - அங்குசம் போன்றது. இதை இடையர்கள் இலைதழைகளைப் பறித்து ஆடுமாடுகளுக்கு இடுவதற்குப் பயன்படுத்துவர்.

805. மத்தகம் - யானையின் மேல்தலை. (அல்லது) நெற்றியின் உச்சிப்பகுதி.

812. சாகத்துணிந்தவன் . .. .. - உயிரை வெறுத்துச் சாகத்துணிந்தவர்கள், உயர்ந்த இடத்திலிருந்து தலைகீழாக விழும்படிக் குதிப்பார்கள். அத்தகைய துணிச்சலுடன் வித்தையடித்து.

814. கர்ச்சனை - சிங்கம் போன்று கோபம் கொண்டு உறுதியுடன் வந்தான் என்க.

816. பால்வண்ணநாதன் - பால்போன்ற நிறம் கொண்டவன்.

817. வேறொரு ரூபமாய் - வேறொரு உருவம் கொண்டு.

818. நீரணி சடை ஈசன் - கங்கையைத் தலையில் வைத்துள்ள இறைவன்.

819. தொண்டனார் . - முன்னர் சிவபெருமான் அழைத்துத் தன்னிடம் சொல்லியதற்கேற்ப.

820. ஆதி - இறைவன்.

821. அச்சுதன் - அழிவில்லாத கடவுளாகிய திருமால் .
பச்சமால் <பச்சைமால் - பச்சை வண்ணமுடைய திருமால்.

822. அரிகரி உருவமாய் - தான் இருக்கும் சிறுவன் தோற்றத்திலிருந்து மாறி, திருமாலின் உண்மைத் தோற்றம் பெற்று.

அரிகரி உருவாய் அச்சுதனார்
சீறிஎழுந்து சிங்கம் போல் பாய்ந்தார்
கர்ச்சனை செய்து கஞ்சனைப் பிடித்தார்
கஞ்சனை[ப்] பிடித்து நெஞ்சிலே மிதித்து
பெருவிரல் நகங்கொண்டு நெஞ்சைப் பிளந்து
வஞ்சக நெஞ்சை இரண்டாய்[ப்] பிளந்து
மணிக்குடல் பிடுங்கி மாலையாய்[ப்] போட்டு
தித்தி ததிதி மிதிதோ மெனவே
திருநடன மாடி திருமாலும் நின்றார்
தேவர்க்ளெல்லாம் பூமாரி பொழிந்தார்
தெய்வ ரம்பையர் குரவைகள் பாட
அந்தர துந்துமி வந்தே முழங்க
கஞ்ச னானதோர் மாமனை[க்] கொன்று
தேவகி யாளுட சிறையதை மீட்டி
வாசுதேவனை[ப்] பாசமாய் அழைத்து
பாசமாய் அழைத்து[ப்] பச்சமால் ராமன்
விந்தையாக வேதத்தையே பாடும்
ஈமக் கிரியைகள் தானே முடித்து
அரிகரி ராமன் அச்சுத ராமன்

---

826. பெருவிரல் நகங்கொண்டு - வேறு ஆயுதம் ஏதுமின்றியே தன் பெருவிரல் நகத்தால்; இரணியனை நரசிம்மமூர்த்தி தம் கூரிய நகங்களால் பிளந்தது இங்கு நினைக்கத்தக்கது.
நெஞ்சைப் பிளந்து - கம்சனின் மார்பைக் கிழித்து. புராணத்தில் தோல்வி கண்ட கம்சன், வசுதேவ, தேவகியரைக் கொல்ல உத்தரவிட்டபோது, கோபம் கொண்ட கண்ணன், சிங்கம் ஒன்று நிலத்திலிருந்து மலைக்குத் தாவுதல் போல் கம்சனின் மஞ்சத்தில் தாவி, அவன் நெஞ்சைத் தாக்கிக் கொன்றான் என்று வருகிறது.

828. மணிக்குடல் - சிறுசிறுமடிப்புகள் கொண்ட குடல்.
மாலையாய் - இரத்தம் தேய்ந்த சிவந்த குடலைத் தன் கழுத்தில் அணிந்து கொண்டார்.

829. தித்தி ததிதி - ஒலிக்குறிப்பு.

830. நின்றார் - ஆட்டத்தை நிறுத்தினார்.

833. அந்தர துந்துமி - பேரிகை.

839. ஈமக்கிரியைகள் - இறந்த கஞ்சனுக்குரிய இறுதிக் காரியங்கள்.
தானே முடித்து - இராசகுமாரன் என்ற நிலையிலும் மருமகன் என்ற நிலையாலும் மாமன் கம்சனுக்குச் செய்ய வேண்டிய சடங்குகளைக் கண்ணன் செய்தான்.

ஆனந்த மாடி ரெகுபதி னாதன்
ஆயிளையாளுட மடிமீதில் வந்து
அரிகரி உருவைவிட்டு அனந்தகிஸ்ட்னனாய் அவதரித்தார்

### வேறு

அன்னையுட இடமதிலே அருங்குழந்தையாய்[த்] தானிருந்தார்
அந்த அதிசயம் தான்பார்த்து அசோதையரும் தானிருந்தாள்
மதுராபுரி யானதிலே மறுத்துக்கேள்ப்பார் யாருமில்லை
அப்படியாய் அவரிருக்க அசோதைஅம்மனும் வழிநடந்தார்
மதுராபுரி நகர்கடந்து வாறார்கள் ஏபேருகளும்
ஆறுசுனை நதி கடந்து ஆயர்பாடி தனிலேவந்தார்
அசோதையாளுட மனைதனிலே ஆயிளையாளும் வந்து சேர்ந்தார்
இப்படியாய் இருக்கும்போது மாயன் ஏழெட்டு வயசானார்
பாட்டுப்பாடி வெண்ணை வாங்கிப் பாலகனும் உண்டுவாறார்
ஒருநாளை தினமதிலே உலகளந்தோன் ஏதுசெய்தார்

### கண்ணனின் மாயச்செயல்கள்

மாயனந்த அனந்தகிருஷ்ணன் மாடுமேய்க்க தான்துடந்தார்
அன்னையுட யிடமதிலே அனந்தகிருஷ்ணன் ஓடிவந்து
ஆடுமாடு மேய்த்துவர அன்னையரே என்தாயே

---

842. ஆயிளையாளுட மடி - யசோதையின் மடி.

843. அரிகரி உருவைவிட்டு - கம்சனைக் கொல்வதற்காக திருமால் உருவத்தை எடுத்திருந்த கண்ணன், அந்த உருவத்தை விட்டுவிட்டு.
அனந்த கிஸ்ட்னனாய் - பாற்கடலில் பள்ளி கொள்ளுவது போல் தாயின் மடிமீதில் வந்தமர்ந்தான்.

845. அந்த அதிசயம் - சிறுவனாயிருந்து பேருருவெடுத்து, மீண்டும் சிறுவனாய்த் தோற்றமெடுத்த விந்தையைப் பார்த்து.

846. மறுத்துக் கேள்ப்பார் < கேட்பார் - கம்சனைக் கொன்றதைப் பற்றித் தட்டிக் கேட்கும் துணிச்சல் யாருக்கும் இல்லை.

851. வயசு < வயது.

852. பாட்டுப்பாடி - புல்லாங்குழல் ஊதி

854. துடந்தார் - தொடர்ந்தார்; இடையர் செய்யும் கன்றுகாலி மேய்த்தலைச் செய்யத் தொடங்கினார்.

விட்டதர வேணும் என்று வெண்ணையுண்டோனும் கேட்டபோது
என்மகனே அனந்தகிஸ்ட்னா என்வார்த்தை சொல்லக்கேள்ப்பா
மலடிருந்து மனமுருகி மலடியுனை ஈன்றெடுத்தேன்
தவமிருந்து உந்தனைத்தான் தாமோதரா யீன்றெடுத்தேன்
மாதாபிதா தவமிருந்து மாயவனே யீன்றெடுத்தோம்
மாடுமேய்க்க உன்னைவிட்டு மாதாபிதா இருப்போமோ?
ஆடுமேய்க்க மாடுமேய்க்க அசலாத்து பிள்ளையுண்டு
போகவேண்டாம் என்மகனே புத்தியுள்ள கண்மணியே
மாடுமேய்க்க என்பாலகா நீவனத்திலே போகவேண்டாம்
தாய்வார்த்தை கேளாமல் தாமோதரன் போகவென்று
போய்வாறேன் என்றுசொல்லி[ப்] புறப்பட்டானே அனந்தகிஸ்ட்னன்
மாடுகன்று தனைஅவிழ்த்து மாயனவன் ஏகுகின்றார்
ஆயிரம் பிள்ளையுடன் அனந்தகிஸ்ட்னன் செல்லுகிறார்
வனங்களென்ற வனங்களெல்லாம் மாடுமேய்க்க[த்] தான்துடந்தார்
கல்லுகொண்டு கனிஎறிந்து கன்னியர்க்கு ஊட்டுகிறார்
இப்படியே சிலகாலம் இருக்கிறதோர் நாளையிலே
ஒருநாளை தினமதிலே உலகளந்தோன் ஏதுசெய்தார்

## கன்னியர்கள் கர்ப்பமடைதல்

மழையுடனே கூதலுடன் வரவழைத்தான் அனந்தகிஸ்ட்னன்
ஆட்டுக்குட்டி போலவேதான் அனந்தகிஸ்ட்னன் இருந்து கொண்டார்

---

859. மலடிருந்து - குழந்தைகள் இல்லாது மலடாக நீண்ட நாளிருந்து.
மனமுருகி - மனவேதனை அடைந்து.

860. தவமிருந்து - குழந்தை வேண்டும் என்று இறைவனிடம் வேண்டி.

863. அசலாத்து < அயலாத்து - அடுத்த வீடு.

865. பாலகா - சிறிய மகனே.

871. கல்லு கொண்டு கனி எறிந்து - உயரமாக இருக்கின்ற மரங்களில் பழுத்துத்தொங்கும் பழங்களை ஏறிச்சென்று பறிக்க முடியாது என்பதால் கல்லை எடுத்து எறிந்து அவற்றை வீழ்த்தினார்.
கன்னியர்க்கு ஊட்டுகிறார் - தன்னுடன் வந்து ஆடுமாடு மேய்த்துக் கொண்டிருந்த ஆய்ச்சியருக்குக் கண்ணன் ஊட்டிவிடுகிறான். 'கண்ணன் லீலை' என்று சொல்லப்படுபவைகளில் இதுவும் ஒன்று.

874. கூதல் - குளிர்காற்று; வாடை

875. ஆட்டுக்குட்டி போலவே - கண்ணன் ஆட்டுக்குட்டி வடிவெடுத்து.

ஆயிரம் கன்னியரும் ஆயிளைமார் அந்நேரம்
ஆட்டு[க்] கூண்டு தன்னருகே ஆயிளைமார் வந்துசேர்ந்தார்
கூதல்தாங்க முடியாமல் கூண்டுக்குள்ளே நுழைந்தார்
ஆயனுட செயலாலே அன்றுமுதல் கெற்பமானார்
இப்படியே சிலகாலம் இருக்கிறதோர் வேளையிலே
உலகளந்தோன் செயலாலே ஒன்றுரண்டு மூன்றாகி
மூன்றான மாஸ்த்தையிலே முகமெல்லாம் வெளுப்பேறி
நந்தகோபாலன் செயலாலே நாலஞ்சு மாதமாச்சு
ஐந்தான மாஸ்த்தையிலே அடிவயிறு கனத்திடுமாம்
ஆறான மாஸ்த்தையிலே அடிவயிறு சூலானார்.
கண்டாரே அன்னையர்கள் கன்னிமார்கள் கோலமதை
இனிமேலும் என்னசெய்வேன் எதிர்வீட்டு அக்கா
அடுத்தவீடு தொடுத்தவீடு அக்காமாரே கேளுங்க
கறபழித்தான் கோபாலன் கன்னியரை எல்லாம்
என்றுசொல்லி எல்லோரும் ஏங்கி மனந்துடித்து
அம்பலக்கோன் மனைதனிலே அனந்தகிஸ்ட்ன் பிறந்து
துஷ்டப்பயல் கிஸ்ட்னனாலே கெட்டகுடி மெத்த
இனிமேலும் என்னசெய்வோம் என்றவர்கள் கூடி
அம்பலக்கோன் மனைதனிலே அழுதழுது சொல்வார்கள்

---

877. ஆட்டு[க்]கூண்டு - ஆடுகளை இரவில் அடைத்து வைக்கும் சிறுவீடு போன்ற கூண்டு; ஆட்டுக் கிடை; குடில்.

879. ஆயனுட செயலாலே - கண்ணன் தன் மாயச்செயல்களால் அவர்கள் அனைவரையும் கருவுறும்படிச் செய்தார்.
கெற்பம் < கர்ப்பம் - கருவுறுதல்.

882. முகமெல்லாம் வெளுப்பேறி - ரத்தம் இழந்து முகம் வெளுத்து.

884. அடிவயிறு கனத்திடுமாம் - கருவளர்ந்து வருவதால் வயிறு சற்றுப் பெரிதாகுதல்.

885. சூலானார் - கருவளர்ச்சி யடைந்து வயிறு பெருத்து வெளியே தெரிதல்.

886. கன்னிமார்கள் கோலம் - திருமணமாகாத பெண்களின் வயிற்றில் கருஉருவான தன்மை.

888. தொடுத்த வீடு - தங்கள் வீட்டை ஒட்டிய வீடு.

892. துஷ்ட்டப்பயல் - மிகுந்த குறும்புகளுடன் கூடிய கண்ணன்.
கெட்டகுடி - கெட்டுப்போன பெண்களுள்ள குடும்பங்கள்.
மெத்த - ஏராளம்.

## வேறு

அசோதையரே உன்மகனால் அழிவுவந்து நேர்ந்துதடி
கற்புடைய மங்கையரை[க்] கற்பழித்தான் உன்மகனும்
ஆயிரம் கன்னியரும் ஆயிளைமார் கற்பமானார்
இப்படி[ச்] செய்யலாமோ ஏந்திழையே அசோதையரே
என்று சொல்லி அசோதையுடன் இவர்களும் சண்டையிட்டார்
அப்படியே சண்டையிட்டு ஆயிளைமார் ஏதுசொல்வார்
எங்களுட பிள்ளைகளை ஏந்திளையே உன்மகனை
மணமுடித்துக் கொள்ளச்சொல்லும் மங்கையரே அசோதை
என்றுசொல்ல ஆயிளைமார் ஏதுசொல்வாள் அசோதையரும்
ஒன்அறுரெண்டு ஆனாலும் உலகத்தில் உள்ளபங்கு
ஆயிரம் பிள்ளைகளை ஆயிளையே என்னசெய்வேன்
அப்படியே சொன்னபோது ஏதுசெய்தான் கோபாலன்

## கண்ணன் தீர்வு சொல்லுதல்

ஆயிளைமார் முன்பதிலே அனந்தகிஸ்ட்னன் வந்துசேர்ந்தார்
ஆளுக்கு மூன்றுகுடுக்கைபொன்னு ஆயிளைமாரே தாரதுண்டா
ஆயனுட இடமதிலே ஆயிளைமார் ஓடிவந்தார்
பார்த்தாரே ஏழைப்பங்கோன் பள்ளிகொண்டோன் ஏதுசெய்தார்
மூவாயிரம் குடுக்கைபொன்னு மொத்தத்திலே கூட்டி[ப்]போட்டு
களத்திலே கூட்டிப்போட்டு கன்னியரே வாருங்க என்றான்

---

895. அழிவு நேர்ந்தது - திருமணமாகாத பெண்கள் கர்ப்பமடைந்ததால், அந்தக் குலத்தினரின் மானத்திற்கே சிறுமை வந்து சேர்ந்து விட்டது.

901. பிள்ளைகளை - பெண்மக்களைக் குறிக்கும் வழக்குச்சொல்.

904. உலகத்தில் உள்ள பங்கு - ஒருவன் ஒன்றோ இரண்டோ பெண்களை மணப்பது உலகவழக்கு.

907. முன்பதிலே - முன்பக்கத்திலே, எதிரே.

908. ஆளுக்கு - ஒவ்வொருவரும்.
குடுக்கை < குடுவை - மட்கலசம்; அடிப்பாகம் உருண்டையாக உள்ள பானை.
தாரதுண்டா - தருவது உண்டா.

912. களம் - தானியங்களைப் பிரித்துக் காயவைக்கும் மண்தரை.
கூட்டிப்போட்டு - ஒன்றாகச் சேர்த்துக் குவித்து.

அவரவர் பொன்னுகளை ஆயிளைமாரை[த்] தட்டச் சொன்னார்
அப்படியே சம்மதித்து ஆயிளைமாரும் தட்டிடவே
வாயுபகவானை வரவழைத்து வாரிக்கொண்டு போகும் என உரைத்தான்
மாயனுடசெயலாலே வாரிக்கொண்டு போகுதே முத்துக்களை
களத்தில்தட்டி அளக்கும்போது கால்வாசி முத்தை[க்] காணுதில்லை
பார்த்தாரே பைங்கொடிமார் பரதவித்து ஏதுசெய்தார்
அவரவர் மாளிகையில் ஆயிளைமார் வந்துசேர்ந்தார்
ஆடுமாடு தன்னைவிற்று ஆயனுக்கு[ய்] பொன்சேகரித்தார்
ஆளுக்குமூன்று குடுக்கைபொன்னை அவரவரே சேகரித்தார்
மடமடென்றும் திடுதிடென்றும் மடக்கொடிமார் ஓடிவந்தார்
மறுபடியும் தட்டச்செய்து மாயவனும் அளக்க[ச்] சொன்னார்
அப்படியே சம்மதித்து அனைபேரும் தட்டும்போது
வாயுபகவானை வரவழைத்து வாரிக்கொண்டுபோகும் என உரைத்தார்
கோதையர்கள் அளக்கும்போது குடுக்கையது நிறையவில்லை
பார்த்தாரே கன்னியர்கள் பரதவித்து ஏதுசெய்தார்
அவரவர் மனைதனிலே ஆயிளைமாரும் வந்துசேர்ந்தார்
மாங்கல்யம் தனைத்தவிர தங்கமெல்லாம் விற்றுவாறார்
அடுக்குசட்டி உருக்குசட்டி அத்தனையும் விற்றுவாறார்

---

913. தட்டச்சொல்லுதல் - கொட்டச் சொல்லுதல்.

915. வாயுபகவான் - காற்றிற்குத் தலைவன்.

916. வாரிக்கொண்டு - காற்றில் அள்ளிக்கொண்டு போதல்.

917. கால்வாசி - கொண்டுவந்ததில் கால்பங்கு.

919. மாளிகையில் - பல வசதிகள் நிறைந்த பெரிய வீடுகள்.

921. மூன்று குடுக்கை பொன்னு - ஒரு குடுக்கை அளவு காற்றில் அடித்துச் செல்லப்பட்டாலும், பிற மிஞ்சும் ஆதலால், இந்த அளவு சொல்லப்பட்டது.

922. மட,மட, திடுதிடு - யார் முதலில் இட்டு, கண்ணனை அடைவது என்ற போட்டியில் எழுந்த ஒலி.

929. மாங்கல்யம் - தாலி.

930. அடுக்குசட்டி - அடுக்கடுக்காய் உள்ள பத்திரம்; மட்பாத்திரங்களில் தானியங்களை நிரப்பி ஒன்றின் மேல் ஒன்றாக வைப்பர்.
உருக்கு சட்டி - தீயிலிட்டு உருக்கி, வார்த்தெடுத்த உறுதியான பாத்திரம்.

பால்காய்ச்சும் பானைமுதல் பாவையர்கள் விற்றுவாறார்கள்
அவர்கள்படும் அவஸ்த்தைதன்னை அறிந்தாரே மாயவரும்
மாயவனும் அறிந்துகொண்டு மனமிரங்கி ஏதுசெய்தார்
முத்தெடச்சி வீடதிலே முன்னும்பின்னும் பாராமல்
கொட்டின கொட்டுக்கொரு குடுக்கைபொன் வாங்கவென்று
அப்படியே அவரிருக்க ஆயிளைமார் எல்லோரும்
ஆளுக்குமூன்று குடுக்கை பொன்னை அவரவரே சேகரித்து
மாயனுட இடமதிலே மங்கையர்கள் வந்துநின்று
வாயுபகவானை வரவழைத்து மாயோனும் அனுப்பிவைத்தார்
ஆயனுட செயலாலே அளந்துவிட்டார் ஆயிளைமார்
வாங்கிக்கொண்டு அனந்தகிஸ்ட்னன் மாமிமார்க்கேது சொல்வான்
பைங்கொடியே உங்கள்வீட்டில் பந்தலது போடுமென்றார்
அனந்தகிஸ்ட்னன் சொல்படியே ஆயிரம்பேரும் சம்மதித்து
ஆயர்பாடி இடையரெல்லாம் அன்புடனே பந்தலிட்டார்
அம்பலக்கோன் மனைதனிலே அழகுபந்தல் செப்பனிட்டார்
பந்தலது அலங்கரித்து[ப்] பல்லாக்கை வரவழைத்தான்
அனந்தகிஸ்ட்ன பாலனையும் அன்ம்புடனே அலங்கரித்து

---

932. அவஸ்த்தை - துன்பம்.

934. முன்னும் பின்னும் பாராமல் - முன்பு ஆய்ச்சியர்கள் வெண்ணெய் திருடிய கண்ணனைத் தலையில் கொட்டும்போது, அவனுடைய தெய்வத்தன்மையை எண்ணிப்பார்க்காமல்; அவனுடைய முற்காலத்தையும், பிற்காலத்தையும் எண்ணாமல் இருந்து விட்ட நிலை.

935. கொட்டி ... - அன்று தலையில் குட்டிய ஒவ்வொரு குட்டுக்கும், ஒவ்வொரு குடுக்கையில் பொன்.

939. அனுப்பிவைத்தார் - வந்திருந்த வாயுபகவானை, அவருடைய இடத்திற்கே திருப்பி அனுப்பிவைத்தார்.

941. மாமிமார் - அப்பெண்களின் தாய்மார்கள் கண்ணனுக்கு அத்தைமாமி உறவு ஆவர்.

942. பந்தல் - சுபகாரியங்களுக்காகப் போடப்படும் கீற்றுக் கொட்டகை.

945. செப்பனிட்டார் - மிகுந்த திருத்தமுடன் பந்தல்களைப் புதுப்பித்தனர்.

946. பல்லாக்கு < பல்லக்கு - மன்னர்கள், உயர்ந்த குடியினர் செல்லும் தூக்குக் கூண்டு. இதுபலவித அலங்கார வேலைப்பாடுகளுடன் கூடியது. தற்போது உள்ள சப்பரங்கள் போன்று தோற்றத்தில் காணப்படும். தோளில் தூக்கிச் செல்லுதற்கேற்ப அதன் இருபுறங்களிலும் வளைந்த தடிகள் கட்டப்பெற்றிருக்கும்.

மாப்பிள்ளை[க்] கோலம்போட்டு மாமன்சடங்குதான் முடித்தார்
பல்லாக்கில் ஏற்றிவைத்து[ப்] பட்டணப்பிரவேசம் வாறார்
உலகளந்தோன் தானிறங்கி ஒருமனையில் உள்புகுந்தார்
ஆயிரம் வீட்டிலும் ஆயிரம் மாப்பிள்ளையானார்
அப்படியே அவரிருக்க ஆயர்பாடி இடையரெல்லாம்
மறுவீட்டில் விடக்கூடாதென்று வாசல்தனை[ப்] பூட்டிக்கொண்டார்
அப்படிக்கு அவரவரே அனந்தகிஸ்ட்னனுக்கும் மாலையிட்டார்

## சாம்பவனின் ஆசை

இப்படி இவரிருக்க அழகுமன்னன் சாம்புவனும்
அனந்தகிஸ்ட்னன்போல் வடிவுகொண்டு ஆயர்பாடி தனிலே
வாறான்
ஆயிரம் பெண்ணையும் மாயன் மாலையிட மாட்டாரென்று
நாமும்ரண்டு பெண்களைத்தான் நல்லமணம் முடிக்கவென்று

---

948. மாப்பிள்ளை[க்] கோலம் - திருமணம் செய்து கொள்ளப்போகும் புதுமாப்பிளை, நன்கு அலங்கரித்து, மாலை மரியாதைகளுடன் இருத்தல்.
மாமன் சடங்கு - மணமகன், மணமகளின் தாயின் சகோதரர்கள் தாய்மாமன் ஆவர். இவர்களை மணமேடையில் ஏற்றி, மாலை மரியாதைகள் செய்து, மருமகனையோ அல்லது மருமகளையோ மாமன் ஆசீர்வாதம் செய்வார். இதற்கு மாமன் சடங்கு எனப்பெயர்.

949. பட்டணப்பிரவேசம் - மாப்பிள்ளை ஊர்வலம் ஊர்முழுவதும் சுற்றிவருதல்.

950. தானிறங்கி - பல்லக்கை விட்டு இறங்கி வெளியில் வந்து.

951. ஆயிரம் .... - ஆயிரம் பெண்களுக்கும் ஆளுக்கொரு மாப்பிள்ளையாகக் கண்ணன் ஒருவனே உருவெடுத்தான்.

953. மறுவீட்டில் விடக்கூடாதென்று - இன்னொரு வீட்டில் விட்டால், அவர்கள் தங்கள் மருமகனைத் தங்கள் பெண்ணுக்கு மணமுடித்துவிடுவார்களோ என்று அஞ்சி, ஒவ்வொருவரும் கண்ணனைத் தங்கள் வீட்டிலேயே வைத்துக்கொண்டனர்.

955. சாம்புவன் - இவனைப் புராணத்தில் சாம்பன் என்பர். நாரதரை இவன் வணங்காததால் அவர் கோபம் கொண்டு கண்ணனிடம் சாபம் பெறும்படி அனுப்பிவைத்தார். அங்குக் கோபியருடன் கண்ணன் சலக்கிரீடை செய்துகொண்டிருந்தான். அப்பொழுது கோபியர், அவனைச் சலனத்துடன் பார்த்தனர். அவனும் காமவிகார முற்றான். அதனை அறிந்த கண்ணன், அவனுக்குக் குட்டநோய் உண்டாகும்படிச் சாபமிட்டார். பின்னர் சூரியனை வணங்கி அந்நோய் நீங்கப்பெற்றான் என்று சொல்லப்படுகிறது.

958. ரண்டு < இரண்டு.

மணம்முடிக்க வேண்டுமென்று மனதுதனில் தானே எண்ணி
ஆயர்பாடி மனைதனிலே அவர்ஒருமனையில் சென்றாராம்
அனந்தகிஸ்ட்டனன் தானறிந்து ஆரென்று அவர்கேட்டார்
நான்தானையா சாம்புவன்காண் நலமுடனே ஏதுசொல்வான்
உம்முடைய மாலைமணம் உலகளந்தோன் பார்க்கவந்தேன்
அப்படியே அவரும்சொல்லி அடுத்தமனை தனிலேவந்தார்.
ஆயனும் தானறிந்து அனந்தகிஸ்ட்னன் கேட்கலுற்றார்
நான்தானையா என்றுரைத்தான் நலமுடனே சாம்புவனும்
ஆயனுட மாலைமணத்தை அன்புடனே பார்க்கவந்தேன்
என்றுசொல்லி சாம்புவனும் ஏற்றமறுமனை தனிலேவந்தார்
பார்த்தானே அனந்தகிஸ்ட்னன் பாவியவன் அலையுறதை
நாலுவீட்டில் கலியாணம் நாய்க்குஅங்கேஇங்கே ஓட்டம்
என்றுசொல்லி அனந்தகிஸ்ட்னன் அவருமே தான்சிரித்தார்
அப்படியே அவரிருக்க அழகுமன்னன் சாம்புவனும்
ஆயிரம் இடக்குடியும் அழகுமன்னன் தான்பார்த்து
பார்த்ததுமே சாம்புவனும் பரதவித்து ஓடலுற்றார்
அப்படியாக அவரிருக்க ஆயர்பாடி இடையரெலலாம்
மாப்பிள்ளை பெண்களைஅலங்கரித்து வாய்த்தபல்லக்கில் ஏற்றிவைத்து
பட்டணங்கள் எத்திசையும் பட்டணப்பிரவேசம் வாறார்

---

961. ஆரென்று < யாரென்று.

963. மாலைமணம் - திருமணத் தோற்றம்.

969. பாவியவன் அலையுறது - ஏதாவது ஒரு விட்டில் கண்ணன் இல்லைஎன்றால் கண்ணன் இடத்தில் தான் இருந்து அப்பெண்ணுடன் மகிழலாம் என ஒவ்வொரு விடாகச் சென்று பார்த்தான்.

970. நாலுவீட்டில் — — - தெருநாய்கள், திருமணங்கள் ஒரே தினத்தில் ஓரிடத்தில் நிறையநடந்தால், எங்குச் சாப்பிடுவது என்று அலைந்து, ஒவ்வொரு வீட்டையும் சென்று சென்று பார்த்துத் தின்று வரும். அதுபோல் சாம்பவன் அங்குமிங்கும் அலைந்து கொண்டிருந்தான்.

973. இடக்குடி - இடையர் வீடுகள்.

974. ஓடலுற்றார் - எல்லா இடங்களிலும் ஒரே சமயத்தில் கண்ணன் மாப்பிள்ளைக் கோலம் கொண்டு இருப்பதைக் கண்டு, அச்செயலின் தன்மைபுரியாமலும், தனக்கெதுவும் கிட்டாததாலும் பயந்து ஓடிவிட்டார்.

## கண்ணனின் மாயச்செய்கை

பட்டணப் பிரவேசம் வாறபோது பள்ளிகொண்டோனும்
ஏதுசெய்தார்
மாயன்வயித்திலே தான்தடவி மாயமாக[ப்] போய்[ச்] சேர்ந்தார்
பரமசிவனுக்கு[ச்] சேதிசொல்லிப் பால்கடலில் பள்ளிகொண்டார்
அப்படியே அவரிருக்க ஆயர்பாடி இடையரெல்லாம்
அனந்தகிஸ்ட்னனை[க்] காணாமல் ஆயிளைமாரும் பரதவித்து
வயிற்றில் இருந்ததோர் கெர்ப்பமது மாயமாக[க்] காணுதில்லை
அசோதை அம்மையும் பரதவித்து ஆயிளையாருடன் தானிருந்தார்
எம்பெருமானைக் காணாமல் எல்லோரும் பரதவித்து
பழையபடி ஆயர்பாடிதனில் பாவினையாய் ஆண்டிருந்தார்

### வாழி

குஞ்சரமுகத்தோன் வாழி குழந்தைமுருகேசன் வாழி
செஞ்சடைஈசன் வாழி தேவர்கள் முனிவர்கள் வாழி
கஞ்சன்கதை கேட்டோர்வாழி கவனமுடன் படித்தோர் வாழி

* * *

---

979. வயத்திலே தான் தடவி - வயிற்றைத் தடவியதால், கரு அற்றுப் போய்விடும் என்று அவ்வாறு அவர் செய்தார்.

980. பரமசிவனுக்குச் சேதி சொல்லி - தன்னை அனுப்பிவைத்த சிவபெருமானிடம், தான் வந்த வேலை நிறைவுற்றதைச் சொல்லி அனுப்பினார்.
பால்கடல் - திருப்பாற்கடல். திருமால் பாம்பணை மேல் பள்ளிகொள்ளும் இடம்.

983. கெர்ப்பமது மாயமாகக் காணுதில்லை - கண்ணன் தானே உருவாக்கிய கர்ப்பத்தை, வயிற்றைத் தடவுவதன் மூலம் அனைத்தையும் மறையும்படிச் செய்தார் அச்செயலின் மாயம் கண்டு வியந்தனர்.

987. குஞ்சரமுகத்தோன் - யானை முகத்தோனாகிய விநாயகன்.
குழந்தை முருகேசன் - இளையவனான முருகன்.

988. செஞ்சடை ஈசன் - சிவந்த கொன்றை மலர்களைச் சூடிய சிவபெருமான்.

# சொல்லகராதி

## இ



## ஈ

## க

## வா



## வி



## வீ



## வெ



## வே



## வை

# பெயரகராதி

**அணிகலன்களின்பெயர்கள்**

1. சிலம்பு
2. தண்டை
3. மாங்கல்யம்
4. வளையல்

**தெய்வ, ஆள் பெயர்கள்**

1. அசோதை
2. அச்சுதனார்
3. அரிகரி
4. அனந்தகிஸ்னன்
5. ஆதித்தன்
6. கஞ்சராசன்
7. கண்ணன்
8. கபாலி
9. கோதண்டபாணி
10. கோபாலன்
11. சாம்புவன்
12. சுந்தரி
13. தங்கமணி
14. தாமோதரன்
15. தேவகியாள்
16. நந்தகோபாலன்
17. நித்ராதேவி
18. நிரந்தரி
19. பூரணி
20. பெருமாள்
21. பொம்மி
22. முத்தெடச்சி
23. முப்புரத்தி
24. முருகேசன்
25. ராமன்
26. ரெகுபதி
27. ரெகுபதினாதன்
28. ரோகிணியாள்
29. வாசுதேவன்

**ஆறுகளின்பெயர்கள்**

1. கல்லாறு
2. புனலாறு

**இசைக்கருவியின் பெயர்கள்**

1. கொட்டு
2. துந்துமி
3. பறை

**உடலுறுப்புகளின்பெயர்கள்**

1. கண்
2. கன்னம்
3. காது
4. கால்
5. குடல்
6. குறுக்கு
7. கை
8. கொண்டை
9. சடை
10. சிரசு
11. தொண்டை
12. நகம்
13. நாக்கு
14. நெஞ்சு
15. நெத்தி
16. பல்
17. பாதம்
18. பெருவிரல்
19. மண்டை
20. மார்பு
21. முகம்
22. மேனி
23. ரத்தம்
24. வயிறு
25. வாய்

**உணவுப்பொருள்களின்பெயர்கள்**

1. சாதம்
2. தண்ணீர்
3. தயிர்
4. தேங்காய்
5. பால்
6. வெண்ணை

**உறவுப் பெயர்கள்**

1. அக்கா
2. அண்ணன்
3. அம்மா
4. அய்யா
5. அன்னை
6. ஆண்
7. கணவன்
8. குழந்தை
9. சக்களத்தி
10. தகப்பன்
11. தங்கை
12. தந்தை
13. தமையன்
14. தாய்
15. தோழி
16. பாலகன்
17. பிதா
18. பிள்ளை

19. பெண்
20. மங்கை
21. மகள்
22. மகன்
23. மருமகன்
24. மாதா
25. மாப்பிள்ளை
26. மாமன்
27. மாமி
28. மைத்துனர்
29. மைந்தன்

**ஊர்ப்பெயர்கள்**

1. ஆயர்பாடி
2. இலங்காபுரி
3. தென்மதுரை
4. மதுரை
5. வடமதுராபுரி

**எண்ணுப்பெயர்கள்**

1. ஆயிரம்
2. ஆறு
3. இரண்டு
4. ஈரேழு
5. ஏழரை
6. ஏழு
7. ஐந்து
8. ஒன்றரை
9. ஒன்று
10. கோடி
11. தொண்ணித்தொன்பது
12. நாலஞ்சு
13. நாலு
14. பன்னிரண்டு
15. பதிமூன்று
16. முப்பத்திமுக்கோடி
17. மூவாயிரம்
18. மூன்று

**கொலைக்கருவிகளின் பெயர்கள்**

1. அம்பு
2. கோடாலி
3. தண்டாயுதம்
4. வாள்
5. வில்

**சாதிப்பெயர்கள்**

1. இடச்சி
2. இடையர்
3. கள்ளன்
4. கள்ளி
5. பறையர்

**தானியங்களின்பெயர்கள்**

1. எள்
2. சம்பா
3. சென்னல்

### தெய்வப் பெயர்கள்

1. இந்திரன்
2. இந்திராணி
3. கன்னிமார்
4. சந்திரர்
5. சிவன்
6. சூரியன்
7. திருமால்
8. பத்திரகாளி
9. மகாதேவர்
10. வருணபகவான்
11. வாயுபகவான்

### நவத்திரனப் பெயர்கள்

1. தங்கம் (பொன்)
2. பவளம்
3. முத்து

### நிறப்பெயர்கள்

1. கறுப்பு
2. சிவப்பு
3. பச்சை

### பறவைகளின்பெயர்கள்

1. அன்னம்
2. ஆந்தை
3. ஈ
4. கழுகு
5. கதுவாலி
6. காக்கை
7. காடை
8. கொக்கு
9. பிறஹாந்து
10. புறா
11. மயில்

### பொழுதுகளின்பெயர்கள்

1. இரவு
2. நடுச்சாமம்
3. பகல்
4. மாலை

### மரங்களின்பெயர்கள்

1. ஆல்
2. இலுமிச்சம்
3. மாமரம்
4. வாழை

### மருந்துகளின்பெயர்கள்

1. அரைமருந்து
2. கருமருந்து

### மலர்களின்பெயர்கள்

1. தாழை
2. பிச்சி
3. முல்லை

**மலைகளின்பெயர்கள்**

1. உதயகிரி
2. குன்றுமலை
3. கொச்சிமலை
4. குடகுமலை
5. குடமாடிமலை
6. பச்சைமலை

**வசைப்பெயர்கள்**

1. கள்ளன்
2. கள்ளி
3. சண்டாளன்
4. சண்டாளி
5. துஸ்டப்பயல்
6. பாதகன்
7. பாவி
8. மலடி

**வடமொழிப் பெயர்கள்**

1. அனந்தகிஸ்ட்னன்
2. அஸ்த்திரம்
3. அவஸ்த்தை
4. அரிகிஸ்ட்னன்
5. மாஸ்த்தை

**வலைகளின்பெயர்கள்**

1. முசல் வலை
2. முறுக்குவலை

**வனங்களின்பெயர்கள்**

1. நொச்சிவனம்
2. பிச்சி வனம்
3. முல்லை வனம்
4. மூங்கில் வனம்

**விலங்குகளின்பெயர்கள்**

1. ஆடு
2. ஆட்டுக்குட்டி
3. கன்று
4. காளை (விடை)
5. சிங்கம்
6. சிறுத்தை
7. நரிக்குட்டி
8. நாய்
9. பன்றி
10. புலி
11. பூனை
12. மந்தி
13. மாடு
14. மான்
15. முசல்
16. யாளி
17. யானை
18. வேங்கை

# உவமைகள்

1. தீயிலே இட்ட மெழுகது போல் உருகி -
2. காற்றடித்துத் தாழை பூத்தது போல் -
3. சித்திரம் போல் சிறையில் இருந்த தேவகியாள் -
4. வேங்கை போல் சீறிக்கொண்டு -
5. எள்ளுக்குள் எண்ணைபோல் ஏகமாய் இருந்தாள் -
6. மலைக்குமேல் மலைபோல் மண்மேலே மாண்டாளே வாளரக்கி -
7. மலை போல ராச்சதர்கள் -
8. சிங்கம் போல் சீறி எழுந்திருந்தான் -
9. சிங்கம் போல் கர்ச்சனை செய்தான் -

# தமிழ் ஓலைச்சுவடிகள் பாதுகாப்பு மையம்: வெளியீடுகள்

1. மார்க்கண்டேயன் கதைப்பாடல், பக்.520, விலை ரூ.50, பதிப்பு ஆண்டு 1992 (மகா சிவராத்திரியன்று இரவு முழுவதும் உறங்காதிருப்பதற்காகப் படிக்கப்பெறுவது).
2. திருக்குற்றாலப் புராணம், பக்.504, விலை ரூ.50, பதிப்பாண்டு 1993 (கி.பி. 1595 இல் பாடி அரங்கேற்றம் செய்யப்பெற்ற குற்றாலத்திற்குரிய முதல் தலபுராணம்).
3. முப்புராதி அம்மன் கதைப்பாடல், பக்.400, விலை ரூ.49, பதிப்பாண்டு 1994 (முப்புராதி அம்மன் கோயில்களில் பாடப்பெறும் வில்லுப்பாட்டு நூல்).
4. அய்யனார் கதைப்பாடல், பக்.160, விலை ரூ.40, பதிப்பாண்டு 1994 (அய்யனார் – ஐயப்பன் வழிபாட்டை வலியுறுத்தும் வில்லுப்பாட்டுக் கதை).
5. ஓட்டக்காரசுவாமிக் கதைப்பாடல், பக்.120, விலை ரூ.30, பதிப்பாண்டு 1994 (மதுரை மீனாட்சி அம்மன் கோவிலுக்குக் கொடிமரம் வெட்டச் சென்றவர்க்குத் தூது போனவர் கதை).
6. கம்சன் கதைப்பாடல், பக்.140, விலை ரூ.35, பதிப்பாண்டு 1994 (கம்சன் வதைபற்றிய வில்லுப்பாட்டுக் கதை).
7. தமிழில் வசைப்பாடல்கள், பக்.140, விலை ரூ.35 (வசை கவி ஆண்டான் கவிராயன் பற்றிய ஆய்வு நூல்)
8. மாரியம்மன் கதைப்பாடல், பக்.180, விலை ரூ.45, பதிப்பாண்டு 1994 (தமிழகத்தில் மாரியம்மன் வழிபாட்டை உணர்த்தும் வில்லுப்பாட்டுக் கதை)
9. அருஞ்சுனை காத்த அய்யனார் கையேடு, பக்.150, விலை ரூ.45 பதிப்பாண்டு 1994 (திருச்செந்தூர் தேரிக்கருகிலுள்ள அய்யனார் கோயில் வழிகாட்டி நூல்).
10. ஸ்ரீபத்மநாப சுவாமி கதைப்பாடல், பக்.200, விலை ரூ.49, பதிப்பாண்டு 1994 (திருவரங்கத்துப் பெருமாள் திருவனந்தபுரத்தில் பள்ளி கொண்ட வரலாற்று வில்லுப்பாட்டுக் கதை)